# சங்க இலக்கியத்தில் பரிசில்கள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்
தமிழ்ப் பாடத்தில் முனைவர் (Ph.D) பட்டம்
பெறுவதற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்:
**வா.சரவணன்**
(பதிவு எண்: 006502/Ph.D.2/Tamil/Part-Time/July 2008)

நெறியாளர்:
முனைவர் அ.ஜான் பீட்டர்
இணைப் பேராசிரியர்



தமிழ்த்துறை – உயராய்வு மையம்
**திரு.வி.க. அரசு கலைக் கல்லூரி,**
திருவாரூர்–610 003.

ஏப்ரல் 2012

முனைவர் அ.ஜான்பீட்டர்,
எம்.ஏ., எம்.ஏ. (மொழி), எம்.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
திரு.வி.க.அரசு கலைக்கல்லூரி.
திருவாரூர்–610 003.

நாள்: 18-4-2012

# நெறியாளர் சான்றிதழ்

சங்க இலக்கியத்தில் பரிசில்கள் என்னும் தலைப்பில், திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (பிஎச்.டி.) பட்டம் பெறுவதற்காகத் திருவாரூர், திரு.வி.க. அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் என் மேற்பார்வையில் வா.சரவணன் 2008 முதல் 2012 முடிய மேற்கொண்ட ஆய்வின் பயனாக இவ்ஆய்வேடு உருவானதென்றும், இவ்ஆய்வேடு அல்லது இதன் பகுதிகள் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கின்றேன்.




18/04/12

நெறியாளர் கையொப்பம்

முனைவர் அ. ஜான் பீட்டர்
இணைப் பேராசிரியர். தமிழ்த்துறை.
திரு.வி.க. அரசு கலைக் கல்லூரி.
திருவாரூர் - 610 003.

**வா.சரவணன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
திரு.வி.க.அரசு கலைக்கல்லூரி,
திருவாரூர்–610 003.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்தில் பரிசில்கள்** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக திரு.வி.க. அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் **அ.ஜான் பீட்டர்**, அவர்களின் மேற்பார்வையில் உருவான இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியில் படைக்கப்பெற்றது என்றும் இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : திருவாரூர்
நாள் : 18-04-2012

ஆய்வாளர் கையொப்பம்

# நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் பரிசில்கள்** என்னும் பொருளில் ஆய்வு செய்ய வாய்ப்பு தந்த திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், தேர்வு நெறியாளர் ஆகியோருக்கும், திருவாரூர் திரு.வி.க. அரசு கலைக்கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கும் என் நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்து என்னை நன்முறையில் நெறிப்படுத்திய எளிமையும் இனிமையும் நிறைந்த என் அன்பிற்குரிய ஆய்வு நெறியாளர் **முனைவர் அ.ஜான் பீட்டர்** அவர்கள் இவ்வாய்வு சிறக்க நன்முறையில் நட்பு அணுகுமுறையோடு வழிகாட்டினார்கள். அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நல் ஆலோசனைகள் பல வழங்கிய திரு.வி.க. அரசு கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள், நண்பர்கள் ஆகியோருக்கும் பல்லாற்றானும் உதவிய நண்பர்கள் ஆகியோருக்கும் என் அன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வை இனிதே விரைவாகவும் குறித்த காலத்திலும் முடிக்க இறைவனின் அருளும், என் அன்புத்தாயின் அர்ப்பணிப்பும், என் அன்புத் துணைவியாரின் ஊக்கமும் பெரிதும் துணையாய் இருந்ததை நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறேன்.

இவ் ஆய்வேட்டினைக் கணினியில் அழகுற வடிவமைத்து உதவிய **தஞ்சை நாகு கணிப்பொறியகத்தார்க்கும்** என் நன்றி உரியது.

**வா.சரவணன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங்குறு. | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | - | சீவகசிந்தாமணி |
| திருக். | - | திருக்குறள் |
| தெ.ஆ. | - | தெளிவுரையாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலடி. | - | நாலடியார் |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பா.வ. | - | பாடல் வரி |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| மேலது. | - | மேற்கூறிய நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழன்னையை அழகுசெய்யும் அணிகலன்களாகத் திகழ்வன சங்க இலக்கியங்களாகும். தமிழர்தம் வாழ்வியலை அகம், புறம் என்று இரு பகுதியாகப் பாகுபடுத்திக் கூறல் பண்டையோர் கண்டநெறி, காதல் தொடர்பான ஒழுகலாறுகளை அகம் என்றும், போர், வீரம் தொடர்பான அகம் அல்லாத ஒழுலாறுகளைப் புறம் என்றும் எண்ணினர். மிகப் பழைய நாகரிக மக்களின் வாழ்வில் காதல், போர் என்ற இரண்டினையும் மையமாகக் கொண்டு அமைதலை உலக வரலாறு உணர்த்துகிறது.

சங்க காலத்தில் போரும் காதலும் அதிகமாகப் பேசப்பட்டாலும், புலவர்கள் புலமைக்கும், ஆற்றலுக்கும் வேந்தர்கள் மதிப்பளித்துப் பரிசில்கள் வழங்கி சிறப்பித்த மாண்பு எண்ணிப் போற்றற்குரியதாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

சங்க இலக்கியத்தில் பரிசில்கள் என்பது இவ்வாய்வின் தலைப்பாக அமைகிறது.

**ஆய்வின் எல்லை**

சங்க இலக்கியத்தின் எட்டுத்தொகை நூல்களில் பதிற்றுப்பத்து, புறநானூறு முதலிய நூல்களும், பத்துப்பாட்டு நூல்களில் ஆற்றுப்படை நூல்களும் இவ்வாய்வுக்கு எல்லையாக அமைகின்றது.

**ஆய்வின் நோக்கம்**

சங்க இலக்கியத்தில் காணப்படும் பரிசில்கள் பற்றிய செய்திகளை ஆய்வு செய்யும் நோக்கத்துடன் இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. பண்டைய வேந்தர்களின் தமிழ்மொழி இலக்கியப் பற்றினையும் புலவர் பெருமக்களின் அறிவு நுட்பத்தினையும் வறுமையிலும் செம்மையாய் வாழ்ந்த பாங்கினையும் அறிவதே ஆய்வின் நோக்கமாக அமைகின்றது.

**கருதுகோள்**

1. சங்க இலக்கியத்தில் புலவர் - புரவலர் உறவு சிறப்பாகப் பேசப்படுகிறது.
2. சங்க காலத்தில் தமிழ்மொழி இலக்கியப் பற்றிற்காகவும், புலமைத் திறனுக்காகவும், புலவர்களின் வறுமையைப் போக்க வேந்தர்கள் பரிசில்கள் நல்கி வளம் பெறச் செய்தனர்

என்ற இரு கருத்துக்கள் கருதுகோளாகக் கொள்ளப்பட்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

**ஆய்வு மூலம்**

சங்க இலக்கியத்தின் எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரு நூல்களும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்களும் முதன்மைச் சான்றாதாரமாகக் கொள்ளப்படுகிறது. மேலும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் அவற்றின் தொடர்பான அச்சில் வெளிவந்த பிற திறனாய்வு நூல்களும் துணைமைச் சான்றாதாரமாகவும் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வானது பகுப்பாய்வுமுறை விளக்க முறையில் கருத்துக்கள் தொகுத்தும் பகுத்தும் ஆராயப்பட்டுள்ளது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இவ்வாய்வேடானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

முன்னுரை

இயல் 1 சங்க இலக்கியத்தில் புற மரபுக் கூறுகள்

இயல் 2 பரிசிலர்களும் பரிசில்களும்

இயல் 3 வேந்தர் புலவர் உறவுநிலை

இயல் 4 சங்கப் புரவலர் - புலவர்களின் மாண்புகள்

மேற்கூறிய தலைப்புகளில் இவ்வாய்வு அமைக்கப்பட்டுள்ளது. துணைநூற்பட்டியல், பின்னிணைப்புகள் இறுதியில் இணைக்கப்பட உள்ளது.

**சங்க இலக்கியத்தில் புறமரபுக் கூறுகள்**

சங்க இலக்கியத்தில் புற மரபுக் கூறுகள் என்னும் முதல் இயலில் மக்களின் இயல்பு நிலை, பண்பாடு நிறைந்த பழங்காலம், வீரம், கொடை, வாளுழவு செய்யும் வல்லவர்கள், அறவிலை வாணிகம், கல்வி, போர் முறை, போரின் விளைவுகள் என்பன குறித்து ஆராயப்படுகிறது.

**பரிசிலர்களும் பரிசில்களும்**

பரிசிலர்களும் பரிசில்களும் என்னும் இரண்டாவது இயலில் பரிசிலர், புலவர், கலைஞர்கள், விறலியர்கள், பரிசில்கள், மூவேந்தரின் உணவு வகைகள், உடைகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளது.

**வேந்தர் புலவர் உறவு நிலை**

வேந்தர் புலவர் உறவுநிலை எனும் மூன்றாம் இயலில் உறவுநிலை, மார்போடு தழுவல், பண்டைய வேந்தர் புலவரிடையே மலர்ந்த நட்புரிமை, புலவரின் பொதுமைப்பண்பு, தமிழுலகம் அளித்த பெருமை, புவலர் வேந்தரிடத்துப் பூண்டிருந்த அன்பு, வேந்தர் புலவர்களையும் போற்றிய முறை, ஒற்றுமை, வாழ்த்திய தன்மை என்பன சங்க இலக்கியத்தில் எவ்வாறு ஆளப்பட்டுள்ளது என ஆய்ந்துரைக்கப்படுகிறது.

**சங்கப் புரவலர் - புலவரின் மாண்புகள்**

இறுதி இயலான நான்காவது இயலில் மாண்பு. மூவேந்தரும் தமிழும், மன்னனும் மக்களும், புலவராக விளங்கிய வேந்தர்கள், சேர, சோழ, பாண்டியர், புலவரின் குறிக்கோள், பேராண்மை, மக்களின் பிரதிநிதியாகப் புலவன் செயல்பட்டமை, சொல்லாட்சித்திறன், புலமையின் பெருமை, வேந்தரைப் புகழும்போது சமூகக் கோட்பாடுகளைக் குறிப்பிடல் என்பன சங்க இலக்கியத்தில் அமைத்து இலக்கியச் சுவை பயக்கும் திறன் ஆய்ந்துரைக்கப்படுகிறது.

## இயல் 1

# சங்க இலக்கியத்தில் புற மரபுக் கூறுகள்

### 1.0. முன்னுரை

சங்ககால மக்களுடைய வாழ்க்கையைக் காதலும், வீரமும் என வகைப்படுத்தி அக்காலப் புலவர்கள் இலக்கியம் படைத்தனர். அதனை முறையே அகம், புறம் என்று அவர்கள் பாகுபடுத்தினர். அகம் என்பது புறத்தார்க்குப் புலப்படுத்தலாகா இன்பம். புறம் என்பது புறத்தார்க்குப் புலப்படுத்தத் தக்கவை.

சங்கப் புலவர்கள் போரும் அதனால் ஏற்படும் வெற்றிப் புகழும் உண்டாகும் புறவாழ்வைப் பெரிதென வேந்தரை அவ்வப்போது அறிவுறுத்திப் புற வாழ்வின் மற்ற கூறுகளையும், நினைக்கத் தூண்டி அவர்களது கடமைகளையும் நினைவூட்டியுள்ளனர். எட்டுத்தொகை நூல்களில் பதிற்றுப்பத்து மற்றும் புறநானூற்றிலும், பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்களிலும் காணப்படுகின்ற புற மரபுக் கூறுகளை இவ்வியல் ஆராய்கிறது.

### 1.1. சங்க இலக்கியங்கள்

சங்க காலத்தில் தொகுக்கப்பெற்ற இலக்கியங்களே சங்க இலக்கியங்களாகும். அவை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாகும். பண்டைத் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த பல்வேறு புலவர்களால் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு மனநிலைகளில் பல்வேறு இடங்களில் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பே சங்க இலக்கியங்களாகும்.

### 1.1.1. வாழ்வியல்

சங்கப் பாடல்கள் பாடப்பெற்ற காலத்து மக்களின் வாழ்க்கை முறை பழக்க வழக்கங்கள், வாணிபம், கல்வி நிலை, பொருளாதார வளம், நாகரிகம், அரசியல் முதலியவற்றைக் கலையழகுடன் கூறுகின்றன.

சங்க அகப்பாடல்களில் கற்பனைத் தலைவன், தலைவியின் காதலும், புறப்பாடல்களில் நாட்டை ஆளும் தலைவனுடைய சிறந்த வீரச் செயல்களும், கொடைப் பண்பும், குடிமக்களில் சிறந்தவர்களது அரிய செயல்களும் பிறவும் இடம்பெற்றுள்ளன.

> சங்க கால மக்களின் வாழ்வியலைப் பிரதிபலிப்பதே சங்க இலக்கியம். சங்கப் பாடல் தமிழ் இலக்கியப் பேழை அழியாத கற்பனைக் கருவூலம். கருத்து வளமும் கற்பனைச் சிறப்பும் பொருந்திய அழகான பாடல்கள் பலவற்றைப் பெற்று மிளிர்வன[1]

என்ற கூற்று பொருத்தமானதாகும்.

### 1.1.2. சமுதாயத்தின் ஏற்றம்

சமுதாயத்தின் உண்மையான ஏற்றம் அம்மக்களின் வாழ்க்கை முறையைக் கொண்டே தீர்மானிக்கப்படுகிறது. சங்ககாலத் தமிழகத்தைப் பொறுத்தவரை மக்களுடைய வாழ்க்கை முறை அகம் என்னும், புறம் என்னும் இரண்டு கூறுகளாகப் பகுக்கப்பட்டிருக்கிறது.

> சங்கப் பாக்கள் அகமாயினும் சரி, புறமாயினும் சரி சமுதாய உணர்வு மிக்கவை. தனி மாந்தர் ஒழுங்கினை அகமும், தனி மாந்தரின் சேர்க்கையான சமுதாய ஒழுங்கினைப் புறமும் வற்புறுத்தும்[2]

என்பது அகபுற வாழ்வின் வழியாகச் சமுதாயத்தின் ஏற்றத்தினை விளக்குவதாக அமைகிறது.

சங்க இலக்கியங்கள் பண்புகள் நிறைந்த அக்கால மக்களின் வாழ்க்கையை அழகாக எடுத்தியம்புகின்றன. சங்ககால மக்கள் அறநெறிகளோடும், பண்பட்ட செயல்களோடும் நிலைபெற்றிருந்தனர். அறம், வீரம், கொடை, கடமைகளில் தவறாதிருந்தனர் என்பதை இவ்வியல் விளக்குகிறது.

### 1.2. வீரம்

மனித இன வரலாற்றில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வோர் இயல்பு சிறப்பாகப் போற்றப்படுகிறது. இவ் இயல்பினை அவ்வக்கால இலக்கியங்கள்

தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. சங்க காலத்தில் வீரமே முதன்மையாகப் போற்றப்பட்டது. வீரமிக்கவர்களே சிறப்புக் குரியவர்களாக கருதப்பட்டனர்.

பண்டைய வீரச் சமுதாயத்தில் ஒரு தந்தை, தம்முடைய மகன் வீரம் நிரம்பியவனாய் விளங்குவதையே விரும்புவான். ஒருவன் பெறும் உதவிகளையும், அவன் சமுதாயத்திற்குப் பயன்பட வாழ்தலின் இன்றிமையாமையும், மகனைப் பெற்றெடுத்தல் மட்டும் தாயின் கடமையன்று; அவனைச் சமுதாயத்தில் உள்ள சிக்கல்களை எதிர்கொள்ளத் தக்க வகையிலும், பயன்படும் வகையிலும் உடன் வலிமையும், மன வலிமையும் உடையவனாக பாதுகாக்கச் சமுதாயத்திற்கு வழங்குதலும் அவளுடைய கடமையாகும் என்று பொன்முடியார் குறிப்பிடுவதை,

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே[3]

என்னும் வரிகளில் அறிய முடிகின்றன.

பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள், தொழில், விளையாட்டு ஆகியன யாவும் மறப்பண்புடன் திகழ்ந்தன[4]

என்பதனையும் அறியமுடிகின்றது.

### 1.2.1. இளைஞர்களின் வீரம்

இளமையிலேயே மறப்பண்புடன் வளர்க்கப்பட்ட இளைஞர்கள் போரென்றால் பூரித்தெழும் இயல்பினர் எனக் கோவூர்கிழார் சுட்டுவதை,

போர் எனின் புகலும் புனை கழல் மறவர்[5]

என்னும் வரிகளில் காணமுடிகின்றது.

சங்ககாலப் போர் வீரர்கள் மிகுந்த வீரம் செறிந்தவர்கள். 'எரிகோலுக்கு அஞ்சாத அரவு போலத்' திகழ்ந்தவர்கள். முன்வைத்த அடியினைப் பின் வாங்காத மறப்பண்புடையவர்கள் எனச் சங்க இலக்கியம் குறிப்பிடுவதை,

ஒண் பொறிக் கழற்கால் மாறா வாயர்[6]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

சங்ககால மக்களிடையே போரில் புறப்புண் படுதல் இழிவாக எண்ணப்பட்டது. அப்புண்பட்டால் போர்களத்திலே உயிர்விட்டனர்.

போரில் புண்பட்டு வீழ்ந்தபோதும் அப்புண்ணினை ஆற்றிக் கொண்டு உயிர்வாழ வேண்டும் என்று விரும்பாது போரிலேயே மடிந்து புகழெய்த விரும்புவார்கள்[7]

எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

இளைஞர்களிடம் சிறுவயது முதலே சினவுணர்ச்சியும், மறப்பண்பும் இருத்தல் வேண்டும் என்பதைப் புறப்பாடலால் அறியமுடிகிறது. பகைவரைச் சினந்து நோக்கிய கண்களுடன் மகன் பொகுட்டெழினியைக் காண அதியன் வந்ததை,

செறுவர் நோக்கிய கண் தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனவே.[8]

சங்க காலத்தில் குழந்தை பிறந்தவுடன் தந்தை காணுதல் மரபு. அதியமான் போர்க்களத்தில் இருந்து வந்தவுடனே தன் மகனை கண்டு மகிழந்தான் என்பதை மேற்கூறிய செய்யுள் அடிகள் உணர்த்துகின்றன.

விழுப்புண் வீரர்க்கு அடையாளம்: விழுப்புண் படாத நாளைக் குற்றமுடையது என வள்ளுவர் கூறுவதை,

விழுப்புண் படாதநாள் எல்லாம் விழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து[9]

என்னும் குறளின் மூலம் அறியலாம்.

இவ்வாறாக இளைஞர்களின் வீரத் தன்மையைச் சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. புறப்புண் பட்டால் இழிவு என்றும், விழுப்புண் படுவதே சிறப்பு என்று எண்ணி வாழ்ந்தனர். இதனால், இளைஞர்கள் வீர உணர்ச்சி மிக்கவராய்த் திகழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

### 1.2.2. வீரன் தலைமையேற்றல்

*தன் வேந்தன் போரில் பகைவரால் துன்புற்றபோது அதைத் தவிர்க்கத் தானே படைத் தலைமையேற்று நிறையடங்காது வரும் பகைவரின் பெருந்தானையைத் தடுத்து நிறுத்தும் மறத்தன்மை உடையவர்கள் என்பதை,*

குடியும் மன்னும் தானே; கொடி எடுத்து
நிறை அழிந்து எழுதரு தானைக்குச்
சிறையும் தானே தன்இறை விழுமுறினே[10]

*என்ற பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன. இப்பாடலில் 'மறம் கடைக்கூட்டிய குடிநிலை' என வீரனின் குடிச்சிறப்பு உணர்த்தப்பட்டுள்ளது.*

*போர்ப்புலத்தில் தான் ஒருவனாய் நின்று, பகைவர் படையென்னும் வெள்ளத்தைக் 'கற்சிலைபோல்' தடுத்து நிறுத்தியவன் எனத் தொல்காப்பியர் சுட்டுவதை,*

வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமையானும்[11]

*என்னும் நூற்பாவில் காணமுடிகின்றது.*

*வேந்தர்கள், பகைவர் அடையும் துன்பத்தைக் கண்டு அதனையே மேன்மேலும் மிகுவிக்க விரும்பும் நீங்காத ஆண்மையும் நெஞ்சில் நிலையாமை உணர்வினையும் உடையவர்கள் எனப் பதிற்றுப்பத்து குறிப்பிட்டுள்ளது. இதனை,*

காழ் எ·கம் பிடித்து எறிந்து
விழுமத்தின் புகழும் பெயரா ஆண்மை
காஞ்சி சான்ற வயவர் பெரும[12]

*என்னும் செய்யுளால் அறியமுடிகின்றது.*

### 1.2.3. சலிப்படையாத சான்றோர்

*வேந்தர்கள் போரில் தம் உடல் முழுவதும் பகைவர்களது வேல் பாய்ந்தாலும் கூட அதனால் சலிப்படையாது தொடர்ந்து போரிடக் கூடிய மறத்தன்மை உடையவர்கள் என்பதனை,*

தண்ணடை பெறுதலும் உரித்தே - வைந் நுதி

நெடுவேல் பாய்ந்த மார்பின்

மடல் வன்போந்தையின் நிற்குமோர்க்கே[13]

என்னும் பாடல் வரிகளால் தெளிய முடிகின்றது.

வீரம் என்றும், மறவர் என்றும் அழைக்கப்படும் போர் வீரர்களைச் சான்றோர் என்ற சொல்லாலும் சங்க இலக்கியம் குறிக்கிறது. பல்சான்றீர் எனப் பாசறைக் கண் இருப்போரை விளித்துக் கூறுவதால் இதனை அறிய முடிகின்றது.

தேர்தர வந்த சான்றோர்[14]

நோன்புரித் தடக்கைச் சான்றோர்[15]

குறையாத் தானைச் சான்றோர்[16]

இதில் சான்றோர் என்பது வீரரைக் குறித்தது.

> போர் எனக் கேட்பின் ஆர்ப்புடன் எழும் ஆடவரைப் பெற்றிருந்தது. தமிழகம், காற்று சிறிது அசைந்து பறையை அதிரச் செய்தாலும் போரெனக் களம் விரையும் காளையரும் இருந்துள்ளனர். கவசம் அணிந்த மார்பினரான வீரர்கள் தம் மன்னருக்கு உறுதுணையாயிருந்தனர்.[17]

இவ்வாறாக போரில் வேந்தர்களும், வீரர்களும் சலிப்படையாதத் தன்மையை அறியமுடிகின்றது.

### 1.2.4. சிறாரின் வீர உணர்ச்சி

வேந்தர்கள் மற்றும் வீரர்கள் தான் போரில் ஈடுபட்டு வெற்றி எய்தி இன்புற்றனர் என்றில்லாமல் சிறார்களும் வீர உணர்ச்சி பெற வேண்டும் என்பதற்காகவே சிறாரின் தாயர் புலிப்பல் கோத்துச் சிறாரின் கழுத்தில் அணிவித்தனர் எனச் சங்க இலக்கிய வரிகள் குறிப்பிட்டுள்ளன. இதனை,

புலிப்பல் தாலிப் புன்தலைச் சிறாஅர்[18]

புலிப்பல் தாலி - புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி[19]

என்னும் தொடர்கள் வலியுறுத்துகின்றன.

### 1.2.5. வீரத்தின் திறம்

*பிறக்கிடாத வீரம் பெற்ற மறவர் தறுகண் மிக்கவர். அம்பு தைப்பினும் வேல் மார்பில் பாயினும் யானைக்கோடு மார்பைக் குத்திச் சிதைப்பினும் கால்களால் மிதிப்பினும் புறமுதுகு காட்டினாரிலர் எனச் சாத்தந்தையார் கூறுவதை,*

கால மாரியின் அம்பு தைப்பினும்
வயற் கெண்டையின் வேல் பிறழினும்
பொலம்புனை ஓடை அண்ணல் யானை
இலங்குவால் மருப்பின் நுதிமடுத்து ஊன்றினும்
ஓடல் செல்லா பீடுடை யாளர்[20]

*என்னும் செய்யுள் வரிகள் வீரரின் திறன் பற்றிச் சுட்டுகின்றன.*

### 1.2.6. தனிமனித வீரம்

*தனி மனித வீரம் புறப்பாடலில் சிலவிடத்து இடம்பெறுகிறது. வீரன் ஒருவன் யானையை வெட்டி வீழ்த்தினான். யானையின் மீதிருந்து கீழே விழுந்த மற்றொரு வீரன் அவ்வீரனோடு போருற்ற வாளொடு வருதற்கு முன்பே, யானையை வீழ்த்திய வீரன், யானையின் இரு கோடுகளுக்கிடையே வளைந்திருந்த தன் வாளைச் சரிசெய்து கொண்டு பொருதற்குக் காத்திருந்த காட்சி ஓரம்போகியாரால் விளக்கப்பெறுகிறது.*

தமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமம் தாங்கி முன்நின்று எறிந்த
ஒருகை யிரும்பிணர்த் தெயிறு மிறையாகத்
திரிந்த வாய்வாள் திருந்தாத்
தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே[21]

*என்னும் பாடல் வரிகளால் இக்காட்சியை அறியலாம்.*

### 1.2.7. முன்னரும் துணை

*வீரர்க்கு முன்னவரும் துணை நிற்பர். மாற்றாரின் படையுடன் மோதும் முன் நின்று தாக்குவதும், தம் படைக்குப் பயிற்சி அளித்தும், போரிடும்போது எதிர்த்து வரும் படைகளைத் தாக்குவதற்காகத் தம் படையின் பின் படைத் தாங்கி அணை போலத் தடுத்து நிற்பதுமாக இருப்பதால் பிட்டங்கொற்றன் என்பவனுக்கு ஓய்வே*

கிடையாது. பகைக்களத்தில் பொழுது கழிப்பதால் அவனை அரண்மனையில் காண்பதும் புலவர் காரிக் கண்ணனாருக்கு அரிதாயிற்று. இதனை,

நும்படை செல்லுங் காலை அவர்படை
எடுத்தெறி தானை முன்னுரை யெனாஅ
அவர்படை வரும்உங் காலை நும்படைக்
கூழை தாங்கிய அகல் யாற்றுக்
குன்று விலங்கு சிறையி னின்றனை யெனாஅ
அரிதால் பெருமநின் செவ்வி[22]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகின்றது.

### 1.2.8. போரே பொழுதுபோக்கு

சங்க காலத்தில், மக்கள் போர்க்களத்தே தங்கள் வாழ்க்கை கழிவதை விரும்பியதாகத் தெரிகிறது. சோழன் நலங்கிள்ளித் தலைநகரில் அரண்மனைக்கண் தங்குதலை விரும்பாது. புகழ் வேட்கையை விரும்பிப் பாசறைக் கண் தங்கிப் போர் உடற்றுவதைப் பொழுதுபோக்காகக் கொண்டான். இதனைக் குறித்து கோவூர்கிழார்,

நல்இசை வேட்டம் வேண்டி[23]

சிற்றில் நல்தூண் பற்றிநின் மகன்
யாண்டு உளனோ? என வினவுதிஎன் மகன்
யாண்டு உளன் ஆயினும் அறியேன்; ஒரும்
புலி சேர்ந்து போகிய கல் அளைபோல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே[24]

என்று உறுதி செய்வதையும் ஈண்டு எண்ணலாம்.

'ஆடவர்க்கு வினையே உயிர் என்பது போல' அதியமானின் வீரமும் அவனின் ஆளுமையை நிலைநாட்டக் கூடியது. ஔவையார் அதியமானின் வீரத்தைக் கூறும் இடங்களில் புலி சினந்தால் மான் கூட்டம் எதிர் நில்லாது. ஞாயிறு சினந்தால் இருள் நில்லாது, நீ களம் புகுந்தால் பொருநர் இல்லை என கூறியதை,

மறப்புலி உடலின் மான் கணம் உளவோ?

மருளின விசும்பின் மாதிரத்து ஈண்டிய

இருளும் உண்டோ ஞாயிறு சினவின்[25]

என்னும் வரிகளால் உய்த்துணரலாம்.

### 1.2.9. வெற்றிக்குப் பரிசு

போரிலே வெற்றி பெறும் வீரர்க்குப் பரிசும், நிலமும் தருவது பற்றிய சிந்தனையைப் புறப்பாடல்கள் குறிக்கின்றன. மாற்றார் நாட்டைக் கொள்ளையிடுவதில் மன்னனோடு வீரர்கள் பங்கேற்றனர். பகைவரது வயலில் புகுந்து கொள்ளையிட்டனர். பகைவர் நாட்டை எரியூட்டி அழித்தனர். வீரர்களுக்கு நிலம் கிடைத்தது. மன்னன் நிலம் தந்தபோது வளமிக்க மருத நிலத்தைக் கேட்டுப் பெற்றனர். சங்ககாலத்தில் வீரரின் உரிமை நிலை இங்கு நிலைநாட்டப் பெறுவதை அறியமுடிகின்றது.

அரசர்கள் முன்னிலையிலும் அஞ்சா நெஞ்சுடன் அறம் கூறும் அறிவும், திறமும் கொண்ட புலவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர் கோவூர்கிழார். அவர் எழுதிய சோழன் நலங்கிள்ளியைப் பற்றிய பாடல் ஒன்று அம்மன்னனின் புகழைப் பறைசாற்றுகிறது.

'பொருளும் இன்பமும் அறத்திற்குப் பிற்பட்டவையே' அதுபோல சேரனுடைய குடையும், பாண்டியனுடைய குடையும் அறத்திற்குச் சிறந்த சோழனின் வெண்குடைக்குப் பிற்பட்டவையாகும்.

### 1.2.10. வடபுலத்து அரசனின் அச்சம்

சோழன் வேற்று நாட்டிலே நிகழ்ந்த ஆராவாரம் மிகுந்த விழா ஒன்றிலே கலந்து கொண்டு, கீழ்க்கடல் பின்னாக மேற்கடலின் அலைகள் அவன் குதிரை குளம்புகளை மோத நாட்டை வலம் வந்து கொண்டேயிருப்பான் என்னும் அச்சத்தில் நெஞ்சில் துயரம் பெருக, தூங்காமல் விழித்திருக்கும் கண்களைக் கொண்டு வருந்திக் கிடப்பார்கள். வடபுலத்து அரசர்கள் என்கிறார் கோவூர்கிழார். இதனை,

நெஞ்ச நடுங்கு அவலம் பாய

துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே[26]

என்னும் வரிகளால் நலங்கிள்ளியின் வீரத்தை நயம்பட உரைக்கிறார்.

தமிழ் மன்னர்க்கு வடபுலத்து அரசர் அஞ்சுதலை, மருதன் இளநாகனாரின் புறப்பாடலால் அறியமுடிகின்றது. தெய்வங்களைக் கொண்ட நெடிய சிகரங்களையுடைய மலையின் குகையில் தன் சோம்பலைப் போக்கும் நிறைந்த வலிமையை உடைய ஆண்புலி ஊனை விரும்பி உள்ளம் செலுத்த இரையைத் தேடித் தான் கருதிய இடத்திற்கு விரும்பிச் செல்லும். அதுபோல வடபுலத்து மன்னர் வருத்த அவரைக் கொல்லக் கருதி, கொடிய வெம்மையான போர் செய்பவன் எனச் சங்க பாடல்கள் குறிப்பிடுவதை,

அணங்குடை நெடுங் கோட்டு அளையகம் முனைஇ

முணங்கு நிமிர் வயமான் முழுவலி ஒருத்தல்,

ஊன் நசை உள்ளம் துரப்ப, இரை குறித்து

தான் வேண்டு மருங்கின் வேட்டு எழுந்தாங்கு

வடபுல மன்னர் வாட, அடல் குறித்து

இன்னா வெம் போர் இயல் தேர்வழுதி[27]

என்னும் பாடலால் அறியலாம்.

சோழன் கிள்ளி வளவனை மாறோக்கத்து நப்பசலையார் எனும் பெண்பாற் புலவர் அவன் கருவூர்க்கோட்டையை அழித்த ஆண்மையை வியந்து பாராட்டிய பாடலிலிருந்து சிறந்த வீரத்திற்கான வரலாற்றுக் குறிப்பு கிடைக்கின்றது.

இமயத்தில் பொறித்த விற்பொறியையும், நெடிய தேரையும் உடையவனான சேரனையே கிள்ளிவளவன் வென்றான் என்ற செய்தியை,

யாங்கனம் மொழிகோ யானே - ஓங்கிய

வரை அளந்து அறியாப் பொன்படு நெடுங்கோட்டு

இமயம் சூட்டிய ஏம விற்பொறி

மாண் வினை நெடுந்தேர், வானவன் தொலைய[28]

கொற்ற வேந்தர் வரினும் தன்தக

வணங்கார்க்கு ஈகுவன் அல்லன்[30]

என்ற பாடலால் இதனை அறியமுடிகின்றது.

இதில் வீரனின் மகளுடைய அழகிற்கு நெடுவேள் ஆதன் என்பவனுடைய செல்வச் சிறப்புடைய போந்தை என்னும் ஊர் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. கரிய கொம்புகளுடைய வேம்பும், ஆத்தியும், பனையுமாகிய பூக்களைத் தங்கள் தலையில் சூடியவரும், மூவேந்தர்களும் சூடிய மாலையின் பூவினைக் குறிப்பிடுவதை,

போந்தை, வேம்பே, ஆர்என வருஉம்

மாபெருந் தானையர் மலைந்த பூவும்[31]

என்ற வரிகளால் காணமுடிகின்றது. வில்லினைப் பொலிவுப் பெற ஏந்தியவரும் ஆகிய வெற்றியையுடைய மூவேந்தர்களும் மகள் வேண்டித் தன்னிடம் வந்தபோதிலும் ஈதல் இலன் என மறக்குடி மக்கள் கூறும் வழக்கம் பண்டைய காலத்தில் இருந்ததை அறியலாம்.

### 1.2.12. மகளிரின் வீரம்

சங்க காலத்தில் ஆடவர் மட்டுமின்றி மகளிரும் வீரம் பொருந்தியவர்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் போர்க்களத்திற்குச் சென்று போரிட்டதாகத் தெரியவில்லை. குல மகளிர் பாசறைக்குச் செல்லக் கூடாது என்று தொல்காப்பியம் வரையறுத்துள்ளது.

மகளிரின் வீரத்தைப் பற்றிய குறிப்புகள் புறப்பாடல்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. வீரம் பொருந்திய இம்மகளிரைத் தனிக்குடியினராக மறக்குடியினராக உரையாசிரியர்கள் குறித்துள்ளனர். இவர்கள் மூதின் மகளிர் என்று குறிக்கப்பட்டுள்ளனர். இதனைத் தொல்காப்பியம் 'தலை பெயர் நிலை' என்று குறிப்பிடுகிறது.

மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வன் பெயரத்

தாய்தப வருஉந் தலைப்பெயல் நிலையும்[32]

என்று குறிப்பிடுகின்றது.

`அழகான தாழையாடை அசைய ஓடியாடி செம்மையும் கருமையும் கலந்த குன்றி மணிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள் ஒரு பெண். அவளைக் காண்கிறான் ஒரு காளை. தனக்கு அவள் கிடைப்பாளா என்ற ஏக்கம் அவனுக்குள். அருகிலிருந்தவரிடம் கேட்கிறான். பெரிய இடத்து பெண் போல் தோன்றுகிறாள். யார் அவள்? என்று ஆர்வத்தோடு கேட்கிறான் அவன். அவனுக்குப் பதில் அளிப்பதாக ஒரு புலவர் பாடுகிறார். இவள் அண்ணன்மார் படைக்கருவிகளைக் கையில் எடுத்து விட்டால் யாரும் அவர்களுக்கு எதிரே நிற்க மாட்டார்கள். தன்னந்தனி ஒருவனாகக் கரந்தைக் கொடி நிறைந்த விளை வயலிலே நின்று பகைவருடைய யானைப்படைகளை வென்ற பெருவீரனாகிய ஓர் அரசிளங்குமரனுக்கு இவளை மணமுடிக்க இவள் தந்தை நாள் குறித்தாகிவிட்டது. இவளைப்போய் நீ நினைக்கிறாயே! எனக் கூறினான். இதனை,

........................................ தந்தை
இரும்பனை அன்ன பெருங்கை யானை
கரந்தை அம் செறுவின் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந்தனனே[33]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. வீரனின் மகள் அழகும் இளமையும் நிறைந்த தழையால் ஆகிய ஆடையை அணிந்து விளங்கினாள் என்பதை,

அம்பூந் தொடலை அணித்தழை[34]
தழையும், கோதையும், இழையும் என்றிவை
தைஇயினர் மகிழ்ந்து திளைஇ விளையாடும்
மடமொழி ஆயத்தவருள்[35]
காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்து இளை கொண்டன்று தானை[36]

என்னும் பாடல் வரிகளில் மறவர் குலப் பெண்கள் தழையாடை அணிதலையும், அவர்களுடைய செல்வச் சிறப்பினையும் எடுத்து இயம்புவதை அறியமுடிகிறது.

ஒக்கூர் மாசாத்தியார் எனும் பெண்பாற் புலவர் மற்றுமொரு மறக்குடி மகளான வீரத்தாயைத் தம் பாடல் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். பழைய மறக்குடி மகள் ஒருத்தி முன்பு நடந்த போரிலே அவள் தந்தை யானையை வென்று அதன்

அதைக்கேட்ட அவளுடைய கண்கள் மழை பொழிந்தன. அவ்வீரனை ஈன்ற பொழுது பெற்ற இன்பத்தை விட அளவில்லாத இன்பத்தை அவள் பெற்று இன்பக் கண்ணீர் வடித்தாள் என்று பூங்கண் உத்திரையார் பாடியுள்ளார். இதனை,

மீன் உண் கொக்கின் தூவி அன்ன
வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்
நோன் கழை துயல்வரும் வெதிரத்து
வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே[40]

என்னும் பாடல் காட்டுகிறது. இது தாயின் வீர ஓவியம். சங்கப் புறப்பாடல்கள் அனைத்தும் வீரயுகக்காலக் கவிதைகளாய் விளங்கின. ஆதலால் ஆடவரைப் போலவே மகளிரும் வீரம் உடையவராய்த் திகழ்ந்தனர்.

### 1.2.13. வாளுழவு செய்யும் வல்லவர்கள்

'அண்டங்காக்கைச் சிறகு' போன்ற கருமையான விழிகளையும், பெருந்தோளையும் உடைய இந்த இளையவள் மீதா உன் எண்ணம் செல்கிறது? திருமகளும் விரும்பும் பண்பு நலன்களைக் கொண்ட இவள் பெரு மறவர்களுக்கன்றிப் பிறர்க்குக் கிடைக்க மாட்டாள். இவள் தந்தை மருதநிலத் தலைவன். இவன் மகளை மணக்க பெண் கேட்டு வந்து, இவன் மறுத்து அதனால் சினமடைந்த மூவேந்தர்களுக்கும், இவருக்கும் நடந்த போர்கள் மிகப்பல.

போரிலே வெற்றி பெற்று இவளை அடைவது அவ்வளவு எளிதான காரியம் அன்று. இவள் தந்தை மட்டுமா இவள் தமையரும் சிறந்த போர் மறவர்கள். அவர்கள் கொன்று குவித்த பகைவர்கள் நெற்போர் போலக் குவியல் குவியலாகிக் கிடக்க வைக்கோல் போர்களை மிதிக்கும் எருதுகளைப் போல இவர்களுடைய யானைகள் அந்தச் சடலங்களை மிதித்துச் செல்லும். இவ்வாறு வாள் கொண்டு நாளும் போர்க்களத்தில் வாளுழவு செய்ய வல்லவர்கள் இவளுடைய தமையன்மார்கள் என்கிறார் புலவர்.

................................ வேந்தன்

பெறா அமையின் பேர் அமர் செய்தலின்

கழிபிணம் பிறங்கு போர்பு அழிகளிறு எருதா

வாள்தக வைகலும் உழக்கும்

மாட்சியவர் இவள் தன்னைமாரே[41]

என்னும் பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றன.

## 1.2.14. வீரமே புகழ்

வீரர்களுக்கு வீரமே புகழ் வாழ்வை அளித்திருக்கிறது. வீரர்களை மறவர் என்றும் வயவர் என்றும், மேலும் பல்வேறு சொற்களால் குறிப்பிடுவதைச் சங்கப்புறப் பாடல்களால் அறியமுடிகின்றது.

'அடர்ந்த பிடரிமயிருடைய கழுத்தும் வளைந்த கரிய கால் நகங்களையும், உடைய சிங்கங்கள் உலவித் திரியும் மலைச்சாரலில் கூட்டம் கூட்டமாக வாழும் மற்ற மிருகங்கள் அஞ்சி நடுங்கிக் காட்டுக்குள் மறைந்து வாழுவதைப்போல' முரசுகள் முழங்கும். பெரிய நகரங்களில் அரண்மனைக்குள் இருந்தாலும் நெடுஞ்சேரலாதனாகிய உன்னை எதிர்த்த எத்திசையும் உள்ள பகை மன்னர்கள் அமைதியாகப் பஞ்சணையில் படுத்தும் துயில் கொள்ளாது பயத்தால் நடுங்கி கொண்டிருந்தனர். அதற்குக் காரணமாக இருப்பது வீரம் செறிந்த வெற்றிப் புகழேயாகும் என்பதனை,

தார் அணி எருத்தின் வாரல் வள்உகிர்

அரிமான் வழங்கும் சாரல் பிறமான்

தோடு கொள் இனநிரை நெஞ்சு அதிர்ந்தாங்கு

முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது

மாதிரம் பனிக்கும் மறம் வீரம் பல்புகழ்[42]

என்ற வரிகள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வீரம் செறிந்த வெற்றி நிலையைச் சுட்டுகிறது.

வீர வாழ்வு வாழ்ந்து குறைவற இன்பம் துய்த்த காலம் சங்க காலமாகும். காதலுக்கும் வீரத்திற்கும் சிறப்பளித்த அக்காலத்தில் வெற்றி அல்லது வீர மரணம்

என்பதையே நீடு புகழாக்கிப் பீடுற்றனர் மன்னர்கள். புறநானூற்றில் வீரமே அடிப்படையான பாடு பொருள். இதனடிப்படையில் போர் உடற்றுவதும், காதல் இன்பம் துய்ப்பதும் மதுமாந்திக் களிப்பதுமாகிய வினைகளில் பொழுது கழித்ததை உலக வரலாற்றில் வீரயுகம் என அழைத்தனர்.

இவ்வாறாக, சங்கப் புறப் பாடல்களில் வீரமே பொருளாகக் காட்சியளிப்பதை நாம் காணலாம்.

### 1.3. கொடை

சங்ககால வேந்தரிடத்தும், குறுநில மன்னரிடத்தும் கொடைப்பண்பு உயிர்ப் பண்பாக மிளிர்வதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிற மன்னர்கள் தங்களது கொடைத்திறத்தாலேயே பெரிதும் புகழப்படுகின்றனர். சிலர் தக்க பரிசில்களைத் தரவில்லையென்றாலும், அஃது அவர்களிடம் மிகுந்த நிலையில் இல்லாமையினாலேயாகும். சங்க வேந்தர்கள் தங்களைச் சார்ந்தோர் விரும்புகின்றனவற்றை அவர்கள் கூறாமலேயே தாமே கொடுத்து மகிழ்ந்தவர்கள்.

### 1.3.1. கொடையின் வகைகள்

சங்ககாலத்தரசர் அறம் நோக்கியும், கலை வளர்ச்சி பற்றியும் ஊழியப் பாராட்டாகவும், வினையூக்கம் பொருட்டும் பல்வேறு கொடை நிகழ்த்தி வந்தனர். அவை 'உண்டிக்கொடை, பொற்கொடை, ஊர்திக் கொடை, விலங்குக்கொடை, சின்னக்கொடை, பெயர்க்கொடை, நிலக்கொடை, மகற்கொடை, ஆட்சிக்கொடை, உண்டிக்கொடை'[43] என ஒன்பான் வகைப்படும்.

### 1.3.2. உண்டிக்கொடை

பார்ப்பனர்க்கு நாள்தோறும் உணவளிக்கும்படி ஆங்காங்கு கோயில்களிலும், மடங்களிலும், ஊட்டுப்புரைகளிலும், நிதியும், மானியமும் விட்டிருந்தது உண்டிக் கொடையாகும்.

அசையும் தலையாட்டத்தினையுடைய குதிரைகளைக் கொண்ட பாண்டவர் ஐவர். அவருடன் பனகத்து நாடு கையகப்படுத்தியவரும், பொன்னாலாகிய தும்பைப் பூக்கள் அணிந்தவருமான நூற்றுவராகிய துரியோதனன் முதலான கௌவரர் போரில் ஈடுபட்டுக் களத்தில் அழிந்தனர். அத்தன்மையான போர் முடியும் வரை இருபெரும் படைகட்கும் பெருஞ்சோறாகிய உணவை அளவில்லாது அளித்தவன் உதியன் சேரலாதன் என்பதை,

அலங்கு உளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலம் தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈர் ஐம்பதின் மரும் பொருது களத்து ஒழிய
பெருஞ் சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்[44]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. இவ்வாறு பெருஞ்சோறு அளித்ததால் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் எனப் பெற்றான். இதனை,

உதியஞ்சேரல் பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை[45]

என்னும் வரியால் அறியலாம். இவ்வாறு பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் பாரதப் போர்ப் படைகள் இரண்டிற்கும் பதினெட்டு நாளும் பெருஞ்சோறு வழங்கியதும் உண்டிக் கொடையின் பாற்படும்.

### 1.3.3. பொற்கொடை

புலவர்க்களித்த பல்லாயிரக்கணக்கான பொற்காசும், பாணர்க்களித்த பொற்றாமரைப் பூவும், பாடினியர்க்கும், விறலியர்க்கும் அளித்த பொன்னரி மாலையும், ஆடல் பாடல் அரங்கேறிய பாணர்க்கும், கணிகையர்க்கும் அளித்த ஆயிரத் தெண்கலஞ்சு பொன்னும் பொற்கொடையாகும். இதனை,

முட்டில் பாணரும் ஆடியன் மகளிரும்
எட்தொடு புணர்ந்தவரா யிரம்பொன் பெறுப[46]

என்பது அடியார்க்கு நல்லார் உரை மேற்கோளாக அமைந்த அடிகளாகும். வெற்றி விழாத் தொடர்பாக மறையோர்க் களித்த துலாபாரம், சேரன் செங்குட்டுவன் மாடல மறையோனுக்களித்த துலாபாரம் 50 துலாம் (375 பவுண்டு) பொன்னாகும். இவ்வாறு ஆள்நிறைப் பொன்னும் இரணிய கருப்பம் என்னும் பொற்குடமும் கொடையாகும்.

### 1.3.4. ஊர்திக்கொடை

புலவர், பாணர், கூத்தர் முதலியோர்க்களித்த குதிரை, யானை, தேர் என்பவை ஊர்திக் கொடையாகும்.

### 1.3.5. விலங்குக்கொடை

மறையோர்க்கு அவ்வப்போது அளித்த ஆவாயிரம் விலங்குக் கொடையாகும்.

### 1.3.6. சின்னக் கொடை

அவைக்களத் தலைமைப் புலவர்களித்த குடை, கொடி, சிவிகை முதலிய விருதுகளும், ஆடல் பாடல் அரங்கேறியவர்க்களித்த தலைக்கோலும், வணிகத் தலைவர்களித்த எட்டிப் பூவும், படைத்தலைவர்க்கு அளித்த ஏனாதி மோதிரமும் அமைச்சர்களித்த காவிதிப் பூவும் சின்னக் கொடையாகும்.

### 1.3.7. பெயர்க்கொடை

உழுவித்துண்ணும் வேளாளர்க்கு அளித்த வேள்அரக பட்டங்களும், வணிகர் தலைவர்க்களித்த எட்டிப் பட்டமும், ஆடல் பாடல் அரங்கேறியவர்க்களித்த தலைக்கோற்பட்டமும், அமைச்சர்க்களித்த காவிதிப் பட்டமும், படைத் தலைவர்களித்த ஏனாதி பட்டமும் பலவகை அரசியல் அதிகாரிகளுக்கு அளித்த அரையன் (ராயன்), மாவரையன் (மாராயன்), பேரரையன், விழுப்பேரரையன் மூவேந்த வேளாண் முதலிய பட்டங்களும், சிற்றரசர்க்களித்த பிள்ளை மக்கள் நாயனார் என்னும் பட்டங்களும் பெயர்க் கொடையாகும்.

### 1.3.8. நிலக்கொடை

அரசியல் வினைஞர், பொருநர் (போர் மறவர்), பொதுநலவூழியர், புலவர், கலைஞர், வணிகர், மறையோர், அறச்சாலை, மடம், கோயில் முதலியோர்க்கு அளித்த நிலம் நிலக்கொடையாகும்.

### 1.3.9. மகற்கொடை

சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், பரணர்க்குத் தன் மகன் குட்டுவன் சேரலைக் கொடுத்தது மகற்கொடையாகும். மகற்கொடையாவது மகனை மாணவனாகக் கொடுத்தலாகும்.

### 1.3.10. ஆட்சிக்கொடை

வேந்தன் தனது அரசாட்சியே கொடையாக அளித்தலே ஆட்சிக் கொடையாகும். தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தினைப் பாடிய அரிசில் கிழார்க்குத் தன் அரியணையைக் கொடுத்தது ஆட்சிக் கொடையாகும்.

### 1.3.11. கொடை அளிக்கும் முறை

கொடை அளிப்பதில் மழை போன்று விளங்குவது சிறப்புடையதாகும். இவர் வேண்டியவர், இவர் வேண்டாதவர் என்று எண்ணிப் பாராமல் எவ்விடத்தும் சென்று எவர்க்கும் 'முகில் மழை பொழிந்து உதவும்' அதுபோல் வள்ளல்களும் வறியவர் இருக்கும் இடங்களைத் தாமே தேடிச் சென்று உதவி செய்வர் எனக் கபிலர் கட்டுவதை,

பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே[47]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

'இந்த உலகத்தார் தமக்கு உதவும் மழைக்கு என்ன கைம்மாறு செய்கின்றனர்?' மழை போன்றவர் செய்யும் உதவிகளும் கைம்மாறு வேண்டாதவை என வள்ளுவர் குறிப்பிடுவதை,

கைம்மாறு வேண்டா கடம்பாடு மாரிமாட்டு
என் ஆற்றும் கொல்லோ உலகு[48]

என்னும் குறளின் வழிக் காணலாம்.

'கொடிய வெயில் சுட்டு எரித்தலால் வெம்பிப் போய்க் கிடக்கும் காட்டிற்கு வளமான மழை பொழிவது போன்றது' பசித்துயர்க்கு ஆற்றாமல் அல்லல்படுபவரைத் தேடிச் சென்று அவர்க்கு உணவு வழங்குவது சங்க கால மக்களின் வழக்கமாக இருந்தது என்பதனை,

வெயில் சுட வெம்கிய வேய்கரி கானத்துக்
கருவி மாமழை தோன்றிய தென்னப்
பசிதின வருந்திய பைதல் மாக்கட்கு
அமுத சுரபியோடு ஆயிழை தோன்றி[49]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகின்றது.

'மலையிடைப் பொழியப்பெற்ற மழைநீர் ஆறாகப் பெருக்கெடுத்து வந்து ஆங்காங்கு இருப்பாரை வாழச் செய்யும்.' அதுபோல் தலையாய வள்ளல்கள் வேண்டியவர்க்கு வேண்டும் பொருள்களை அவர் இருக்கும் இடம் தேடிப் போய்த் தந்து உதவுவர். இதனை,

வள்ளல் கைத்தலம் மாந்தரின் மால்வரை
கொள்கை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ள மில்லவர்க்கு ஊர்தோறும் உய்த்துராய்
வெள்ளம் நாடும டுத்துவி ரைந்ததே[50]

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

### 1.3.12. புரவலரை மழையோடு ஒப்பிடுதல்

நீரற்ற குளம், நெடிய வயல், உவர் நிலம் ஆகிய எவ்விடத்துச் சென்றும் வழங்கும் இயல்பினது மேகம். அவ்வாறே இன்னவர் என எண்ணிப் பார்க்காமல் எவருக்கும் வழங்குவது வள்ளல்களின் இயல்பு எனப் பரணர் குறிப்பிடுவதை,

அறுகுளத்து உகுத்தும் அகல் வயல் பொழிந்தும்
உறும் இடத்து உதவாது உவர் நிலம் ஊட்டியும்,
வரையா மரபின் மாரி போல
கடாஅ யானைக் கழற் காற் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது
படைமடம் படான் பிறர் படை மயக்குறினே[51]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

'மழையானது இன்னார் எனப் பாராது எல்லோருக்கும் வழங்குவது போல' புரவலரும் எல்லோருக்கும் கொடையளிப்பதில் வள்ளலாய்த் திகழ்கின்றனர். இதனால் புரவலரை மழையோடு ஒப்பிடுவது சிறப்பாகும்.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை[52]

எனும் குறளில் உண்பவர்க்குத் தக்க உணவுப் பொருள்களை விளைவித்துத் தருவதோடு பருகுவார்க்குத் தானும் ஓர் உணவாக இருப்பது மழையாகும் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

முன்னாள் பெய்தேன் என்றும் பின்னாள் பெய்வதை மறுக்காமல் பெய்யும் மழை, முன்னை விளைந்தேன் என்று பின்னை விளைய மறுக்காமல் விளையும் நிலம். இவற்றைப் போல் சேரமான் இளஞ்சேட் சென்னி முன்னர்த் தந்தேன் எனப் பின்னைத் தர மறுக்காமல் தருவர் வண்மையாளர் என ஊன்பொதி பசுங்குடையார் கூறுவதை,

கழிந்தது பொழிந்தது என வான் கண்மாறினும்
தொல்லாது விளைந்து என நிலம் வளம் சுரப்பினும்
எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை
இன்னும் தம்என எம்மனோர் இரப்பின்
முன்னம் கொண்டிர் என நும்மனோர் மறுத்தல்
இன்னாது அம்ம; இயல்தேர் அண்ணல்[53]

மறாஅ விளையுள் அறாஅ யாணர்[54]

என்னும் வரிகளால் அறியலாம்.

### 1.3.13. உள்ளவற்றை வழங்கும் உயர்வாளன்

'நிரம்ப மழை பெய்த முகில் தூய பஞ்சைப் போல்' நிறம் வெளுப்பாகி உயர்ந்து சென்ற மலை முகட்டை அடையும். அதுபோல் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தம்மிடம் உள்ளவற்றை வழங்கிய வள்ளல்கள் தம் நிலையில் மேலும் உயர்ந்து செல்வரே அன்றித் தாழார். இதனை,

வாரார் ஆயினும் இரவலர் வேண்டித்
தேரில் தந்தவர்க்கு ஆர்பதம் நல்கும்

நகைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்
வேண்டுவ அளவையுள் யாண்டுபல கழியப்
பெய்துபுறந்த தந்து பொங்கல் ஆடி
விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்
சென்றா லியரோ பெரும[55]

என்னும் வரிகள் விளக்குகின்றன.

மழையானது உலகத்து உயிர்கள் அனைத்தும் வாழுமாறு, ஆறு, கால்வாய்கள் பலவற்றைக் கொண்டு நிலமெங்கும் பரவி நாட்டை வளப்படுத்தும். நீர்பெருக்கு வற்றிப்போன நாளிலும் ஊற்று நீரால் பயிர்களை வளர்க்கும். அதுபோல் முன்னே செய்த உதவியும் பயன்படாமல் ஒழிந்தாலும் உயிர்ந்த பெருமக்கள் பின்னும்போய் இயன்ற அளவும் உதவி செய்வோர்.

மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவீன்று
பன்னீரால் கால்புனல் பரந்தூட்டி இறந்தபின்
சின்னீரால் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போல்[56]

என்ற பாடல் வரிகள் இக்கருத்தை விளக்குகின்றன.

### 1.3.14. கொடையளிப்பதில் உதவி

யானையின் கொம்புகளுக்கு இடையே வைக்கப் பெற்ற கவளம் தவறாமல் அதன் வாய்க்குள் செல்லும். அதுபோல் உள்ளத்தால் உயர்ந்த வள்ளல்கள் கொடையும் தவறாமல் கிடைக்கும். இதனை,

.................................. களிறுதன்
கோட்டு இடை வைத்த கவளம் போலக்
கையகத்த; அது பொய் ஆகாதே[57]

என்ற பாடல் வரிகள், தவறாது கிடைக்கும் கொடையைப் பற்றிப் பேசுகின்றன.

### 1.3.15. கொடைப் பண்பு

புரவலர்கள் எத்தனை முறை தேடிச் சென்றாலும் முதல் நாளேப்போன்று வரவேற்று பரிசிலருக்கு வேண்டியவற்றை அளிக்கும் கொடைப் பண்பை அறியலாம்.

பன்னாள் நிற்பினும் சேர்ந்தனிர் செலினும்[58]

ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்
பலநாள் வந்து[59]
பெருவரை அடுக்கத்துக் கிழவன் என்றும்
அன்றை அன்ன நட்பினன்[60]

அன்றை அன்ன விருப்போடு[61]

தலைநா ளனன் பேணலன்[62]

தண்டாக் காதலும் தலைநாட் போன்மே[63]

தலைநா ளன்ன புகலொடு வழி சிறந்து,
பலநாள் நிற்பினும்[64]

என வரும் பகுதிகள் ஒப்புநோக்கத்தக்கன.

### 1.3.16. வள்ளலின் குணம்

'நறுமணமலர் ஆயினும் சரி, மணமிலா இதழ் ஆயினும் சரி, மலர்ந்தது ஆயினும் சரி முகையாயினும் சரி. அவற்றைத் தெய்வங்கள் வெறுக்காமல் நிற்கும்'. அதுபோல் அருள்மிக்க வள்ளல்களும் தம்மிடம் வேண்டி வந்தவர் அறிவுடையவர் அன்றி அறிவிலா மடவரே எனினும் உதவத் தவறார் என்பதனை,

நல்லவும் தீயவும் அல்லகுவி இணர்ப்
புல் இலை எருக்கம் ஆயினும், உடையவை
கடவுள் பேணேம் என்னா; ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்,
கடவன் பாரி கை வண்மையே[65]

இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே[66]

என்னும் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

நீர்ச்கழியில் அகப்பட்டு ஆழ்ந்து அலைக்கழிவாரைக் கண்டு உள்ளம் படைத்தவர் ஓடிப்போய் உதவுவர். அதுபோல் தம்மைத் தேடி வருவாரை எதிர்நோக்கி

இருந்து ஓடிப்போய் உதவுதல் வேண்டும். இவ்வாறு வள்ளல்களின் இயல்பு இருக்க வேண்டும் என்பதை,

காடுகாத் துறையும் கானவர் உளரே
நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்
புனற்படு பூசலின் விரைந்து வல்எய்தி
உண்டற் கினிய பழனும் கண்டோர்
மலைதற்கு இனிய பூவும் காட்டி
ஊறு நிரம்பிய ஆறுஅவர் முந்துறு
தும்மின் நெஞ்சத் தவலம் வீட
இம்மென் கடும்போடு இனியர் ஆகுவீர்[67]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

நிழலே காணப்பெறாத நெடுவழியிலே நிற்கும் ஒரு நிழல் மரம் மிகப் பயன்படுவதாகும். அம்மரம் ஈயாச் செல்வர் இடையே நிற்கும் ஈகையாளன் ஒருவனுக்கு ஒப்பானது எனக் கபிலர் குறிப்பிடுவதை,

நிழல் இல்நீள் இடைத் தனி மரம்போல
பனை கெழு வேந்தரை இறந்தும்
இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே[68]

என்னும் வரிகளால் அறியலாம்.

பயன்மரம் இடம் சிறிதும் இல்லாமல் பூத்து அப்பூக்கள் வீணாகாமல் காய்த்து நன்மை செய்யும். அதன் கொடை, வாழ்வியல், செல்வம் ஆகியவற்றைத் தெளிவாக உணர்த்த பெருமக்கள் அம்மரம்போல் அனைவருக்கும் உள்ளமுவந்த கொடை வழங்கி வாழ்வதை,

உணர்ந்தவர் ஈகைபோல் இணர் ஊழ்த்த மரம்[69]

என்னும் அடிகளில் காணமுடிகின்றது.

முயன்று தேடிய பொருளைப் பிறர்க்கு வழங்கி எஞ்சியதை உண்ணும் தன்மை உடையவர்கள்; அயரா உழைப்பால் விளைந்த தானிய மணியை இரவலர்களுக்கும் வழங்கும் பெருங்குணம் கொண்டவர்கள் புரவலர்கள் என்பதை,

உழுது நோன் பகடு அழி தின்றாங்கு
நல் அமிழ்து ஆக, நீ நயந்து உண்ணும் நறவே[70]

என்னும் வரிகளால் தெளிய முடிகின்றது.

'மறுமுறை வா' என்று கூறாமல் கேட்டவுடன் பொருளைத் தரும் புரவலர்கள் 'மரத்தின் பொந்திலே கிளி சேர்த்து வைக்கப்பெற்ற தினைக் கதிர்போல்' தவறாமல் பயன் அளிப்பவர்கள் என்பதை,

கிளி மரீஇய வியன் புனத்து
மரன் அணி பெருங் குரல் அனையன்[71]

என்ற வரிகள் உணர்த்துகின்றன. வருந்தி முயன்று கொய்ய வேண்டாமல் தானே வளைந்து நின்று பூவும் கனியும் வழங்கும் மரத்தையும் கொடியையும் போன்றவர் வேண்டியவர்க்கு வேண்டியவற்றை அவர் இடத்திற்குத் தாமே தேடிச் சென்று உதவும் உள்ளம் படைத்தவர் என்பதை,

பாடல்சால் சிறப்பில் சினையளவும் சுனையளவும்
நாடினர் செயல் வேண்டா நயந்துதாம் கொடுப்ப போல
தோடவீழ் கமழ்கண்ணி தையுபு பனைவார்கண்
தோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெற[72]

என்ற வரிகளால் காணமுடிகின்றது. சங்க காலத்தில் இரவலர்களின் இடம் தேடி சென்று பொருளை வழங்கி இன்புறுவது புரவலர்களின் வழக்கமாக இருந்தது. இதுவே வள்ளலின் குணமாக விளங்கியது என்பது பெறலாகிறது.

### 1.3.17. அறவிலை வாணிகம்

இம்மையில் செய்த உதவிகள் மறுமைக்கு உதவும் என்று எண்ணி நல்லவர்கள் கொடைபுரியார். அவ்வாறு புரிவாரேயானால் அது கொடை ஆகாது, வாணிகமே அதிலும் அதனை அறவிலை வாணிகம் என்றே சொல்லலாம் என்பதனை,

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்
பிறரும் சான்றோர் சென்ற நெறிஎன
ஆங்குப் பட்டன்று அவன் கைவண்மையே[73]

மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின்று அவன்கை வண்மையே[74]

ஏற்ற கை மாற்றாமையென்னாலும் தாம் வரையாது
ஆற்றாதார்க்கு ஈவதாம் ஆண்கடன்[75]

இம்மையாற் செய்ததை இம்மையேயாம் போலும்
உம்மையே யாமென்பார் ஓரார்கண்[76]

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகைமற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து[77]

வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்[78]

ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகிர்வோர்[79]

*எனச் சங்க இலக்கிய பாடல் அடிகள் கூறும் கூற்றுகள் ஒப்புநோக்கத்தக்கன.*

### 1.3.18. வறுமையிலும் கொடை வாழ்வு

*`மனைவிக்கு விளக்கு ஆகிய மங்கல மடந்தை வறுமை போழ்தினும் செம்மையாக நின்று உதவுவாள்.' அதுபோல் பேருள்ளம் உடையவனும்தான் வறுமையுற்ற நாளில் தன்னிடமுள்ள மிகக்குறைந்த உணவையும் பலர்க்கும் பகுத்துத் தந்து உண்ணச்செய்வான். இதனை,*

........................................ உள்ளது
தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்
நீள் நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போல சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்[80]

*என்ற வரிகள் காட்டுகின்றன.*

*கடல்நீர் தெளிவுடையதாக இருந்தாலும் நீர் வேட்கை உடையவர்கள் பருக இயலாது. ஆடும், மாடும், பறவையும், பிறவும் சென்று நீர் பருகுதலால் கலங்கிச் சோறொடு கிடப்பது ஆயினும் வறிய நீர்க்கேணியையே விரும்பிச் சென்று பருகுவர்.*

அதுபோல மிகுந்த செல்வம் படைத்தவர் எனினும் அவரைத் தேடிச் செல்லாமல் கொடைத் தன்மையுடையார் எளியராக இருந்தாலும் அவரிடமே வறுமையாளர் செல்வர். இதனை,

தெண்நீர்ப் பரப்பின் இமிழ் திரைப் பெருங்கடல்
உண்ணார் ஆகுப நீர் வேட்டோரே
ஆவும் மாவும் சென்று உண கலங்கி
சேறோடு பட்ட சிறுமைத்து ஆயினும்
உண்நீர் மருங்கின் அதர்பல ஆகும்[81]

என்ற வரிகள் விளக்குகின்றன.

அலைமிக்க கடற்கரை அடுத்துச் சென்றாலும் நீர் வேட்கை உடையவர் கடல்நீரைப் பருகாமல் ஊற்றையே தேடுவர். அதுபோல் பெருஞ்செல்வர் தம் அருகில் இருப்பார் எனினும் அவரை நெருங்காமல் தொலைவில் இருக்கும் கொடையாளர்களையே இரவலர் தேடிச் செல்வர் என,

திரை பொரு முந்நீர்க் கரை நணிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்
சில் நீர் வினவுவர், மாந்தர்; அதுபோல்
அரசர் உழையராகவும் புரை தபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர்[82]

என்னும் சங்கப் பாடல் வரிகள் சுட்டுவதைக் காணலாம்.

### 1.3.19. கொடை பெற்றவரின் ஆரவாரம்

'விழாக் கொண்ட நகரம் பெருமகிழ்ச்சியும் ஆரவாரமும் கொள்ளும்.' அதுபோல் வள்ளல்களிடம் சென்று பரிசு பெற்றவர் வாழ்வும், மகிழ்வும் ஆரவாரமும் உடையதாக விளங்குகிறது. இதனை,

விழலின் அன்ன நின் கலிமகி ழானே[83]

என்ற அடிகளால் அறியமுடிகின்றன.

சுவைமிக்க பழம் பழுத்து வளம் பெருகிய மரத்திலே பறவையின் ஆரவாரம் மிகும். அதுபோல் கொடை நலம் உடைய செல்வர் மாளிகையில் எப்பொழுதும் ஆரவார ஒலி கேட்டுக்கொண்டே இருந்தது. இதனை,

யாணர்ப் பழு மரம் புள் இமிழ்ந்தன்ன
ஊண் ஒலி அரவம் தானும் கேட்கும்
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வன்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில் ஒழுக்கு ஏய்ப்ப
சோறுடைக் கையர் வீறு வீறு இயங்கம்
இருங் கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும் தெற்றென;
பசிப்பிணி மருத்துவன் இல்லம்[84]

கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடி[85]

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன் சிறுகுடி[86]

பண்ணன் சிறுகுடி வடா அது தீநீர்க் கான்யாறு[87]

கழற்கால் பண்ணன் காவிரி வடவயின் நிழற்கயம்[88]

பாணர் ஆர்த்தவும் பரிசிலர் ஓம்பவும்
ஊணொலி அரவமொடு கைதூவாளே[89]

பழு மரம் உள்ளிய பறவை போல[90]

*என வரும் பாடலடிகள் கொடை பெறுபவரும் பெற்றவரும் தங்களுள் மகிழ்ந்து ஆரவார ஒலியை எழுப்பினர் என்பதை விளக்குகின்றன.*

### 1.3.20. புலவரை நாடும் இரவலர்

*`மலையில் விழுந்து மழைத்துளிகள் ஒன்று சேர்ந்து கடலை நோக்கி செல்லும்' அதுபோல வறிய இரவலர் கூட்டம் வறுமை தீர்க்க வல்ல புரவலரை நோக்கிச் சென்றனர் என்பதனை,*

மலையின் இழிந்து, மாக்கடல் நோக்கி
நில வரை இழிதரும் பல்யாறு போல
புலவர் எல்லாம் நின் நோக்கினரே[91]

*என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

*பாழூரில் தோன்றிய பச்சிள நெடுஞ்சியின் மஞ்சள் பூ எழுந்து வரும் செங்கதிரை நோக்கியே நிற்கும். அதுபோல் வறியவர் கூட்டம் கொடையாளர் கைகளையே நோக்கி காத்து நின்று பொருளைப் பெற்று இன்புற்று வாழ்ந்தனர். இதனை,*

பாழ்ஊர் நெருஞ்சிப் பசலை வான்பூ
ஏர்தரு சுடரின் எதிர்கொண்டா அங்கு
இலம்படு புலவர் மண்டை விளங்கு புகழ்க்
கொண் பெருங் கானத்துக் கிழவன்
தண்தார் அகலம் நோக்கின, மலர்ந்தே[92]

*என்ற பாடலடிகளால் அறியமுடிகின்றது.*

*மகளிர் ஊடல் கொள்ளுங்கால் அவர்கள் பார்வை ஆடவர்க்கு அச்சம் உண்டாக்கும். அதனினும் இரவலர் வறுமைக்குரல் வள்ளன்மையாளர்க்கு அச்சம் உண்டாக்கும். ஊடலைத் தீர்க்க ஆடவர் முந்துவது போலவே, வறுமைத் துயரை ஒழிக்க வள்ளன்மையாளன் முயற்சி செய்து பொருளை நல்கினர் என்பதை,*

ஒண்ணுதல் மகளிர் துணித்த கண்ணினும்
இரவலர் புன்கண் அஞ்சும்
புரவெதிர் கொள்வன்[93]

*என்ற வரிகளால் அறியலாம்.*

### 1.3.21. இரவலரின் நிலை

*ஈவதையே தொழிலாகக் கொண்ட இரக்கமிக்க வள்ளல்கள் இறந்து போன நிலைமையில் கலைஞர்களின் வாழ்வு 'பூவில்லாத தலைப்போலப்' பொலிவுற்றதாக அமைந்திருந்தது என்பதனை,*

எவ்வி இழந்து வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழிய நெஞ்சே[94]

*என்ற வரிகளால் அறியமுடிகிறது.*

*நாளும் உதவி வாழும் வள்ளலை இரவலர் தேடிச் செல்ல அவன் இறந்தான் என்னும் சொல்லைக் கேட்பது. 'சோறு அடப்பெற்ற பானையைத் திறந்து பார்க்கத் தீக்கிளம்பியது' போன்றதாக இரவலர்கள் தவித்து வாழ்ந்தனர் எண்பதை,*

நச்சி இருந்த நசை பழுதாக
அட்ட குழிசி அழற்பயந் தாஅங்கு
அளியர் தாமே ஆர்க என்னா
அறனில் கூற்றம் திறனின்று துணிய[95]

*என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*பழத்தை விரும்பி வானிலே பறந்து 'மனலக்குகை அதிரச் சென்ற பறவை' சென்ற இடத்தில் பழ மரம் பழுத்து மாறிற்றாக வறிதே திரும்புவது போன்றது, ஈயாச் செல்வரை நாடிச் சென்று எதுவும் இல்லாமல் கவலையும் கால் நடைத்துயருமே கொண்ட பொருளால் மீளும் இரவலர் நிலைமை. இதனை,*

பல்கனி நசைஇ அல்கு விசும்பு உகந்து
பெருமலை விடரகம் சிலம்ப முன்னி
பழனுடைப் பெருமரம் தீர்ந்தென கையற்று
பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
நசைதர வந்துநின் இசை நுவல் பரிசிலென்
வறுவியேன் பெயர்கோ?[96]

*என்ற வரிகளால் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.*

*உள்ள கனிவும் கொடைப்பயனும் இல்லாத இரக்கம் இல்லான் உதவியை எதிர்பார்த்து அலைவது. 'உட்சுளை இல்லாமல் தோல்வன்மை அமைந்த பழத்தை விரும்பிச் சுற்றிக் கொண்டு வருவது போன்றது' என்பதனை,*

அருகில் கண்டும் அறியார் போல
அகம் நக வாரா முகன் அழி பரிசில்
தாள் இலாளர் வேளார் அல்லர்?
வருக என வேண்டும் வரிசையோர்க்கே
பெரிதே உலகம்; பேணுநர் பலவே
மீளி முன்பின் ஆளி போல
உள்ளம் உள் அவிந்து அடங்காது வெள்ளென
நோவாதோன் வயின் திரங்கி
வாயா வன் கனிக்கு உலமருவோரே[97]

*என்ற வரிகள் உணர்த்துகின்றன. மேலும், ஆளியன் மன எழுச்சியை,*

ஆளி நன்மான் அணங்குடைக் குருளை

மீளி பொய்ம்பின் மிகுவல செருக்கு[98]

என்ற பாடலடிகளால் அறியமுடிகின்றது. கிடைக்கும் என்று எதிர்பார்க்காத ஓர் இடத்தில் இருந்து ஒருவன் பெருஞ்செல்வம் பெறுவது 'விறகு வெட்டச் சென்ற இடத்திலே ஒருவன் விழுமிய பொற்குவியல் கண்டது' போன்றதாம். இதனை,

செல்வை ஆயின் செல்வை ஆகுவை;

விறகுஓய் மாக்கள் பொன் பெற்றன்னதோர்

தலைப்பாடு அன்று அவன் ஈகை

நினைக்க வேண்டா வாழ்க அவன் தாளே[99]

என்ற வரிகளால் உணரலாம்.

களிறு ஆகிய உணவு தனக்குக் கிடைக்காமல் தப்பி விட்டது என்று புலி ஓர் எலியைக் கொன்று தின்னாது. அதுபோல் எதிர்பார்த்த ஒரு பொருளை அன்றிப் பெருமைமிக்க இரவலர் எது கிடைத்தாலும் போதும் என்று வாங்கிச் செல்ல மாட்டார். இதனை கீழ்வரும் பாடலால் அறியலாம்.

ஆர்கலி யாணர்த் தரீஇய கால் வீழ்த்து

கடல் வயின் குழீஇய அண்ணல்அம் கொண்மூ

நீர்இன்று பெயராவாங்கு தேரொடு

ஒளிறு மருப்பு ஏந்திய செம்மற்

களிறு இன்று பெயரல பரிசிலர் கடும்பே[100]

பரிசிலர் தேரொடு யானைப் பரிசில் பெறுதலை,

வளியின் இகல் மிகும் தேரும் களிறும்

தளியின் சிறந்தனை வந்த புலவர்க்கு

அளியோடு கை தூவலை[101]

எனவரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

திறமை வாய்ந்த தச்சச்சிறார் தங்கள் கருவிகளுடன் காட்டுக்குச் சென்றால் மரம் வெட்டாமல் திரும்பார். அதுபோல் கலைஞர்களும் தம் தொழில் ஆற்றக் கிளம்பினால் பயன் இன்றி மீளார். கலைஞர்கள் எங்குச் சென்றாலும் மதிக்கப்படுதலும், பரிசும் கிடைப்பதும் உறுதி என நம்பினார்கள். இதனை,

மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர்

மழுவுடைக் காட்டகத்து அற்றே

எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே[102]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. பரிசிலர்க்குப் புதுநீர்ப் பெருக்குப் போன்றவன். பகை நிலத்து அருங்கலத்தைப் புலவர்க்கு முதலில் கொடுப்பான். பருவ மேகம் போல மீண்டும் மீண்டும் கொடுப்பவன் நன்னன். இதனை,

இசைநுவல் வித்தின் நசையோர் உழவர்க்குப்

புதுநிறை வந்த புலைஞ் சாயல்[103]

தொலையா நல்லிசை உலகமொடு நிற்பப்

பலர்புறங் கண்டவர் அருங்கலம் தரீஇப்[104]

என்ற பாடலடிகளால் தெரியமுடிகின்றது.

### 1.3.22. மறக்கொடை

வேந்தர், குறுநில மன்னர் முதலிய எல்லோரும் மறத்தினால் வந்த பொருள்களை வறியவர்க்கும் பரிசின் மாக்களுக்கும் உவந்தளித்தனர். இதனை மறக்கொடை எனலாம்.

செங்குட்டுவன் போரில் பலரைக் கொன்றும் அமைதியுறாமல் பொருதலையே விரும்பினான். வென்ற போதெல்லாம் போரில் திறையாகப் பெற்ற களிறுகளை எல்லாம் அவன் பரிசிலர்க்கு அளித்தும் அவர்கள் மேலும் பெற விழைந்தனர். இதனை,

அட்டு ஆனானோ குட்டுவன் அடுதொறும்

பெற்று ஆனாரே பரிசிலர் களிறே[105]

என, இவ்வடிகள் செங்குட்டுவனின் மறத்தையும், கொடையையும் இயைத்து நயம்பட கூறுகின்றன.

மூவேந்தர்க்கும் போரில் துணையாக நின்று மலையமான் திருமுடிக்காரி உதவுவான். அவ்வுதவிக்காக வேந்தர் நல்கிய பொருள்கள் யாவற்றையும் அவன் தன் குடியை வாழ்த்திப் பாடும் இரவலர்க்கு ஈவான். இதனை,

மூவருள் ஒருவன் துப்பு ஆகியர்என

ஏத்தினர் தரூஉம் கூழே நும்கூடி

வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே[106]

எனக் கபிலர் புலப்படுத்தினார்.

கறங்குமணி வாலுளைப் புரவியோடு வையகம் அருள

ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த

அழல் திகழ்ந்து இமைக்கும்

அஞ்சு வரு நெடுவேல்

கழல் தொடித் தடக்கைக் காரியும்[107]

என வரும் பாடலடிகள் ஒப்பிடத்தக்கன.

மாறோக்கத்து நப்பசலையார், காரி பகைவரது யானை அணிந்த ஓடைப்பொன் கொண்டு பொற்றாமரை மலர் செய்து பாணரது தலைமிசைப் பொலியச் சூட்டினான் என்பதனை,

ஒன்னார் யானை ஓடைப் பொன் கொண்டு

பாணர் சென்னி பொலியத்தைஇ

வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்

ஓடாப் பூட்டை உரவோன்[108]

என்ற வரிகளால் அறியமுடிகின்றது.

செங்குட்டுவன் பைம்பொற்றாமரையைப் பொன்னாலான தாமரையைப் பாணர்க்குச் சூட்டி ஒள்நுதல் விறலியர்க்கு ஆரம்பூட்டிக் கடற்போரில் பெற்ற பொருளை இவர்களது கொள்ளாப் பாடலுக்கு எளிதினில் ஈவான் எனப் பரணர் சுட்டுவதை,

பைம்பொன் தாமரை பாணர்ச் சூட்டி

ஒள்நுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டி

கெடல் அரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்கு

கடலோடு உழந்த பனித் துறைப் பரதவ!

ஆண்டு நீர்ப் பெற்ற தாரம் ஈண்டு இவர்

கொள்ளாப் பாடற்கு எளிதினின் ஈயும்

கல்லா வாய்மையன் இவன்[109]

என்னும் பாடல் வரிகளால் தெளிய முடிகின்றது.

செல்வக் கடுங்கோ வாழியாதன் பகைவரைப் புறங்காட்டி ஓடச்செய்து போர்க்களத்திலே திறையாகப் பெற்ற களிறுகளையும், உறையிட்டு அளவிட முடியாத உணவுப் பொருள்களையும் பரிசிலர்க்கு அளித்தான் எனக் கபிலர் குறிப்பிடுவதை,

இடிஇசை முரசமொடு ஒன்றுமொழிந்து ஒன்னார்
வேலுடைக் குழூஉச் சமம் ததைய நூறி
கொன்று புறம் பெற்ற பிணம் பயில் அழுவத்து
தொன்று திறை தந்த களிற்றோடு நெல்லின்
அம்பண் அளவை விரிந்து உறை போகிய
ஆர் பதம் நல்கும்[110]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகின்றது.

ஈர்ந்தூர் கிழான், தோயன் மாறன் என்னும் மறவன் தன்னைப் பாணர் இரக்குங்காலை அவர்தம் உண்ணாத ஒட்டிய வயிற்றைக் காட்டிக் கொல்லனை நோக்கி, இவ்வேலினை நன்கு வடித்துக் கொடு என இரப்பான் என மதுரை குமரனார் கூறுவதை,

யாம்தன் இரக்குங் காலை தான்எம்
உண்ணா மருங்குல் காட்டி தன்ஊர்க்
கருங்கைக் கொல்லனை இரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே[111]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

வடித்த வேலின் துணையால் தன் வீரங்காட்டிப் பொருள் ஈட்டிப் பாணரைப் புரந்தான் என்று தோயன் மாறனின் மறக்கொடையை நாடக முறையில் நயமுறக் காட்டுவது மேற்கூறிய பாட்டாகும்.

பகைவர் நாட்டினை வெல்லுதற்கு முன்னரே தம் வீரத்தில் நம்பிக்கை வைத்து வென்றதாக எண்ணி, அதனை பரிசிலர்க்கு அருளும் வழங்கினைத் தொல்காப்பியர் ‘கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்’ என்பர். இதற்கு இலங்கையை வெல்லும் முன்பே இராமன் வீடணனுக்கு ‘இலங்கைச் செல்வம்’, ‘நின்னதே தந்தேன்’ என மொழிந்ததைச் சான்றாகக் காட்டுவார். அதுபோலக் கடத்தற்கரிய அரண்கள்

பகைவரிடமிருக்கும் பொழுதே அவற்றை முன்கூட்டியே உவப்புடன் பாணர்களுக்கு அளிப்பான் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என ஊன்பொதி பசுங்குடையார் சுட்டுவதை,

.................................. ஒன்னார்

ஆர்எயில் அவர்கட்டாகவும் நுமது எனப்

பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்!

பூண் கடன் எந்தை! நீ இரவலர்ப் புரவே[112]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமண வள்ளலைப் பெருந்தலைச் சாத்தனார் புகழ்ந்து பாட அவ்வள்ளல் பரிசிலன் பொருள் பெறாது வறிதே திரும்பிச் செல்லுதல் 'என் நாடு இழந்தனினும் நனி இன்னாது' என்றெண்ணி விலைமதிப்புடைய தன்தலையைப் பரிசிலாகத் தர வாள் தந்தனன் பரிசிலுக்கு ஈடாகத் தலைதர வாள் தந்த இந்நிகழ்ச்சி குமணனின் மறக்கொடையைக் காட்டவல்லது என்பதை,

பாடி நின்றனெனாக கொன்னே

பாடு பெறு பரிசிலன் வாடினேன் பெயர்தல் என்

நாடு இழந்ததனினும் நனி இன்னாது என

வாள் தந்தனனே தலை எனக்கு ஈய

தன்னின் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்[113]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இங்குச் சுட்டிய மறக்கொடை இறைவனுக்குத் தன் கண்ணைப் பெயர்த்து அப்பிய கண்ணப்பரின் மறக் கொடையினை நினைப்பிக்கும் மாண்பினதாகும்.

தன்பால் பொருள் எதுவும் அற்ற நிலையில் மறவர் தலைவர் நெருநாள் கழித்து வந்த விருந்தினரை ஓம்பத் தன் பழைய வாளை ஈடு வைத்தான். அடுத்த நாள் தன் யாழையும் பணையம் வைத்தான். இதனை,

நெருநற வந்த விருந்திற்கு மற்றுத்தன்

இரும்புடைப் பழவாள் வைத்தனன் இன்றுஇக்

கருங்கோட்டுச் சீறியாழ் பனணயம்[114]

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

### 1.3.23. வள்ளல்களில் எழுவர்

பண்டைய காலத்தில் எண்ணற்ற வள்ளல்கள் தம் கொடைத் திறத்தால் பேரும் புகழும் பெற்று விளங்கினர். அவர்களில் பாரி, வல்வில் ஓரி, திருமுடிக்காரி, அதியமான் நெடுமான் அஞ்சி, வையாவிக் கோப்பெரும் பேகன், ஆய்அண்டிரன், கோப்பெருநள்ளி முதலானோர் வள்ளல்களில் குறிப்பிடத்தக்க எழுவராகத் திகழ்ந்தனர் என்பதை அறியலாம்.

#### 1.3.23.1. பாரி

சங்ககாலத்தே திகழ்ந்த வள்ளல் எழுவரின் கொடை இயல்புகளைக் கூர்ந்து பார்த்தால் கொடைஞர் கொள்ள வேண்டிய நெறிமுறைகள், கொடை நோக்கம், கொடைப்பயன் முதலியவற்றை அறியலாம். பறம்பு மலையின் கோடுதோறும் இழிதரும் நீரினும் இனிய சாயலன் பாரிவேள் எனக் கபிலர் கூறுதலின் அவன் இரவலர்க்கு இன்முகம் காட்டி இன்சொல் இயல்பும் இயல்பினன் என்பது `பூவினுள் எருக்கம் பூவைச் சார்த்தி இறைவனை வழிபடினும் அவன் அதனை ஏற்றுக்கொள்ளுதல் போல' இரவலருள் மடவர், மெல்லியர் செல்லினும் அவ்வள்ளல் அன்புடன் ஏற்று உதவுவான். தன் நாட்டிலுள்ள முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்கு உவந்தளித்தவன்.

> தன்னையும் இரவலர்க்கு நல்கும் அருளாளன். உளவரை தூக்காத ஒப்புரவாளன். இக்கொடைச் செயல்களால் தான் எல்லாக் காலத்திலும் எல்லார் உள்ளத்திலும் நிலைத்து நிற்கின்றான். இக்காலத்தும் ஏழைக் குறவர்கள் இரக்கும் காலை பாரிமகராசா வீடு, பிச்சைப் போடுங்கள் என அவர் பெயர் பாடக் காண்கிறோம்.[115]

பொதுவாகத் தம்மைப் புகழ்ந்து போற்றிய இரவலர்க்கே பொருளீதல் புரவலர் தன் இயல்பு. அதற்கு மாறாகப் பாரி முல்லைக் கொடிக்குத் தேர் நல்கிய சிறப்பினைக் கபிலர்,

> பூத்தலை அறாஅம் புனைகொடி முல்லை
> நாத்தழும்பு இருப்பப் பாடா தாயினும்
> கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
> பரந்தோங்கு சிறப்பின் பாரி[116]

என்னும் வரிகளால் குறிப்பிடுகிறார். பாடலில் வரும் 'கொள்கெனக் கொடுத்த' என்னும் தொடர் அவன் கேட்டுக் கொடுக்கவில்லை. தானே குறிப்பறிந்து முன் வந்து கொடுத்தான் என்பதனைக்,

.............................. தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல்இசை
படு மணி யானை, பறம்பின் கோமான்
நெடுமாப் பாரி[117]

தேர்வண் பாரி தண்பறம்பு நாடே[118]

தேர் வீசு இருக்கை நெடியோன் குன்று[119]

சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும்[120]

என வரும் செய்யுள் பகுதிகள் ஒப்பிடத்தக்கவாய் அமைந்திருக்கின்றன.

### 1.3.23.2. வல்வில் ஓரி

கொல்லிமலைத் தலைவனான ஓரி, பரிசிலர் தன்னைப் புகழ்ந்து பாராட்டிய போது நாணத்தால் தலை சாய்த்தான். இதனை,

கோஎனப் பெயரிய காலை ஆங்கு அது
தன் பெயர் ஆகலின் நாணி[121]

என்னும் பாடல் வரிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது.

பரிசிலர்க்கு அணிகள் பூட்டிய யானைகளையும், பொன்னாற் செய்த அணிகலன்களையும் மிகுதியாக அளித்தமையால் அவர்கள் பேருவகை எய்தித் தம் தொழிலாகிய ஆடுதலையும், பாடுதலையும் மறந்தனர் என்பதனை,

மழை அணி குன்றத்துக் கிழவன், நாளும்
இழை அணி யானை இரப்போர்க்கு ஈயும்
சுடர் விடு பசும் பூண் சூர்ப்பு அமை முன்கை
அடு போர் ஆனா ஆதன்ஓரி
மாரி வண் கொடை காணிய[122]

என்னும் வரிகளால் காணமுடிகின்றது.

*மலர்கள் பூத்துக் குலுங்கும் கர புன்னை மரங்களும், சிறிய மலைவளம் நிறைந்த தன் நாட்டையே கூத்தாடும் கலைஞர்களுக்குப் பரிசாகக் கொடுத்தவன், காரி என்னும் பேர் கொண்ட குதிரையை உடைய மலையமான் திருமுடிக்காரியுடன் போர் செய்தவன். ஓரி என்னும் பெயர் கொண்ட ஒரு குதிரையை உடையவன் என்பதை,*

குறும்பறை நன்னாடு கோடியார்க்கு ஈந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரியும்[123]

*என வரும் பாடலடிகளால் அறியலாம்.*

### 1.3.23.3. திருமுடிக்காரி

*மலையமான் திருமுடிக்காரி தன்னிடமுள்ள எல்லாப் பொருள்களையும் பரிசிலர்க்கு ஈந்தான். அவனுக்கென உரிமையாக இருந்தவை அவன் மனைவியின் தோள்களே. அங்ஙனம் இருப்பினும் அவன் கொடைப் பெருமிதத்துடன் திகழ்ந்தான்.*

அரிவைத் தோள் அளவு அல்லதை
நினது என இலை நீ பெருமிதத்தையே[124]

*எனக் கபிலர் வியந்து பாடுவர்.*

*காரி தரமறியாது எல்லோர்க்கும் ஒப்ப மிகுதியாகப் பரிசில் வழங்கியது கண்டு அவனுக்கு வரிசையறிந்து பரிசில் நல்குக எனக் கபிலர் அறிவுறுத்துவதை,*

வரிசை அறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்!
அது நற்கு அறிந்தனை ஆயின்
பொது நோக்கு ஒழிமதி புலவர் மாட்டே[125]

*என்னும் பாடல் வரிகளில் தெளியமுடிகின்றது.*

பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கி[126]

இரவல் மாக்கள் ஈகை நுவல[127]

வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை[128]

வரிசை அறிதலும்[129]

பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அது நோக்கி வாழ்வார் பலர்[130]

தத்தம் வரிசையான் இன்புறு உமேல்[131]

என வரும் பாடலடிகள் வரிசையறிந்து பரிசில் நல்க வேண்டும் என்பதனை வலியுறுத்துகின்றன.

நாளல்லாத நாளில் செல்லினும், பறவைகள் சகுனத்தடை ஆயினும், செவ்வியறியாது சென்று தீயவை கூறினும் 'காரி பரிசிலரை வறிதே மீளவிடான்' என்று அவனது கொடை இயல்பைக் கபிலர் சுட்டுவதை,

நாள் அன்று போகி புள் இடை தட்ப
பதன் அன்று புக்கு திறன் அன்று மொழியினும்
வறிது பெயர்க்குநர் அல்லர் - நெறி கொளப்
பாடு ஆன்று இரங்கும் அருவிப்
பீடு கெழு மலையிற் பாடியோரே[132]

என்னும் பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது.

காரி பரிசிலருக்குக் குதிரைகளையும், ஏனைய செல்வங்களையும் இல்லையென்று இரப்போர்க்கு சொல்லாமல் உலகம் வியக்கும்படி இனிய மொழிகளுடன் ஈந்தவன் இவன். பகைவர் அஞ்சும் வேற்படையை உடையவன். நீண்ட கையை உடையவன் என்பதனை,

வீர நன்மொழி இரவலர்க்கு ஈந்த
அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல்தொடித் தடக்கைக் காரியும்[133]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

### 1.3.23.4. அதியமான் நெடுமான் அஞ்சி

அதியமான் நெடுமான் அஞ்சி மலை உச்சிக்குச் சென்று நெடுநாள் வாழ வைக்கும் அரிதிற் பெற்ற நெல்லிக் கனியைத் தான் உண்ணாமல் ஔவைக்கீந்த தன்னலமற்ற கொடைஞன் என்பதனை,

. . . . . . . தொல் நிலைப்

பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட

சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது,

ஆதல் நின் அகத்து அடக்கி,

சாதல் நீங்க, எமக்கு ஈத்தனையே![134]

*என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகின்றன. உலகமே வறுமையுற்ற காலமாயினும் பாதுகாத்தலை வல்லன் என்பதை,*

அலத்தற் காலை ஆயினும்

புரத்தல் வல்லன்[135]

*என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு அவன் வறுமையிலும் வள்ளலாய்த் திகழ்ந்தமையை இப்பாடல் வரிகள் காட்டுகின்றன.*

*மலைச்சாரலில் பொருந்தியிருந்த ஒரு நெல்லி மரத்தில் கிடைத்த அற்புதமான நெல்லிக்கனியைத் தான் உண்ணக் கருதாமல் ஔவைக்கு ஈந்தவன். இவ்வருங்கனி உண்பவருக்குப் பல காலம் சாகாத் தன்மை வாய்க்கும் என்பதற்காக ஔவைக்கு கொடுத்தனன். புலமை மிக்க புலவர்களே இவ்வுலகில் நெடிய நாள்கள் வாழ வேண்டும் எனக் கருதினன். மேலும் புலவர்களிடம் அன்பு கொண்டவன். பகைவர்களிடம் தன் பேராற்றல் காட்டும் வேற்படையை உடையவன். இதனை,*

கமழ் பூஞ் சாரல் கவினிய நெல்லி

அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த

உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்

அரவக்கடல் தானை அதிகனும்[136]

*என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றன.*

### 1.3.23.5. வையாவிக் கோப்பெரும் பேகன்

*மழை வளமுடைய மலைப் பக்கமொன்றில் மயில் ஒன்று தன் தோகையை விரித்து ஆடிக் கொண்டிருந்தது. அது குளிர் தாங்காமல் நடுங்குவதாகக் கருதித் தன் போர்வையை அதன் மீது போர்த்தியவன் பேகன் என்று சிறப்பித்துக் கூறுகின்றதை,*

வானம் வாய்த்த வளமலை கவாஅன்

கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய

அருந்திறல் அணங்கிய ஆவியர் பெருமகன்

பெருங்கடல் நாடன் பேகனும்[137]

என்னும் பாடல் வரிகளால் அறிந்துகொள்ள முடிகின்றது.

### 1.3.23.6. ஆய் அண்டிரன்

ஆய் வள்ளல் புலவர், பரணர், கூத்தர் முதலியோர் தமக்கு வேண்டும் என எப்பொருளைக் கேட்பினும் தனக்கென வைத்துக் கொள்ளாது அதனை உடனே உவந்து கொடுக்கும் இயல்பினன்.

நீல நிறமுள்ள நாகம் ஒன்று தனக்குக் கொடுத்த ஓர் ஆடையை ஆலின்கீழ் அமர்ந்த சிவபெருமானுக்குப் பக்தியொடு கொடுத்தவன் வலிமையான தோள்களில் சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவன் இரவலர்களிடம் எப்பொழுதும் அன்பு கனிந்த நல் மொழிகளாய் பேசும் இயல்புடையவன் என்பதை,

நீல நாகம் நல்கிய கலிங்கம்

ஆலமர் செல்வதற்கு அமர்ந்தனன் கொடுத்த

சாவந் தாங்கிய சாந்து புலவர் திணிதோள்

ஆர்வ நன்மொழி ஆயும்[138]

என்னும் பாடல் வரியால் சுாணமுடிகின்றது.

### 1.3.23.7. கோப்பெரு நள்ளி

நள்ளி மிகுதியாகப் பரிசில் நல்கியமையின் அதனைப் பெற்ற பாணர் மகிழ்ச்சிப் பெருக்கால் நிலை தடுமாறி மயங்கி மாலையில் அதற்குரிய செவ்வழிப்பண் பாடாது மருதப்பண் பாடியும் காலையில் அதற்குரிய மருதப்பண் பாடாது செவ்வழிப்பண் பாடியும் தங்கள் குல மரபை மறந்தனர் என அப்பெருமகனின் பெருங்கொடையை வன்பரணர் பாராட்டுகிறார்.

நள்ளி! வாழியோ; நள்ளி! நள்ளென்

மாலை மருதம் பண்ணி; காலை

கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி

வரவு எமர் மறந்தனர் - அது நீ

புரவுக் கடன் பூண்ட வண்மை யானே[139]

என்னும் பாடலடிகளால் இதனை அறியமுடிகிறது.

தன்னிடம் உள்ள பொருள் ஒன்றையும் மறைக்கத் தெரியாதவன், தன்னிடம் அன்பு காட்டும் அனைவரையும் மகிழச் செய்பவன், வறியவர்களுக்குச் செல்வங்களை வாரி வழங்குபவன். போர் முனையில் வெற்றிபெறும் ஆற்றல் உடையவன், நீண்ட கைகளை உடையவன் இடைவிடாது மழைப்பொழியும் மலைகளைக் கொண்ட மலை நாடன் என்பதை,

நாட்டார் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளி மலை நாடன் நள்ளியும்[140]

என்னும் பாடல் வரிகள் காட்டுகின்றன.

### 1.3.24. கொடை இயல்பு

ஏழு வள்ளல்களிடம் மட்டுமின்றி ஏனைய வேந்தர், குறுநில புலவர் முதலியவரிடத்தும் சில கொடை இயல்புகள் காணப்படுகின்றன. பிறர் வற்புறுத்தலால் கொடை செய்து பின்னர் இரங்குவோர் சிலர்; தாம் கொடுத்ததைத் தாமே பிறரிடம் கூறி மகிழ்வோர் சிலர்; பொருள்மேல் பற்றுள்ளம் கொண்டு பிறர்க்கு வேண்டிய அளவு நல்காமல் பற்றாக்குறையாகக் கொடுப்போர் சிலர்; இத்தகைய வேண்டாத இயல்புகளைத் தவிர்த்துக் கொடையிற் சிறந்து நின்றவன் செல்வகடுங்கோ வாழியாதன் எனக் கபிலர் கூறுகிறார். இதனை,

ஈத்தொறும் இரங்கான் ஈத்தொறும் மகிழான்
ஈத்தொறும் மாவள்ளியின்[140]

எனக் கபிலர் கொடையாளரின் இயல்புகளாகப் புகழ்வார்.

முகக்குறிப்பறிந்து பொருளீந்து வறுமையின் சிறுமையைக் களையும் கொடையாளர் பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதியை,

நின்நசை வேட்கையின் இரவலர் வருவர் அது
முன்னம் முகத்தின் உணர்ந்து
இன்மை தீர்த்தல் வன்மையானே[142]

என இரும்பிடர்த் தலையார் போற்றுவர். பிறரைச் சென்று புகழ்ந்து பாடாதவாறு இரவலர்க்கு இரும்பொறை நிறைய ஈந்ததை,

நிற்பாடிய வயங்கு செந்நாப்
பின்பிறர் இசை நுவலாமை
ஓம்பாது ஈயும் ஆற்றல் எங்கோ![143]

எனக் குறுங்கோழியூர் கிழார் பாராட்டுகிறார்.

பரிசிலர்க்குப் பெரும்பொருள் வழங்கிய நல்லியாதனை நன்னாகனார்,

இரவி னானே ஈத்தோன் எந்தை;
அன்றை ஞான்றினோடு இன்றின் ஊங்கும்,
இரப்பச் சிந்தித் யேன்[144]

என்று போற்றிப் புகழ்வர்.

பெருஞ்சித்திரனார் குமண வள்ளலிடம் பெற்ற செல்வத்தைத் தம் மனையாளரிடம் தந்து, 'நின்னை விரும்பி வாழும் மகளிர்க்கும் நீ விரும்பிய மகளிர்க்கும் கற்பில் சிறந்த நின் சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் கொடு நாம் நல்லபடி - பகட்டாக - வாழலாம் என்று நினையாமல் கொடு' எனக் கூறியதை,

வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே![145]

என்னும் அடிகள் சிறந்த கொடைக் குறிக்கோளைக் குறிப்பன.

வள்ளல்களின் கொடை இயல்புகளாக நீரினும் இனிய சாயலனாக இருத்தல், மடவர், மெல்லியர் செல்லினும் கொடையளித்தல் புகழ்ந்து பாடாதோருக்கு உதவுதல் தன்னிடம் உள்ள பொருள் அனைத்தையும் கொடையால் இழந்தும் பெருமிதத்துடன் இருத்தல், பிறர் புகழும்போது நாணத்தால் தலை சாய்தல், பொதுநோக்குத் தவிர்த்து வரிசையறிந்து வழங்குதல் நாள் செவ்வி, சகுனம் முதலிய பார்க்காமல் சென்று தீமொழி கூறினும் இரவலரை வறிதே அனுப்பாமல் பரிக நல்கல், பலநாள் பலரொடு செல்லினம் தலைநாள் போல விருப்புடன் விருந்தோம்பல், அல்லற்காலையும் அகமும் முகமும் மலர இரவலர்ப் பேணுதல், கொடை மடம் படுதல், அறவிலை வணிகம் செய்யாமல் கடமையுணர்வால் அளித்தல் விளம்பரமின்றி அடக்கமாக ஈதல், ஈத்தொறும் இரங்காமல் மகிழாமல் மாவள்ளல் எனப் பெருங்கொடை செய்தல்

இலன் என்று பிறர்பால் இரவாதவாறு குறிப்பறிந்து நிறையக் கொடுத்தல் வல்லாங்கு வாழ்த்தும் எண்ணாது நல்குதல் முதலியன குறிப்பிடத்தக்க கொடையியல்புகளாகும்.

### 1.4. கல்வி

தனிமனிதனுடைய வாழ்வையும், நாட்டின் வாழ்வையும் உயர்த்துவது கல்வி. இக்கல்வியின் இன்றிமையாமையைத் தமிழர் நன்குணர்ந்தனர். ஒரு சமூகம் ஈடுபட்டிருக்கும் அனைத்து துறைகளிலும் அவரவர் தகுதிக்கேற்ப வல்லமை பெறுவதே கல்வி என்பதற்கு 'அறிவு கற்றல் நூல்'[146] என்றும் 'அறிவு - கற்றல், நூல், வித்தை'[146] என்றும் அகராதிகள் பொருளுரைக்கின்றன.

> கல்வி மக்களின் அறிவைப் பெருக்கக்கூடிய கொள்கைப் பரப்பலை நோக்கமாகக் கொண்டு திகழ்கிறது[148]

என்ற கூற்று கல்வியின் பெருமையினை எடுத்து இயம்புகிறது.

சங்க காலப் பொதுமக்கள் உழைப்பிற்கு மட்டுமல்லாது கல்விக்கும் முக்கியத்துவம் தந்து இருக்கிறார்கள்.

> முதல் முதல் மக்கள் கற்ற கல்வி உழவுத் தொழில் என்பதே புலனாகின்றது. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவு அதனாற் பெறப்படுதலின் கல்வி என்னும் சொல்லும் உழவுத் தொழிலையே முதன் முதல் குறித்தது. கல்-பகுதி, வி-விகுதி கல்லல், தோண்டல், கல்லென்றும் சொல்லே இல்லென்று திரியும்.[149]

கல்வியானது இளம்பருவத்திற்குரிய செயற்பாடுகளுள் ஒன்றாக இளமையில் கல் என்னும் பழமொழி உரைக்கிறது.

#### 1.4.1. கற்றவரின் சிறப்பு

தன் ஆசிரியர்க்கு ஒரு துன்பம் வந்துவிடத்து அது தீர்த்தற்கு உதவி செய்தல் வேண்டும். மிக்க பொருளை அவருக்குக் கொடுக்க வேண்டும். மிக்க பொருள் கொடுத்தும் ஆசிரியரை வழிபடுதற்கு வெறுப்படைதல் கூடாது. இவ்வாறெல்லாம் செய்து ஒருவன் கல்வி கற்பது நன்மையே தரும். அதற்குக் காரணம் பிறப்பு ஒரு தன்மையாகிய ஒரு தாய் வயிற்றில் பிறந்தவருள்ளும் அவரவர் சிறப்பின் காரணமாகத் தாயும் பாசத்தால் மனம் வேறுபடுவாள்.

ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் மூத்தோனை வருக என்று அழையாது அவருள், 'அறிவுடையோனை வருக' என்று அழைத்து அவன் காட்டும் நெறி வழியே அரசனும் நடப்பான். வேற்றுமை தெரிந்த நாற்குல மக்களுள் கீழ்குலத்துள் ஒருவன் கற்று வல்லானாயின் மேற்குலத்துள் ஒருவனும் இவன் கீழ்க்குலத்தான் என்று பாராது கல்வி பொருட்டு அவனிடத்துச் சென்று வழிபடுவான். ஆதலால் எவ்வகையானும் கல்வி கற்றல் சிறப்புடையது என்பதை,

உற்றுழி உதவியும், உறு பொருள் கொடுத்தும்,
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்,
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும்.
மூத்தோன் வருக என்னாது, அவருள்
அறிவுடையோன் ஆறு அரசம் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவன் அவன்கண் படுமே[150]

எனும் பாடலால் பாண்டிய நெடுஞ்செழியன் வற்புறுத்திக் கூறுகிறார்.

### 1.4.2. இளையோர் கல்வி

சங்க காலத்தில் ஒரு குறிப்பிட்ட பிரிவினர் மட்டுமல்லாமல் சமுதாயத்தின் எல்லா தரப்பு மக்களுமே கல்வியில் நன்கு தேர்ச்சிப் பெற்றிருந்தார்கள். கற்றவர்கள்,

கல்வியென் என்னும், வல் ஆண் சிறாஅன்[151]

என்று போற்றப்படுகிறார்கள். அன்றைய இளையோர் கல்வி பற்றி,

இளையோர்கள் எங்கு எப்படி யாரிடம் எதைக் கற்றனர் என்பதைத் தெளிதற்கான வாய்ப்பு சங்கப் பாக்களில் அமையவில்லை[152]

என்று கூறப்படுவது இங்கு அறியத்தக்கது.

மதுகை மன்றத்து
அலந்தலை இரத்தி அலங்கு படுநீழல்
கயந்தலைச் சிறார் கணை விளையாடும்
அருமிளை இருக்கையதுவே[153]

இளையவர் தழூஉ ஆடும் எக்கர்[154]

புன்தலைச் சிறஅர் மன்றத்து ஆர்ப்பின்[155]

எனும் குறிப்புகள் ஊர்ப் பொது மன்றம் இளையோர் ஒருங்கு கூடும் சமுதாயக் கூடமாகவும், கற்குமிடமாகவும் நின்றதை நவில்கின்றன. கல்வி குறிப்பாகப் போர்க்கல்வியாக அமைந்ததும் உணர்த்தப்பட்டுள்ளது.

### 1.4.3. மகளிர் கல்வி

புறநானூற்றில் ஆடவரைப் போன்று மகளிரும் கல்வி கற்றிருந்தமையை அறியமுடிகிறது. புறநானூற்றில் மட்டும் 15 பெண்பாற் புலவர்கள் 57 பாடல்களைப் பாடியுள்ளனர். இவர்கள் 8 பேர் புறம் மட்டுமே பாடியவர்கள். 7 பேர் அகமும் புறமும் பாடியவர்கள் குயத்தி, குறத்தி முதலாக அரசியர் வரை கல்வி பயின்றனர். பால் வேறுபாடில்லாமல் சாதி ஏற்றத் தாழ்வு இல்லாமல் செல்வ ஏற்றத்தாழ்வு கருதாமல் கல்வி கற்பிக்கப்பட்டது. கவிதை பாடும் அளவிற்கு மகளிர் புலமை மிக்கிருந்தனர்.

கல்வியென்பது வாழ்நாள் முழுதும் தொடர்வது அன்றிப் பிறவித் தொறும் தொடர்ந்து பலனளிக்க வல்லது என்றும் கருதினார்கள். கல்வியென்பது இன்று வேலை பெற்று வயிற்றைக் கழுவுதற்குரியது என்று கருதப்படுகிறது. பண்டைய தமிழர் அறியாத ஒன்று இது. பண்டையத் தமிழர்கள், கல்வி பண்பாட்டை வளர்த்து வீடு பேறளிக்கும் மருந்து என்றே கருதினர்.

## 1.5. அறம்

சங்கத் தமிழர்களில் தர்மம் செய்வதை நோக்கமாகக் கொண்டிருந்தனர். அறம் என்னும் சொல் ஒழுக்கம் என்ற பொருளில் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளமையை,

அறஞ்சாரான் மூப்பேபோல்[156]

அறனி லாளன்[157]

என்னும் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. உயர்ந்த வழக்கு என்பதனை 'வழக்கியலாணை'[158] என்பர் தொல்காப்பியர். அறம் என்னும் சொல் இப்பொருளில் வழங்கி வந்துள்ளமையை,

அறநெறி யிதுவெனத் தெளிந்த[159]

.................................. அறத்தா

அன்றெனு மொழிந்த தொன்றுபடு கிளவி[160]

என்று அமைந்த இலக்கியப் பகுதிகள் உறுதிப்படுத்துகின்றன.

### 1.5.1. அறம் எனும் சொல் தரும் விளக்கங்கள்

அறம் என்னும் சொல் நடுவுநிலைமையொடு நின்று ஆராய்ந்து கூறும் நீதி என்னும் பொருளில் இலக்கண இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. இதனை,

அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே[161]

அறநெறி முதற்றே, அரசின் கொற்றம்[162]

அறநனி சிறக்க[163]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. அறம் என்னும் சொல் ஈகை என்னும் பொருளில் வந்துள்ளதை,

அறம் பூண்டு பாரியும்[164]

பிறர் நோயுந் தந்நோய் போற்போற்றி அறனறிதல்

சான்றவர்க் கெல்லாங் கடனானல்[165]

என்னும் வரிகளால் அறியமுடிகிறது. ஈகை என்ற பொருளில் அறம் வழங்கியுள்ளமையை,

அறஞ்செய் தீமோ வருள்வெய் போய்[166]

அறந்தலைப் பிரியா தொழுகலும்[167]

என்ற வரிகளால் அறியலாம். நற்செயல்களின் பயனாகக் கிடைக்கும் புண்ணியத்தையும் அறம் என்னும் சொல் குறித்துள்ளது.

அறனு மன்றே ஆக்கமும் தேய்ம்[168]

அருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே[169]

என்னும் அடிகள் இதனைத் தெளிவுப்படுத்துகின்றன.

அறம் என்னும் சொல் அறக்கடவுளையும் குறித்தது என்பதற்கு,

அறம் புரிந் தன்ன செங்கோ னாட்டத்து[170]

அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே[171]

என்னும் அடிகள் சான்றாகின்றன.

அறம் என்னும் சொல் நற்செயல் மற்றும் நல்வினையைக் குறிக்கும். சோழன் நலங்கிள்ளியிடம் முதுகண்ணன் சாத்தனார் உன்னுடைய செல்வத்தால் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் செய்து உதவ வேண்டும். அது பயன்படாமற் போவது நின்னைப் போற்றாத பகைவர்க்கேயாகும் என புலவர் அறிவுறுத்தினார். இதனை,

அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்

ஆற்றும் பெரும! நின் செல்வம்

ஆற்றாமை நிற் போற்றாமையே[172]

என்னும் அடிகள் உணர்த்துகின்றது.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடும் போது சிறப்புடைய மரபிற்கு அறமே அடையாளமாகத் தோன்றும். அவ்வறத்தின் பின்னாகத் தான் பொருளும் இன்பமும் அமையும் என்பதனை,

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்

அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல[173]

என்ற பாடல் வரியால் அறியலாம்.

பரிசிலர்க்கு அளிப்பதைப் போன்றே பிறர்க்கும் அளிக்கும் தன்மையன் பிட்டன் என்பதனை,

பிறர்க்கும் அன்ன அறத்தகை யன்னே[174]

என்ற வரியால் காரி கண்ணனார் புலப்படுத்துகிறார்.

அறத்துக்கும் உழைப்புக்கும் ஓடம்போல கரும்பனூர் கிழார் விளங்கினார் என்பதை,

உறுவரும் சிறுவரும் ஊழ்மாறு உய்க்கும்

அறத்துறை அம்பியன் மான[175]

என்ற அடிகளில் நன்னாகனார் வெளிப்படுத்தியுள்ளார்.

அறநெறியுடன் ஆட்சி செய்வதையே வேந்தர்களும் விரும்பினர். அறத்திற்கு ஒரு குறையும் வாராமல் நாடு காத்தலை ஒரு நல்லறமாகக் கொண்டிருக்கும் தோள் வலிமை மிக்கவன் சேரன் என்பதை,

ஆறு முட்டுறாஅது அறம் புரிந்து ஒழுகும்
நாடல் சான்ற துப்பின பணைத் தோள்[176]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகிறது.

'மிதவையைப் பற்றிக் கொண்டவர் வெள்ளப் பெருக்குடைய ஆற்றின் ஒரு கரையில் இருந்து மறுகரைக்கு எளிதாகப் போய்விடுவர்.' அதுபோல் அறம் என்னும் மிதவையைப் பற்றிக் கொண்டவரும் இவ்வுலகில் இருந்து வீட்டுலகம் எளிதில் சேர்வர்.

புண்ணகை விட்டோர்க்கு கரிதே துணையழத்
தொக்குயிர் வெளவும் காலை
இக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளளலே[177]

என்னும் பாடல் வரிகளால் இதனை அறியமுடிகிறது.

அறம் என்னும் சொல்லுக்குப் புண்ணியம், தருமம், தகுதி, அறிவு, ஞானம், நீர்மை, நோன்பு, அறக்கடவுள், பெரியோர் இயல்பின் ஒன்று எனப் பலபொருள் கூறப்படுகிறது. அறம் பண்பாடு உடையது. உயர்பண்பு கொண்டது. தக்கது இது தகாதது இது என ஒன்றை அறுத்துச் சொல்வதால் அறம் எனப்பட்டது.

பண்டைய அரசர்கள் அறவழியில் நின்று அறம் உரைத்தனர். அற மன்றம் ஆளும் இடத்திலேயே இயங்கியது. அறம் பிறழ்ந்து முறை செய்தது இல்லை. செங்கோல் அறத்தால் மட்டுமே நிலை நிறுத்தப்பட்டது. இதனை,

அறனொடு புணர்ந்த திறன்அறி செங்கோல்[178]

அல்லது கடிந்து அறம்புரி செங்கோல்[179]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

### 1.5.2. அறத்திற்கு அஞ்சுதல்

அக்கால குடிமக்கள் அறத்திற்கு அஞ்சினர். அறம் தம்மைத் தண்டிக்கும் என எண்ணினர். அதனால் குற்றங்கள் குறைந்தன. அரசனும் அறத்திற்கு அஞ்சி

ஆட்சிபுரிந்தான். அரசாட்சியில் அறம் உரைப்பதற்காக எண்பேராயம், ஐம்பேராயம் போன்ற ஆயங்களை உருவாக்கி வைத்தனர். சால்புடைய சான்றோர் உரைத்து நீதிக்கு அனைவரும் கட்டுப்பட்டனர்.

வேங்கடத்தை ஆண்ட குறுநில மன்னர்களுள் ஆரனுங்கன் என்பானும் ஒருவன் இரப்போர்க்கு இல்லையெண்ணாது சால்பறிந்து பேணும் தன்மை உடையவன். அவனிடம் அன்பு கொண்ட தொண்டை நாட்டுப் பகுதியைச் சேர்ந்த கள்ளில் எனும் ஊரினரான ஆத்திரையனார் என்பான் வேங்கடத்துக்குச் சென்று ஆதனுங்கனைக் கண்டு பேசிக் கொண்டிருந்தான். அவ்வாறு பேசிக் கொண்டு இருக்கும்போது ஆத்திரையனார் தமக்கு ஆதனுங்கனிடத்து உள்ள பேரன்பினை எடுத்து இயம்பினான்.

எந்தை! வாழி; அதனுங்க! என்
நெஞ்சம் திறப்போர் நிற்காண் குவரே;
நின்யான் மறப்பின், மறக்கும் காலை
என்னுயிர் யாக்கையின் பிரியும் பொழுதும்
என்னியான் மறப்பின், மறக்குவென் வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண் கதிர்த் திகிரி திரிதரக் குறைந்த
உலக விடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்
பலர்புர வெதிர்த்த அறத்துறை நின்றே[180]

என்ற பாடலால் இதனைத் தெளியமுடிகிறது.

அறநெறியிற் பொருளீட்டி அப்பொருளால் அறநெறியில் இன்பந் துய்க்க வேண்டும் என்பதை உணர்த்துவதற்காக அறநூலார் இம்மைப் பொருள் மூன்றையும் அறம், பொருள், இன்பம் என்னும் இம்முறைப்படுத்திக் கூறினர். ஒவ்வொருவனும் அறநெறியில் தன் தொழிலைச் செய்வதே அவனவன் பொருளீட்டி இன்பந்துய்க்கும் வழியாகும். அரசன் தொழிலாவது நாடு காவல் போர் வினையும் நாடு காவலுக்குப் பட்டதே. அதனால் அக்காலத்து அரசர் பெரும்பாலும் தம் வினைகளிலெல்லாம் அறத்தைக் கடைப்பிடித்தனர்.

### 1.5.3. அறமே நோக்கம்

பண்டைய தமிழரசர் தம் நாட்டை அல்லது குடிகளை ஆளும் தொழிலை ஆட்சி என்னும் சொல்லால் குறியாது காவல் புரவு ஓம்பல் முதலிய சொற்களாலேயே குறிக்க விரும்பினர். அவர் காவல் பூண்ட இடம் குடைநிழல் என்றும் அடிநிழல் என்றும் குறிக்கப்பட்டது. நெடுஞ்செழியன் குற்றமற்ற கோவலனைக் கொன்றதால் தன் கோல் தவறியது கண்ட நொடியே உயிர் துறக்கலாயினான். அவன் அறவுணர்ச்சி எத்துணை அளவிறந்ததாய் இருந்திருத்தல் வேண்டும்.

சங்ககால மக்கள் அறத்தொடு வாழ்ந்தனர். அதனால் ஒழுக்கம் குன்றிய அறம் அறியா அறிவிலிகள் தீயன செய்தபோது அவர்களுக்கு அறிவுறுத்துவான் வேண்டி அறநூல்கள் யாத்தனர். அறக்கோட்பாடு வளர்ந்தது. அறச்சிந்தனை ஏற்பட்டது. மக்களிடையே அறமுரைத்தல் உண்டாயிற்று. இவ்வாறாக பண்டைய மக்களின் வாழ்விலும் வேந்தர்களின் ஆட்சி முறையிலும் அறமே நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தார்கள்.

### 1.6. போர்முறை

மக்கள் சமுதாயம் போர் பற்றிய சிந்தனையில் மூழ்கியிருந்த காலம் தொன்மையான காலம். தம் அடிப்படை வாழ்விற்குப் போரே ஆணிவேர் என்று மனித மனம் எண்ணியிருந்த காலம். பண்டையக் கால வாழ்விற்குப் போர் அடித்தளமாக அமைந்திருந்ததை வரலாறும் இலக்கியமும் காட்டுகின்றன.

போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சியென்றும் ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் உலகத்து இயற்கை. இதனை,

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவ தன்று இவ்உலகத் தியற்கை[18]

என்னும் வரிகள் உணர்த்துகின்றது.

போருக்கு மக்களிடையே நிலவிய பெருஞ்செல்வாக்கு தொன்மை தொட்டுத் தலைமை பற்றிய சிந்தனைக்கு விதையூன்றியது. செல்வம், செல்வாக்கு புகழ், அறம்,

அதிகாரம், செருக்கு, சினம் முதலிய அனைத்து நிலைகளிலும் போர் எண்ணம் ஊடுருவியுள்ளது.

மறவர்கள் போரை விரும்பி ஆரவாரிக்கும் சிவந்த கண்களை உடையவர். ஊர்மன்றினிடத்துக் கட்டப்பட்ட முழவானது காற்றில் ஒலி உண்டாக்கப்பட்டால் கூட அவ்வொலியைப் போருக்கு அழைக்கும்போர் முரசொலி என எண்ணி மகிழ்வர்.

பொதுவியல் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண் கண் கேட்பின்
அது போர் என்னும் என்னையும் உளனே[182]

என்ற வரிகளால் இதனை அறியமுடிகிறது.

தமிழர், போர் இல்லாத நாட்களில் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி ஒருவரை ஒருவர் போரிட்டு மடிய வேண்டும் என்ற மறப்பண்பு மிக்குடையவர் என்பதை,

போர்மடு மள்ளர் போந்தொடு தொடுத்த[183]

என்ற தொடரால் காணமுடிகிறது.

வீர மரணம் வாய்க்கப்பெறாது இறந்து போனால் அவன் உடலைப் பசும்புல் தலையில் கிடத்தி அதனைக் கூறுபடுத்திப் பின் அடக்கம் செய்தனர். இதனை,

அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி
மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த
நீள் கழல் மறவர் செல்வுழிச் செல்வ! என
வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர்[184]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

காயம் படாது இறந்தோரை வாளால் போழ்ந்து அடக்கும் தமிழர் மரபை,

குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,
ஆள் அன்று என்று வாளின் தப்பார்[185]

என்ற வரிகளால் காணலாம். ஆடவர்கள் மட்டுமின்றி மகளிரும் வீரப்பண்பில் சிறந்திருந்தனர் என்பதை,

ஓ ............................... வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை எய்துக எனவே[186]

என்னும் வரிகளால் உய்த்துணர முடிகிறது.

இவ்வாறு சங்க காலத்தில் வாழ்ந்திருந்த தமிழரிடம் வீரமும், போர்க்குணமும் மேலோங்கியிருந்தன. சங்க காலத்தில் வாழ்ந்திருந்த மக்களிடம் காணப்பட்ட போர்க் குணமும், ஆட்சி புரிந்த வேந்தர்களிடம் நிலவிய நாடு பிடிக்க வேண்டும் என்னும் மண்ணாசையும் இணைந்து பலபெரும் போர்கள் உருவாயின.

> ஆதியில் வாழ்க்கையின் தேவைக்காக ஏற்பட்ட போராட்டங்கள், போர்கள் பின்னாளில் வேற்றுருவம் பெறலாயின. வயிற்றுத் தேவைக்காகத் தொடங்கிய போர், வசதிக்கான போராக வளர்ச்சி பெற்றது. மாடுபிடி சண்டை, நாடுபிடி சண்டையாக மாற்றம் பெற்றது. தனி மனிதனின் வீரம் மறக்கப்பட்டு அனைத்து பெருமையும் சிறப்பும் அரசுக்கும், ஆட்சிக்குரியவனுக்கும் சேர்க்கப்பட்டன என்று அரங்க இராமலிங்கம் குறிப்பிடுகின்றார்.[187]

மூவேந்தர்களும் எப்போதும் புகழ்ப் போட்டியிலே ஈடுபட்டிருந்தனர். தாம் ஆளும் நாடு சிறியது என்று கருதி அதனை விரிவாக்க வேண்டும் என்னும் ஊக்கத்தால் வெகுண்டெழுந்தனர். இதனை,

போகம் வேண்டி பொதுச் சொல் பொறாஅது
இடம் சிறிது என்னும் ஊக்கம் துரப்ப
ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகை[188]

என்னும் வரிகளால் அறியலாம். சேர பாண்டியரின் குடைகள் சோழன் குடையினும் தாழப்பறந்தது கண்டு கோவூர்கிழார் மகிழ்ந்து பாடுகிறார்.

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
ஒரு கெழு மதியின் நிவந்து சேண் விளங்க[189]

என்னும் வரிகளால் இதனை அறியமுடிகிறது.

மூவேந்தர்களும் ஒருங்கிருங்கும் காட்சி காண்டற்கரிய வியப்புமிகு காட்சியாகயிருந்தது. இரு பெருவேந்தர்கள் ஒருங்கிருந்ததைக் கண்ட காவிரிப்பூம்பட்டித்துக் காரிக் கண்ணனார்,

நல்ல போலவும் நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சின்நும் இடைபுகற் அலமரும்
ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது
இன்றே போல்க நும் புணர்ச்சி[190]

என்று வாழ்த்துவது இன்புறத்தக்கது.

மாரி வெண்கோ உக்கிரபெருவழுதி இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய மூவேந்தரும் ஒருங்கிருந்த காட்சியைக் கண்ட மூதாட்டி ஔவையார்,

ஒன்றுபுரிந் தடங்கிய இருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்![191]

என்று பாராட்டுகிறார்.

புலவர்கள் மூவருள் ஒருவனைப் புகழ்கையில் ஏனைய இருவரையும் தாழ்த்திப் பேசினர். இதனை,

முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசெனப்படுவது நினதே பெரும![192]

என்னும் வரிகளால் உய்த்துணர முடிகிறது. மூவேந்தரும் ஒருவரையொருவர் பகைப்பது இயல்பென்றே புலவர்கள் கருதினர். போர் செய்யவிருந்த இருபெருஞ் சோழர்கட்குக் கோவூர்கிழார் அறிவுரை கூறுகையில்,

இரும் பனை வெண் தோடு மலைந்தோன் அல்லன்;
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே;
ஒருவீர் தோற்பினும் தோற்ப நும் குடியே

இருவீர் வேறல் இயற்கையும் அன்றே: அதனால்
குடிப்பொருள் அன்று நும் செய்தி: கொடித்தேர்
நும் ஓர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ்இகலே[193]

என்று கூறுதல் இங்கு நோக்கத்தக்கது.

சங்க காலத்தின் முடிவிற்குள்ளாகத் தமிழகத்தில் பலவாறு போர்கள் நிகழ்ந்திருக்கின்றன. சேர, சோழ, பாண்டிய என்ற மூவேந்தர் மூவரும் முக்கோணமாக நின்று ஒருவரோடொருவர் இடைவிடாது போர் செய்தனர். இவர்களோடு அவரவர் சிற்றரசரும், குறுநில மன்னர்களும் கலந்து கொண்டதுடன், தாங்களும் தனித்தனியே பல போர்களைச் செய்தனர்.[194]

பண்டைய காலத்தில் போர்களே பெரும் பங்கு வகித்தன. அப்படிப் போர் இல்லாமல் அமைதியான காலமிருப்பின் அது மற்றொரு போருக்குத் தேவையான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருந்த காலமாகவே இருந்திருக்கிறது. போர்கள் ஒன்று பலவாகக் கிளைத்துத் தமிழகம் பல நூற்றாண்டுகள் வரை போர்க்களமாகவே காட்சியளித்தது. இவ்வாறாகச் சங்ககால போர்முறைகள் வீரத்தின் வெளிப்பாடாகவே அமைந்ததை அறிந்துகொள்ள முடிகின்றன.

### 1.6.1. போருக்கான காரணங்கள்

தொடக்கத்தில் பசுக் கூட்டங்களைக் கவர்வதற்காகப் போர்கள் நடந்தன என்னும் நிலை மாறி நில எல்லைக்காகவும், பெண்ணுக்காகவும், மான உணர்ச்சிக்காகவும் போர்கள் நிகழ்த்தப் பெற்றிருக்கின்றன. தன்னாட்டின் நிலப்பரப்பை விரிவுபடுத்திட ·வேண்டும் என்ற மண்ணாசையின் மிகுதியால் வேந்தர்கள் போர் செய்தனர். இதனை,

எஞ்சா மண்ணாசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே[195]

வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுசொற் பொறாஅ
இடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப[196]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

*கரிகாற்பெருவளத்தான் பகைவரின் காவல் இருந்து தப்பிச் சென்று ஆட்சி உரிமைக்காகப் போர் செய்தனர்.*

உருவப் ப·.றேர் இளையோன் சிறுவன்
முருகன் சீற்றத்து உருகொரு குருசில்
தாய் வயிற்று இருந்து தாயம்எய்தி
எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பச்
செய்யார் தேஎம் தெருமரல் கலிப்பப்
பவ்வம் மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்கு
பிறந்துதவல் கற்றதன் தொட்டுச் சிறந்தநன்
நாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப[197]

*என்னும் வரிகளால் இதனை அறியலாம்.*

*அரசுரிமைக்கு தடை ஏற்படும்போது போர் நிகழப்பெறும் என அறியமுடிகிறது கோப்பெருஞ்சோழன் மைந்தர்கள் ஆட்சி உரிமைக்காகத் தன் தந்தையையே எதிர்த்து போரிட முன் வந்தான். இளவரசர் தமக்கு முறையாக வரும் அரசுரிமையை வேந்தர் தரும் முன்பே பெறுவதற்காகப் போர் நிகழ்த்துவர் என்பதை,*

பொங்குநீர் உடுத்த இம்மலர் தலை உலகத்து,
நின்தலை வந்த இருவரை நினைப்பின்,
தொன்று உறை துப்பின் நின் பகைஞரும் அல்லர்,
அமர் வெங்காட்சியொடு மாறு எதிர்பு எழுந்தவர்
நினையும் காலை, நீயும் மற்றவர்க்கு
அனையை அல்லை; அடுமான் தோன்றல்!
பரந்து படுநல் இசை எய்தி; மற்றுநீ
உயர்ந்தோர் உலகம் எய்தி பின்னும்
ஒழித்த தாயம் அவர்க்கு உரித்தன்றே[198]

*என்ற பாடலால் அறியமுடிகிறது.*

*சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையே நிகழப் பெற்ற போரிலிருந்து தன் உரிமையைப் பெறுவதற்கு அல்லது நிலை நாட்டுவதற்குத் தாயத்தாருடன் போர் நிகழ்த்தப்பெறும்.*

தன்னுடைய ஆற்றலையும், வலிமையையும் உணராது இகழ்ந்துரைத்தால் சோழன் நலங்கிள்ளி வெகுண்டு போருக்கு எழுவான் என்பதை,

உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்

துஞ்சு புலி இடறிய சிதடன் போல,

உய்ந்தனன் பொய்தலோ அரிதே[199]

என்னும் வரிகளால் அறியமுடிகிறது.

தன்னை இளையவன் என்று உளையக் கூறியதால் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போருக்கு எழுந்தான். இதனை,

நகுதக்கனரே நாடு மீக்கூறுநர்;

இளையவன் இவன் என உளையக் கூறி

படுமணி இரட்டும் பாஅடிப் பணைத் தாள்

நெடு நல் யானையும் தேரும் மாவும்

படை அமை மறவரும் உடையம் யாம் என்று

உறு துப்பு அஞ்சாது, உடல் சினம் கெழு வேந்தரை

அருஞ் சமம் சிதையத் தாக்கி[200]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகிறது. மாற்றார் தம் ஆற்றலை இகழ்வது கேட்டு அதனால் பாதிப்புக்கு உள்ளானவர்கள் விரைவாகப் போருக்கு எழுவார்கள். எல்லாவற்றானும் மூவேந்தரினும் புகழால் மேம்பட்ட பாரியை எதிர்த்து மூவேந்தரும் ஒன்று சேர்ந்து போரிட்டதிலிருந்து பொறாமை காரணமாகவும் போர்கள் நிகழ்த்திருக்கிறது. இதனை,

அளிதோ தானே, பாரியது பறம்பே!

நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்,

..........................................

ஆடினிர் பாடினிர் செலினே,

நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே[201]

கடந்து அடு தானை மூவிரும் கூடி

உடன்றனிர் ஆயினும், பறம்பு கொளற்கு அரிதே,[202]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றன.

புறநானூற்றில் மகட்பாற் காஞ்சித்துறைப் பாடல்களிலிருந்து பெண்கோடல் காரணமாகவும் போர்கள் நிகழ்ந்தன. மகள் வேண்டி வந்த வேந்தர்க்கு மகள் தர மறுத்தனன் மறவர்குல மகளின் தந்தை, இதனால் வெகுண்டு வேந்தன் போருக்குத் தயாராகி விட்டான். ஊரின் அழிவிக்கும் இப்போரே காரணமாகும். இதனை,

கயல் ஆர் நாரை உகைத்த வாளை
புனல் ஆடு மகளிர் வளமனை ஒய்யும்
ஊர்கவின் இழப்பவும் வருவது கொல்லோ[203]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகின்றது.

வெண்ணிப் பறந்தலை, வாகைப்பறந்தலை, கடற்பறந்தலை, தலையாலங்கானம், நெய்தலங்கானம், கருவூர், கானப்பேர், கழுமலம், தகடூர் என்னும் இடங்களில் நடைபெற்ற போர்களிலிருந்து ஏனைய வேந்தரைவிட தாமே தலைமைப் பெற வேண்டும் என்ற விருப்பமும் போருக்குக் காரணமாக இருந்ததை அறியலாம்.

### 1.6.2. போருக்காக பூச்சூடல்

தமிழர்கள் அடையாளப் பூவினைச் சூடிக் கொள்ளும் விருப்பம் கொண்டிருந்தனர். அதனைப் போரிலும் மேற்கொண்டனர். போரின் ஒவ்வொரு கட்டத்திலும் வெவ்வேறு வகைப் பூக்களைச் சூடிச் சென்றனர். அப்பூக்கள் மரப்பூக்களாகவும், பொற்பூக்களாகவும் இருந்தன. போர்த் தொடுப்போர், அவனை எதிர்ப்போர் படையெடுப்போர், மதிலைத் தாக்குவோர், அதனைக் காவல் செய்வோர் முறையே வெட்சி, கரந்தை, வஞ்சி, உழிஞை, நொச்சி ஆகியப் பூக்களைச் சூடினர். கைக்கலந்து இருபடையும் போர் செய்யும் போது தும்பைப் பூவையும் வெற்றி கொண்டோர் வாகைப்பூவையும் சூடினர்.

### 1.6.3. விரிச்சி கேட்டல்

வேந்தர்கள் போருக்குப் புறப்படுமுன் நற்சொல் கேட்டல் வழக்கம். போருக்குப் புறப்படும் முன் நறியப் பூக்களை நெல்லுடன் தூவிக் கைதொழுது வணங்கி விரிச்சிக் கேட்டு நிற்பர் என்பதை,

நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்

செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா[204]

என்னும் பாடல் வரிகளால் தெளிய முடிகிறது.

### 1.6.4. போரில் அறம்

சங்ககால வேந்தரும், பிறரும் போர் தொடங்குவதற்கு முன்னால் போர் செய்தியினை முரசறைந்து அனைவருக்கும் தெரிவிப்பர். போரின்போது மாற்றார் நாட்டிலுள்ள ஆநிரை, பார்ப்பர், பெண்டிர், பிணியுடையோர், மக்கட் பெற்றோர் ஆகியோர்களுக்குத் தக்கப் பாதுகாப்பும் அளிக்கப்பட்டது. அவர்களைப் போரிலிருந்து விளக்கி வைத்தனர்.

ஆவும் ஆன்இயற் பார்ப்பன மாக்களும்

பெண்டிரும், பிணியுடையீரும், பேணித்

தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்

பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்

எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்[205]

என்னும் பாடல் வரிகளால் இதனை அறியலாம்.

இதனால் தான் மாற்றார் நாட்டிலுள்ள பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருவது போரின் தொடக்க நிகழ்ச்சியாகப் போரின் போது பின்பற்றப்பட்டு வந்திருக்கின்றது.

பகைவர் அஞ்சி பின்வாங்குவார்களேயானால் அவர்களைக் கொல்லாமல் விடும் பண்பைச் சங்ககால வீரர்கள் பெற்றிருந்தனர். பேகனின் வீர ஆற்றலை கூறும்போது வீரர் அல்லாதார் புறமுதுகிட்டார். புண்பட்டார், மூத்தோர், இளையோர் மேல் போர் தொடுக்காது எதிர்நின்று பொரும் வீரரிடத்துப் போர் செய்யும் தன்மை உடையவன் என்பதை,

கொடை மடம் படுதல் அல்லது

படைமடம் படான் பிறர்படை மயக்குறினே[206]

என்னும் வரிகளால் உய்த்துணர முடிகிறது. இவ்வாறாக, போரில் அறம் என்ற நிலை பின்பற்றப்பட்டதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**1.6.5. போரின் விளைவுகள்**

*போரில் வெற்றி பெற்ற வேந்தர் தம் வெற்றிக்குப் பிறகு பகைவர் நாட்டினைத் தீக்கிரையாக்கிப் பாழாக்கினர். பகைவர் நாடுகள் பலவற்றைச் சேர மன்னர்கள் எரியூட்டி பாழாக்கியதைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.*

முனை எரி பரப்பிய துன் அருஞ் சீற்றமொடு[207]

பசும் பிசிர் அழல் ஆடிய மருங்கின்[208]

போர்கடு கமழ் புகை மாதிரம் மறைப்ப[209]

*என்னும் வரிகள் இதனைக் காட்டுகின்றன.*

*தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காற்றைப்போல விரைவாகச் சென்ற பகைவர் நாடு அழியும் படி எரியூட்டினான் என்பதை,*

கால் என்ன கடிதூரஅய்

நாடு கெட எரிபரப்பி

ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்து

அரசுபட உமர் உழக்கி[210]

*என்னும் பாடல் வரிகள் விளக்குகின்றன.*

*இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி நீர் வளமிக்க நன்னாட்டை எரியூட்டினான். இதனை,*

மயங்கு வள்ளை மலர் ஆம்பல்.

பனிப் பகன்றை கனிப் பாகல்

கரும்பு அல்லது காடு அறியாப்

பெருந்தண் பணை பாழ் ஆக

ஏம நல் நாடு ஒள் எரி ஊட்டினை[211]

*என்னும் பாடல் வரிகளால் காணமுடிகிறது.*

*கரிகாற்பெருவளத்தான் பகைவரது ஊரைத் தீக்கிரையாக்கிக் கொள்ளை அடித்துக் கொணர்ந்த பொருளை விரும்புவான். இதனை,*

எல்லையும் இரவும் எண்ணாய், பகைவர்

ஊர் சுடு விளக்கத்து அழு விளிக் கம்பலைக்

கொள்கை மேவலை[212]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகிறது.

பகைவர் நாடுகள் எரியூட்டப்படும்போது தோன்றும் சுடுநெருப்பானது ஒளி ஞாயிற்றினது செந்நிறம் போலத் தோன்றும் என்பதை,

ஏம நல் நாடு ஒள் எரி ஊட்டினை,

நாம நல் அமர் செய்ய

ஓராங்கு மலைந்தன[213]

என்னும் வரிகளால் பகைவர் நாடுகள் எரியூட்டப்பட்ட செய்தியை அறியமுடிகின்றது.

போரில் வென்ற மன்னர்கள் தோற்ற நாட்டினரின் அரண்களை அழித்து அவர்கள் வாழும் இடங்களைக் கழுதைக் கொண்டு உழுது வெள்ளை வரகும், கொள்ளும் விதைக்கும் மரபினை மேற்கொண்டிருந்தனர்.

வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி

வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்[214]

என்ற ஔவையாரின் பாடல் வரிகளால் இதனைக் காணலாம்.

பெரிய தேர் ஓடிய பகைவரின் பேரூர்த் தெருக்களைக் கழுதைகள் பூட்டிய ஏரால் உழுது பாழ் செய்தனர். விளைந்த பயன் தரும் நன்செய் நிலங்களிளெல்லாம் தம் குதிரைகளையும், யானைகளையும் நடத்திச் சென்று பாழ் செய்வர். இதனை,

கடுந்தேர் கழித்த ஞெள்ளல் ஆங்கண்

வெள் வாய்க் கழுதைப் புல் இனம் பூட்டி

பாழ் செய்தனை அவர் நனந்தலை நல் எயில்

புள்ளினம் இமிழும் புகழ்சால் விளை வயல்

வெள் உளைக் கவி மான் கவி குளம்பு உகளத்

தேர் வழங்கினை நின் தெவ்வர் தேஎத்து,

துளங்கு இயலான், பணை எருத்தின்

பரவு அடியான் செறல் நோக்கின்

ஒளிரு மருப்பின் களிறு அவர

காப்பு உடைய கயம் படியினை[215]

என்னும் பாடலால் அறியமுடிகிறது.

பகைவர் நாட்டிலுள்ள பொருள்களைத் தம்மால் இயன்ற மட்டும் வேந்தர் எடுத்துக் கொண்டு எஞ்சிய பொருள்களையும் விளை நிலங்களையும் அழித்து காவற்காடுகளையும் வெட்டி வீழ்த்துவர். இதனை,

வெளிறு இல் நோன் காழ்ப்பனை நிலை முனைஇ

களிறு படிந்து உண்டென, கலங்கிய துறையும்;

கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்

சூர் நவை முருகன் சுற்றத்து அன்னநின்

கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்

கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்

கொள்பதம் ஒழிய வீசிய புலனும்

வடிநலில் நவியம் பாய்தலின் ஊர்த்தோறும்

கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்[216]

என்ற கல்லாடனார் பாடல் வழி அறியலாம்.

வெற்றிபெற்ற படை மறவர் தோற்ற பகைவர் நாட்டில் புகுந்து கொள்ளையிடுவதை மரபாகக் கொண்டிருந்தனர் என பெருங்குன்றூர் கிழாரும் சுட்டுகிறார்.

நாடு அடிப்படுதலின் கொள்கை மாற்றி

அழல் வினை அனைந்த நிழலட லிடுகட்டி

கட்டலை வலிப்பநின் தானை உதவி.[217]

தமிழ் வேந்தர்களிடம் தோற்ற அரசர்களும், வீரர்களும் இழிவாக நடத்தப்பட்டனர் எனக் குமட்டூர் கண்ணனார் பாடலால் அறியலாம்.

பேரிசை மரபினாரியர் வணக்கி

நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ[218]

என்னும் வரிகள் இதனைப் புலப்படுத்துகின்றன. இரு கைகளையும், முதுகின் புறத்தே சேர்த்துக் கட்டித் தலையில் நெய்பூசி அவர்களது நகர மக்கள் காணும்படி அழைத்து

வந்தனர். சேரன் செங்குட்டுவன் பகைவர் நாட்டை அழித்து அந்நாட்டுப் பெண்களின் கூந்தலை அறுத்துக் கயிறாகத் திரித்து அக்கயிற்றினால் யானையைப் பூட்டிச் செலுத்தினான் எனப் பரணர் விளக்குகிறார்.

பல்இருங் கூந்தல் முயற்சியால்
குஞ்சர ஒழுகை பூட்டி வெந்திறல்[219]

என்னும் பாடல் வரிகளால் இதனை அறியலாம். இவ்வாறு சங்ககால வேந்தரும் வீரரும் தோற்றவரை இழிவாக நடத்தினர் என்பதை அறியமுடிகிறது.

## 1.7. தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் புற மரபுக் கூறுகள் என்னும் இவ்வியலில் ஆராய்ந்த செய்திகளிலிருந்து பின்வரும் உண்மைகள் தெரிய வருகின்றன.

சங்க இலக்கியங்கள் பண்புகள் நிறைந்த மக்களின் வாழ்க்கையை அழகாக எடுத்தியம்புகின்றன. மக்களுடைய வாழ்க்கை முறை அகம், புறம் என அக்காலத்தே இரண்டு கூறுகளாகப் பகுக்கப்பட்டிருந்தது.

தனி மாந்தர் ஒழுங்கினை அக வாழ்க்கையும், தனி மாந்தரின் சேர்க்கையான சமுதாய ஒழுங்கினைப் புறமும் வற்புறுத்தியது.

சங்க காலத்தில் வீரமே முதன்மையாகப் போற்றப்பட்டது. பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள், தொழில், விளையாட்டு ஆகிய யாவும் மறப் பண்புகளாகத் திகழ்ந்தன. இளைஞர்கள் போரென்றால் பூரித்தெழும் இயல்பினர். வேந்தன் போர்புலத்தில் தான் ஒருவனாய் நின்று பகைவரின் படைவெள்ளத்தைத் தடுத்து நிறுத்தியவனாக இருந்தான்.

சங்க காலத்தில் பெண்கள் வீரப்பண்புடன் விளங்கினர். வீரர் குடிப்பெண்கள் பெரு வீரர்களையே மணந்துகொள்ள விரும்பினர்.

சங்க கால வேந்தரிடத்தும் கொடைப் பண்பு உயிர்ப்பண்பாக விளங்கியது.

கடையெழு வள்ளல்களின் கொடைகளில் கொடைஞர் கொள்ள வேண்டிய நெறிமுறைகள், கொடை நோக்கம், கொடைப் பயன் முதலியவை விளக்கப்படுகின்றன.

பண்டைத் தமிழகத்தில், இக்காலத்தைப் போல், கல்வி அரசியல் களங்களுள் ஒன்றாக இருந்ததில்லை. எவ்வகையானும் கல்விக் கற்றல் சிறப்புடையது. ஆடவர் மட்டுமல்ல பெண்களும் கல்வி கற்றிருந்தமையை அறியமுடிகிறது.

சங்க வேந்தர்கள் அறமே நோக்கமாகக் கொண்டு ஆட்சிச் செய்தனர். அக்கால அரசாட்சி அறமே சாட்சியாகக் கொண்டு விளங்கியதைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

சங்க காலம் மக்களின் அடிப்படை வாழ்விற்குப் போரே ஆணிவேர் என்று மனித மனம் எண்ணியிருந்த காலம். போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகக் காட்சியளித்தது என்பதையும் உணர முடிகிறது.

சங்ககால வேந்தரும் பிறரும் போர்த் தொடங்குவதற்கு முன்னால் போர் செய்தியினை முரசறைந்து அறிவித்து அறப்போரை நிகழ்த்தினர். போரில் வெற்றி பெற்ற வேந்தன் வெற்றிக்குப் பிறகு பகைவர் நாட்டினைத் தீக்கிரையாக்கிப் பாழாக்கினர். பண்டைத் தமிழகம் வீரத்தின் விளைநிலமாகத் திகழ்ந்தாலும் போர்க்களம் பிணங்களைக் குவிக்கும் கொலைக்களமாகவே காட்சியளித்தது என்பதையும் உணரமுடிகின்றது.

## சான்றெண் குறிப்புகள்

1. சி.பாலசுப்பிரமணியன், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.36.
2. கா.வேங்கடராமன், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.101.
3. **புறம்.**, 312:1-4.
4. அரங்க.இராமலிங்கம், **சங்க இலக்கியத்தில் வேந்தர்**, ப.132.
5. **புறம்.**, 31:9.
6. **பதிற்.**, 19:3.
7. ந.சுப்பிரமணியன், **சங்க இலக்கியம்**, ப.136.
8. **புறம்.**, 100:10-11.
9. **திருக்.**, 776.
10. **புறம்.**, 314:5-7.
11. **தொல்.புறம்.**, 7.
12. **பதிற்.**, 90:37-39.
13. **புறம்.**, 297:8-10.
14. மேலது., 63:5.
15. **பதிற்.**, 14:12.
16. மேலது., 82:13.
17. இராம.குருநாதன், **புறநானூறு புதிய பார்வை**, ப.51.
18. **புறம்.**, 374:9.
19. **அகம்.**, 7:18.
20. **புறம்.**, 287:3-7.
21. மேலது., 284:4-8.
22. மேலது., 169:1-6.
23. மேலது., 31:5.
24. மேலது., 86:1-6.
25. மேலது., 90:3-5.
26. மேலது., 31:16-17.

27. புறம்., 52:1-6.

28. மேலது., 39:13-16.

29. பதிற்., 2:4.

30. புறம்., 338:6-9.

31. தொல்.புறம்., 5.

32. மேலது., 24:30-31.

33. புறம்., 340:6-9.

34. மேலது., 342:2.

35. கலித்., 102.

36. பதிற்., 40:5-6.

37. புறம்., 279: 7-11.

38. மேலது., 310:8.

39. மேலது., நூ.24.

40. மேலது., 277.

41. தொல்.புறம்., நூ.24.

42. பதிற்., 12:4-8.

43. தேவநேயப்பாவாணர், பழந்தமிழாட்சி, ப.88.

44. புறம்., 2:13-16.

45. அகம்., 233.

46. சிலப்., ப.121.

47. புறம்., 107:3-4.

48. திருக்., 211.

49. மணி., 17:91.

50. சீவக., 36.

51. புறம்., 142.

52. திருக்., 11.

53. புறம்., 203:1-6.

54. பதிற்., 60:8.

55. பதிற்., 55:10-16.
56. கலித்., 34.
57. புறம்., 101:1-8.
58. மலை., 452.
59. குறுந்., 176:1-2.
60. நற்., 385:5-6.
61. குறிஞ்சி., 238.
62. நற்., 332.
63. அகம்., 332.
64. மலை., 565-566.
65. புறம்., 106.
66. மேலது., 119:7.
67. மலைப்., 280.
68. புறம்., 119:5-7.
69. கலித்., 32.
70. புறம்., 125:7-8.
71. மேலது., 138:9-19.
72. கலித்., 28.
73. புறம்., 134.
74. மேலது., 141:14-15.
75. நாலடி., 98.
76. திணைமாலை, 123.
77. குறள்., 221.
78. சிறுபஞ்ச., 34.
79. மணி., 11-12.
80. புறம்., 331:6-10.
81. மேலது., 204:5-9.
82. மேலது., 154:1-5.

83. பதிற்., 61:18.

84. புறம்., 173:3-11.

85. மேலது., 70:13.

86. அகம்., 54.

87. மேலது., 117.

88. மேலது., 117.

89. புறம்., 334:6-7.

90. மேலது., 370:11.

91. மேலது., 42:19-21.

92. மேலது., 155:4-8.

93. பதிற்., 57:13-15.

94. குறுந்., 19:1-3.

95. புறம்., 237:6-9.

96. மேலது., 209:7-12.

97. மேலது., 207:3-11.

98. பொருந., 139-140.

99. புறம்., 70:16-20.

100. மேலது., 205:10-14.

101. கலித்., 50:10-11.

102. புறம்., 206:11-13.

103. மலைபடு., 60-61.

104. மேலது., 70-71.

105. பதிற்., 5:1-2.

106. புறம்., 122:5-7.

107. சிறுபாண்., 91-95.

108. புறம்., 126:1-4.

109. பதிற்., 48:1-7.

110. மேலது., 66:4-9.

111. புறம்., 180:10-14.

112. மேலது., 203:9-12.

113. மேலது., 165:9-13.

114. மேலது., 316:5-7.

115. இரா.சாரங்கபாணி, சங்கத் தமிழ் வளம், ப.57.

116. புறம்., 200:9-12.

117. மேலது., 201:2-5.

118. மேலது., 118:5.

119. மேலது., 114:6.

120. சிறுபாண்., 80-91.

121. புறம்., 152:21-22.

122. மேலது., 153:1-5.

123. சிறுபாண்., 109-111.

124. புறம்., 122:9-10.

125. மேலது., 121:3-6.

126. மேலது., 6:16.

127. மேலது., 24:30.

128. மேலது., 47:6.

129. சிறுபாண்., 217.

130. குறள்., 528.

131. நான்மணி., 67.

132. புறம்., 124.

133. சிறுபாண்., 93-95.

134. புறம்., 91:7-11.

135. மேலது., 103:10-11.

136. சிறுபாண்., 100-113.

137. மேலது., 84-87.

138. மேலது., 96-99.

139. புறம்., 149.

140. சிறுபாண்., 104-107.

141. பதிற்., 61:12-13.

142. புறம்., 3:24-26.

143. மேலது., 22:31-33.

144. மேலது., 376:14-18.

145. மேலது., 163:6-7.

146. காசிலிங்க முதலியார், காஞ்சி தமிழ் மொழியகராதி, ப.403.

147. கழகத்தமிழ் அகராதி, ப.92.

148. இராம.குருநாதன், பழந்தமிழாட்சி, ப.106.

149. பி.குப்புசாமி, சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம், ப.361.

150. புறம்., 183.

151. மேலது., 346:3.

152. ந.கடிகாசலம் (ப.ஆ.), சங்க இலக்கியம், ப.183.

153. புறம்., 325:11-14.

154. கலித்., 83:3.

155. புறம்., 334:3.

156. கலித்., 38:19.

157. அகம்., 207:13.

158. தொல்.பொருள்., நூ.495.

159. ஐங்குறு., 371:4.

160. அகம்., 5:16-17.

161. தொல்.பொருள்., 214.

162. புறம்., 55:10.

163. ஐங்குறு., 7:2.

164. புறம்., 108:4.

165. கலித்., 139:2-3.

166. புறம்., 145:7.

167. அகம்., 173:1.

168. நற்., 68:3.

169. கலித்., 140:34.

170. புறம்., 35:14.

171. கலித்., 16:22.

172. புறம்., 28:15-17.

173. மேலது., 31:1-2.

174. மேலது., 171:11.

175. மேலது., 381:23-24.

176. பதிற்., 59:16-17.

177. புறம்., 357:7-10.

178. பொருந., 230.

179. பெரும்., 36.

180. புறம்., 175.

181. மேலது., 76:1-2.

182. மேலது., 89:7-9.

183. பதிற்., 66:14.

184. புறம்., 93:7-11

185. மேலது., 74:7-11.

186. மேலது., 306:6-7.

187. இரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தன், ப.134.

188. புறம்., 8:2-4.

189. மேலது., 31:1-4.

190. மேலது., 58:24-28.

191. மேலது., 367:12-14.

192. மேலது., 35:4-5.

193. புறம்., 45.

194. நா.பழனிவேலு, சங்கப் புற இலக்கியங்களில் சமூகச் சித்தரிப்புகள், ப.37.

195. தொல்.பொருள்., 64:2-3.

196. புறம்., 8:1-3.

197. பொருநர்., 130-138.

198. புறம்., 213:3-11.

199. மேலது., 73:6-8.

200. மேலது., 72:1-8.

201. மேலது., 109.

202. மேலது., 110:1-2.

203. மேலது., 354:5-7.

204. மேலது., 280:6-7.

205. மேலது., 9:1-5.

206. மேலது., 142:5-6.

207. பதிற்., 25:7.

208. மேலது., 25:7.

209. மேலது., 71:10.

210. மதுரைக்காஞ்சி, 125-128.

211. புறம்., 16:13-17.

212. மேலது., 7:7-9.

213. மேலது., 16:7-9.

214. மேலது., 392:9-10.

215. மேலது., 15:1-10.

216. மேலது., 23:1-10.

217. பதிற்., 81:15-17.

218. மேலது., 2:7-9.

219. மேலது., 5:16-17.

## இயல் 2

# பரிசிலர்களும் பரிசில்களும்

### 2.0. முன்னுரை

சங்க காலத் தமிழ்ச் சமுதாயத்தில் பல்வேறு புலவர்கள் தம் புலமைத் திறத்தால் வேந்தர்களைப் பாடிப் பரிசில்கள் பெற்றுள்ளனர். அவ்வாறே பல்வேறு கலைஞர்களும் இசை, கூத்து, பாட்டு, நாட்டியம் போன்ற பல கலைகளைப் போற்றி வளர்த்துள்ளனர். இக்கலையை வளர்த்த கலைஞர்கள் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் முதலியோராவர். இவ்வாறு புலவர்களும், கலைஞர்களும், பரிசிலராகத் திகழ்ந்தனர். அவர்களின் வாழ்க்கை நிலை குறித்தும், அவர்கள் பெற்ற பரிசில்கள் குறித்தும் இவ்வியல் ஆராய்கிறது.

### 2.1. பரிசில் பெறுவோரைக் குறிக்கும் சொற்கள்

சங்க இலக்கியத்தில் பரிசில் பெறுவோர்களைப் பரிசிலர், இரவலர், புலவாணர், சான்றோர் போன்ற பல சொற்களைக் கொண்டு அழைத்தனர் என்பதை அறியமுடிகின்றது.

### 2.2.1. பரிசிலர்

பரிசிலர் என்னும் சொல் புலவர், பாணர் முதலான கலைஞர்களைக் குறித்து பொதுவாக வழங்கப்பட்டது.

> மக்களால் வரிசை தந்து நன்கு மதிக்கும் உயர்ந்த பரிசுடையாராதலின்
> இவர்களைப் பரிசிலர் என்ற பெயரால் தமிழர் பாராட்டப் போற்றுவாராயினர்[1]

என்ற கருத்து நிலவியது.

புலவரையும், கலைஞரையும் பரிசர் என்று சுட்டாது பரிசிலர் என்றே சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. இதற்குப் பரிசில் என்பதையே அடிச்சொல்லாகக் கொள்ளவேண்டும். பரிசம் என்னும் சொல் செல்வம் என்னும் பொருளில்

வழங்கப்பட்டது. இதனைக் "கலம் தந்த பொற் பரிசம்"[2] என்ற பரணரின் பாடல் வரியால் காணலாம்.

### 2.1.2. இரவலர்

இரவலர் என்னும் சொல்லும் புலவர், பாணர் முதலான பலரையும் குறிக்கும் பொதுவான சொல்லாகவே வழங்கப்பட்டது. இதனை,

இரவலர் மெலியாது ஏறும் பொறையன்[3]
இரவலர் வாரா வைகல்[4]
வறிது கூட்டு அரியல் இரவலர்த் தடுப்ப[5]
நின் நசை வேட்கையின் இரவலர் வருவர்[6]

என்ற பாடல் வரிகளால் காணலாம்.

சேரமான் செங்குட்டுவன் இருந்த ஆரவாரமுடைய பழைய ஊரில், அவ்வூர்க்கு உரியவர் போலக் காலம் பாராது, பல முறை அணுகி அவனுடைய அவைக் களத்தே செம்மாந்த தலையுடன் புகுதல் இரவலர்க்கு எளிது என்பதை,

எம் கோன் இருந்த கம்பலை மூதூர்,
உடையோர் போல இடையின்று குறுகி,
செம்மல் நாள் அவை அண்ணாந்து புகுதல்
எம் அன வாழ்க்கை இரவலர்க்கு எளிதே;[7]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

தம் வறுமை காரணமாகப் பிறர் செய்யும் அருளை மட்டுமே நம்பி வாழும் இரவலர்க்கும், அறிவு வளமும், ஒழுக்கச் சிறப்பும், சமூகத் தகுதியும் வாய்ந்த புலவர்களுக்கும் வேறுபாடு உண்டு. இரத்தல் என்னும் சொல்லின் பொருள் கேட்டல் என்பதேயாகும். இதனை,

குடி புரவு இரக்கும் கூர்இல் ஆண்மை[8]

என்ற வரிகளில் குடிகளின் பால் மன்னன் வரிகேட்டலை இரத்தல் என்னும் பொருளில் உணர்த்துவதைக் காணமுடிகின்றது.

### 2.1.3. புலவாணர்

புலவருக்குப் பரிசிலர், இரவலர் போன்ற பல்வேறு பெயர்கள் சங்க காலத்தில் வழங்கப்பட்டிருந்தன. அதிலும் புலவர்களைப் புலவாணர் என அழைக்கும் வழக்கம் அருகிக் காணப்படுகிறது. இதனை,

நகைப் புலவாணர் நல்குரவு அகற்றி[9]

என்ற செய்யுள் அடிகளில் குண்டுகட் பாலியாதன் என்னும் புலவர் 'புலவாணர்' என்ற சொல் கையாளுவதைக் காணமுடிகிறது.

புலவாணர் என்ற சொல் புலவருக்கு மட்டுமல்லாது இசைக் கலைஞரான பாணனுக்கும், கட்டிடக் கலைஞர்களுக்கும் வழங்கியிருப்பதை நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இதனை,

நூலறி புலவர் நுண்ணீதிற் கயிறிட்டு[10]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

இவ்வாறாக, புலவாணர் என்ற சொல் கலைஞர்களைக் குறிப்பாகக் கூறினாலும், அச்சொல் கவிதைக்குக் கலைஞராகத் திகழும் புலவர்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டது என்பதைத் தெளிய முடிகின்றது.

### 2.1.4. சான்றோர்

புலவர்களைக் குறிக்க வழங்கிய பிற சொற்கள் சான்றோர்; பரிசிலர், இரவலர் என்பனவாகும். "சால் என்னும் சொல்லுக்கு நிறைவு என்பது பொருளாகும்"[11] எனவே, அறிவானும், ஒழுக்கத்தானும் நிறையுடையோர்களையும் அறிவில் முழுமை பெற்றவர்களையும் குறிப்பதற்குச் சான்றோர் என்னும் சொல்லை ஆண்டனரெனத் தெரிகின்றது.

உயரிய ஒழுக்கத்திற்குச் சான்றாக நிற்கத் தக்கார் என்னும் பொருளில் சான்றோர் எனப்பட்டனர் எனினும் பொருந்தும். சான்றோர் என்னும் சொல் பண்டு வீரர்களையும் குறித்தது. இதனை,

தேர்தர வந்த சான்றோர்[12]

என்னும் வரிகள் தெரிவிக்கின்றன. ஒழுக்கத்தை நடையென்று குறித்தல் மரபு. இச்சொல் பண்டு போர்ப் பயிற்சியையும் குறித்தது எனலாம்.

நன்னடை நல்கல் வேந்தருக்குக் கடனே[13]

என்னும் வரியில் மக்களுக்கு ஒழுக்கத்தினைப் போதிக்கும் குருவாக வேந்தன் விளங்கவேண்டும் என்பதும்; அதுவே அவனது கடமையாகும் என்பதையும் தெளிவுப்படுத்துகின்றன. இதனால் அறிவாளரும், வீரர்களும் சமமாக மதிக்கப்பட்ட நிலைப் புலப்படுகின்றது.

ஒரு நாட்டின் பண்பட்ட மரபுகளைக் கட்டிக் காக்கும் காவலராயும், வாழ்வுக்குக் கரையமைத்து ஒழுங்குப்படுத்தும் பொறுப்பாளராயும் விளங்குவோர் கற்றறிந்த சான்றோர்களாகப் புலவர்கள் திகழ்ந்தனர். இதனை நன்குணர்ந்த சங்ககாலச் சமூகம் புலவர்களுக்கு மிகப் பெரிய சிறப்பளித்தது எனலாம்.

"தம் திறமையை வெளிப்படுத்திச் செல்வரிடமும், மன்னரிடமும் பரிசில் கேட்போர் என்ற அளவிலேயே புலவர்கள் இரவலர் எனப்பட்டனர்."[14] என்பதும் பெறலாகின்றன.

## 2.2. பரிசில் பெறுவோர்

சங்க இலக்கியத்தில் பரிசிலரின் வாழ்க்கைக் குறிப்பிடத்தக்கனவாய் அமைந்துள்ளது. புலவர், கலைஞர், பொருநர், விறலியர், கூத்தர் போன்றோர் பரிசில் வாழ்க்கை மேற்கொண்டனர் என்பது அறியலாகின்றது.

### 2.2.1. புலவர்

செய்யுள் இயற்றும் ஆற்றல் உடையாரைக் கவிஞர் என்றும், பாவலர் என்றும் குறிப்பது பிற்கால மரபாகும். சங்க காலத்தில் அறிவாளர் என்னும் நோக்கில் தான் புலவர் என அழைக்கப்பட்டனர்.

பாணர் தாமரை மலையவும், புலவர்
பூநுதல் யானையொடு புனை தேர் பண்ணவும்[15]

என்ற பாடல் வரிகளால் இதனை அறிய முடிகின்றது.

புலவர்கள் பல்வேறு துறையில் அமைந்த பாடல்களைப் பாடுவதில் வல்லவர்கள் அவர்கள். சங்க மன்னர்களின் ஆற்றல்களைத் தன் அறிவுத் திறனால் பாடியவர்களாவர்.

புலம் என்ற சொல்லுக்கு அறிவு என்று பொருள். புலவர் என்ற சொல் வழக்கு கூட புலம் என்ற சொல்லிலிருந்து தோன்றியிருக்க கூடும் எனக் கருதலாம். புலவர்கள் அகமாயினும் புறமாயினும் பல்வேறு திணைத் துறைகளைப் பாடுவதில் சிறப்பு வாய்ந்தவர்கள்.

எல்லா துறைகளிலும் பாடி, இனி பாடுவதற்கு எந்த துறையும் இல்லை என்று கூறக்கூடிய அளவிற்குப் பெருமை வாய்ந்தவனாகக் கானப்பேர் எயிர் கடந்த உக்கிரப் பெருவழுதி விளங்கினான். இதனை,

ஆடு கொளக் குழைந்த தும்பை, புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே![16]

என்ற செய்யுள் அடிகளில் ஐயூர் மூலங்கிழார் புகழாரம் சூட்டி மகிழ்ந்தார் என்பதனைச் சங்கப் பாடலடிகளில் அறிய முடிகிறது.

வேந்தர்கள் புலவர் தம்மைப் பாடுவதைப் பெருமையாக எண்ணினர். மக்களின் எண்ணங்களைப் புலவர்களின் வாயிலாகக் கேட்டறிந்து வறுமையைப் போக்கும் வள்ளல் தன்மையராய் விளங்கினார்கள்.

புலவரால் பாடப்பெறும் வேந்தர்கள் புகழுடையோராய் வாழ்ந்தனர். அப்படி பாடப்பட்டோர் விண்ணுலக சொர்க்க உலகத்தை அடைந்து இன்புறுவர் என்றும் நம்பினர். புகழில்லாதார்க்கு மேலுலகு இல்லை என்பது மரபு.

சோழன் நலங்கிள்ளி என்ற மன்னன் வறுமையால் வருந்தி வந்தோர்க்குப் பொருளை மனம் நிரம்ப அருளுடன் அளிப்பவன். மேலும் அவ்வரசன் வானின்கண் செலுத்துபவன் இல்லாது தானே இயங்கும் வானவூர்தியில் செல்லும் புகழுடையவன் என உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியுள்ளார். இதனை,

புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்ப தம் செய்வினை முடித்து[17]

இவ்வரிகளால் புலவருக்கு வறுமையைப் போக்கி, அவர்களின் வாக்கிற்கிணங்க வாழும் வேந்தர்கள் விண்ணுலகை அடைவார்கள் என்பதை அறியமுடிகின்றது.

### 2.2.2. புலவரின் செல்வாக்கு

புலவர்கள் தங்களின் அறிவாற்றலைப் பெரும்பாலும் நாடாளும் வேந்தன் வாயிலாக மக்களின் நலனுக்கும், உயர்வுக்கும் பயன்படுத்தினர். இவர்கள் தங்களின் கூர்ந்த அறிவு ஆற்றலினாலும், வருவது உரைக்கும் திறத்தினாலும், உயரிய சிந்தனையினாலும் வேந்தரிடம் பெருமதிப்புப் பெற்றிருந்தனர். தங்களது ஒழுக்கத்தினாலும், சான்றாண்மைக் குணங்களினாலும் மக்களிடம் மிகுந்த மதிப்பைப் பெற்றிருந்தனர்.

> பூர்வீகச் சமுதாயங்களில் புலவர்களே அறிஞர்களாகவும் விளங்குவதால் அவர்க்கும் அவரது வாக்குக்கும் மன்னர்களிடையிலும், மக்களிடையிலும் செல்வாக்கு காணப்படுவது இயற்கையே எனலாம்.[18]

மக்களுடைய சமுதாய வாழ்க்கையில் புலவர்கள் பெரும்பங்கு பெற்றனர். பொதுக் கல்விக்குப் புலவர்களே நிலைக்களனாக இருந்தனர் என்பதை,

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக[19]

என்ற தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாடலால் அறியமுடிகிறது.

சங்க காலத்தில் ஐநூறுக்கும் மேற்பட்ட புலவர்கள் இருந்திருக்கின்றனர். புலவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட வேந்தரையும், குறுநில மன்னரையும், சீறூர்த் தலைவரையும் பாடியுள்ளனர். புலவர்களால் பாடப்பட்ட புலவரர்களிடையே கருத்து வேறுபாடுகளும், மோதல்களும் நிகழ்ந்தனவே தவிர, பாடிய புலவர்களுக்குள் இணக்கமான நிலையே நிலவியது.

ஒருவனைப் புகழ்ந்து பாடிய பல புலவர்களுக்குள் தகுதி, திறமை, புலமை அடிப்படையில் எவ்விதமான கருத்து வேறுபாடுகளும், மனத் தாங்கலும் உருவாகவில்லை.

புலவர்கள் அவரவர்கள் வாழுகின்ற பகுதியினுடைய ஆட்சியாளர்களால் தங்களைப் பற்றி மட்டும்தான் பாட வேண்டும்; வேற்று நாட்டவரைப் பாடக்கூடாது என்பது கட்டுப்பாடுகள் எதற்கும் உள்ளாக்கப்படவில்லை என்பதும் சங்க இலக்கியங்கள் பகருகின்றன.

### 2.2.3. சமூகப் பிரிவு குறுக்கீடின்மை

புலவர்கள் பல்வேறு சமூகப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் எனினும் அவர்களிடையே ஏற்றத்தாழ்வுகள் சிறிதுகூடத் தலைக்காட்டவில்லை. புலவர்களிடையே நிலவிய உறவுக்கும், தொடர்புக்கும், கேண்மைக்கும் அவர்களின் சமூகப் பிரிவு குறுக்கீடாகவோ, தடையாகவோ அமையவில்லை என்பதைச் சங்க இலக்கியங்கள் பகருகின்றன.

கற்றுத்தெளிந்த அறிஞரிடையே மலரவேண்டிய நட்பிற்குச் சாதியும், சமயமும் எக்காலத்தும் குறுக்கீடாக இருக்கமுடியாது என்பதைக் காட்டுவதாகச் சங்க காலப் புலவர்களின் வாழ்வியல் அமைந்துள்ளது.

புலவர்களிடம் அமைந்துள்ள சிறப்பான பண்புகளில் குறிக்கத்தக்கது அழுக்காறு இன்மையாகும். ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்து தெளிந்து பிறர் நலத்தைத் தயங்காது வெளியிட்டனர். தன்னை ஒத்த மற்ற புலவர்களின் பெருமையைக் கூறினால் எங்கே தன் பெருமை மங்கிவிடுமோ என்று அஞ்சாமல், துணிந்து மற்றவர்களின் பெருமையையும் புகழையும் சிறப்பான பண்புகளையும் குறிப்பிட்டனர். பிறர் பெருமையைச் சிறப்பித்துக் கூறிய பெருந்தகைமையாளர்கள்.

கபிலர் இளங்கோவேனிடம் அவனது முன்னோர்களில் ஒருவன் புகழ்மிக்க கழாத்தலையாரை இகழ்ந்ததால்தான் சிற்றரையம், பேரரையம் எனும் இரு பகுதியையுடைய வளமிக்க ஊரான அரையம் அழிந்தது. இதனை,

> கோடி பலஅ டுக்கி பொருள் நுமக்கு உதவிய
> நீடு நிலை அரையத்துக் கேடும் கேள்[20]
> நும் போல் அறிவின் நுமருள் ஒருவன்

புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை

இகழ்ந்த தன் பயனே இயல்தேர் அண்ணல்[21]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றது. இவ்வடிகளில் கபிலர் கழாத்தலையாரின் பெருமையைச் சிறப்பித்துள்ளார்.

### 2.2.4. புலவரே புலவரைப் போற்றுதல்

மாறோக்கத்து நப்பசலையார், மலையமான் திருமுடிக்காரியைப் பாராட்டிப் புகழ்ந்து பாடும்போது கபிலரைப் புகழுகிறார். உலகிலுள்ள மக்கள் எல்லாரிலும் அறிவில் மாசற்ற அந்தணனாகிய கபிலர் என்று பாராட்டிப் புகழ்ந்துள்ளார்.

நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்

புலன் அழுக்கற்ற அந்தணாளன்[22]

ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சியின் கோவலூர் வெற்றியைப் புகழ்ந்து பாடினார். இதிற் பரணரால் அவன் பாராட்டிப் பாடப் பெற்றதைப் பெருமையுடையதாகக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

அன்றும் பாடுநர்க்கு அரியை; இன்றும்

பரணன் பாடினன்[23]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றது.

இவ்வாறு சங்ககாலப் புலவர்கள் தம்மை ஒத்த மற்றைய .புலவர்களை மனம் திறந்து பாராட்டிப் புகழும் உயர் பண்பாளர்கள் என்பதை அறியமுடிகின்றது.

### 2.2.5. துன்பம் கண்டுக் கலங்காமை

புலவர்கள் தங்களது பாடல்களில் உண்மையும், உயிர்த்துடிப்பும், ஊடாடி நிற்கும் உணர்ச்சி மிகுந்த பொருளையே பாடற் பொருளாக எடுத்துக்கொண்டனர். இத்தகைய இலக்கியப் பாடுபொருளையே சமுதாயத்திற்கு மிகப் பழங்காலம் முதலே தமிழ்ப் புலவர்கள் தந்துள்ளனர். இதனால் இன்பம் கண்டபோது அதில் திளைத்துத் தம்மை மறப்பதோ, துன்பம் வந்தபோது துவண்டு விடுவதோ இல்லாமல் தம் கடமையை ஆற்றினர்.

பாடுவதைத் தொழிலாகக் கொண்ட பெரும்பான்மையான புலவர்களிடத்து வறுமையும் குடிக்கொண்டு இருந்தது என உருத்திர கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்.

பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோல்
கோள்வல் பாண்மகன் தலைவலித்து யாத்த
நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇக்
கொடுலாள் இரும்பின் மடிதலைப் புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை[24]

என்ற வரிகளால் இதனை அறியமுடிகிறது.

அரசன் குடிமக்களைப் பாதுகாத்தற்கு அடுத்தபடியாகத் தன்னைப் பாக்களால் புகழ்ந்து பாடும் இரவலர்களால் சூழப்பட்டிருந்தான். புலவர்கள் அரசனிடத்து தன் கிழிந்த அழுக்கேறிய கந்தல் துணியையும், ஈரும், பேனும் அதில் ஓட்டியுள்ள நிலையையும், பசிக் கொடுமையையும் எடுத்துக் கூறிப் பரிசில் வேண்டுவர் என்பதை,

உண்ணாமையின் ஊன் வாடி
தெண் நீரின் கண் மல்கி
கசிவுற்ற என் பல் கிளையொடு
பசி அலைக்கும் பகை ஒன்று என்கோ?
அன்ன தன்மையும் அறிந்தீயார்
நின்ன தா என நிலை தளர[25]

என்ற பாடல் வரிகளில் காணமுடிகின்றது. இவ்வாறு புலவர்களின் நிலை சங்கப் பாடல்கள் பலவற்றில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

## 2.3. கலைஞர்கள்

சங்ககாலத் தமிழ்ச் சமுதாயத்தில் பல்வேறு கலைஞர்கள் வாழ்ந்த பல கலைகளைப் போற்றி வளர்த்துள்ளனர். அக்காலத்தில் இசை, கூத்து, பாட்டு, நாட்டியம் போன்ற கலைகள் செழித்து வளர்ந்திருந்தன.

சங்க காலம் ஒரு பொற்காலம் என்றாலும் கலைஞர்கள் வறுமையால் வாடியுள்ளனர். அவர்கள் பேராசை கொண்டு திரியாமல் வாழ்வாங்கு வாழ்ந்தனர். கலைஞர்கள் எனப்படுவோர்,

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்

ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்

பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்

சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்[26]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் சுட்டும் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்பவரோடு கற்றறிந்த புலவரும் சேர்க்கப்படுவர். இவர்கள் கற்றுத்துறைப் போகியவர்கள். புதுவது புனையும் ஆற்றல் மிக்கவர்கள். வேந்தருக்கு அரசு நெறி கூறும் அறிவுத்திறன் மிக்கவர்கள். வயிற்றிற்காக வாழாத வளமான சிந்தனை மிக்கவர்களாகத் திகழ்ந்தார்கள்.

## 2.3.1. கலைஞரில் இரு வகையினர்

சங்க காலத்தில் கலையை வளர்த்த கலைஞர்கள் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் முதலியோராவர். இக்கலைஞர்களைப் பற்றிப் பத்துப்பாட்டிலுள்ள பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன.

கலைஞர்களை உணர்ச்சிக் கலைஞர் என்றும். அறிவுக் கலைஞர் என்றும் இரு வகையினராகப் பிரிக்கலாம். கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்போரை உணர்ச்சியூட்டி இன்புறுத்தும் உணர்ச்சிக் கலைஞர் வகையிலும், புலவரை அறிவு கொளுத்தி இன்புறுத்தும் அறிவுக் கலைஞர் வகையிலும் சேர்க்கலாம்[27]

என கலைஞர்களை இரு வகைகளாகப் பிரித்தனர் என்பது பெறலாகின்றது.

## 2.3.2. கலையே பொழுதுபோக்கு

சங்க காலத்தும் சங்கம் மருவிய காலத்தும் கலை ஒரு சாராருக்கே அமைந்திருந்தது எனக் கூற முடியாது. செல்வக் குடியினரும், அரச மரபினரும் கலையினைப் பொழுது போக்கிற்காகக் கற்று மகிழ்ந்தனர்.

பதிற்றுப்பத்துள் வரும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் செல்வக் குடியில் வந்தனன். குடகு நாட்டின் தலைவனாக விளங்கியவன். வேளாவிக் கோமான் மகள் பெற்றெடுத்த பெருமைக்குரிய மகன் என்பதை,

குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு வேோள்

ஆவிக்கோமான் தேவி ஈன்ற மகன்[28]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது. இவ்வாறு கலைஞர்களுக்கு மட்டும் கலை உரியது என்று எண்ணம் தெளிந்து அரசர்களுக்கும், எல்லோருக்கும் கலையே பொழுது போக்காக விளங்கிய நிலையினைத் தெரியமுடிகிறது.

### 2.3.3. கலையில் வேந்தனின் ஈடுபாடு

ஆடுகோட்பாட்டு சேரலாதன் என்பதை 'ஆடுதலைக் கொள்கையாக உடைய சேரலாதன்' என்ற பொருளினும் பொருள் கொள்ள முடிகிறது. இதற்குச் சேரலாதனின் கலை ஈடுபாட்டும் கலைத் தேர்ச்சியும் சுட்டிக்காட்டுவதைக் காணலாம்.

ஒளி பொருந்திய நெற்றியும், மான்போன்று மருண்ட பார்வையும், ஒளிவீசும் பற்களும், அமுதத்தைப் பொதிந்து வைத்தது போன்ற சிவந்த வாயும், அசையும் அன்ன நடையும் கொண்ட நாடக மகளிர் இன்னிசை பாட சேரலாதன் பனைமரச் சோலைப் பந்தலில் நெடுநாள் தங்கினான். இப்படி ஆடல் பாடலில் இன்புற்றிருப்பதைக் கண்டு உண்மையான மன இயல்பறியாதவர்கள், வெற்றிதரும் வேலேந்திய சேரமான் ஐம்புலனிச்சைக்கு ஆட்படும் மென்மையானவன் போலும் என்று நினைப்பார்களோ? நினைக்கமாட்டார்கள் என்பதை,

சுடர்நுதல், மட நோக்கின்

வாள்நகை இலங்குஎயிறு

அமிழ்து பொதி துவர் வாய் அசை நடை விறலியர்

பாடல் சான்று நீடினை உறைதலின்

வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்ம்! என

உள்ளவர்கெல்லோ நின் உணராதோரே?[29]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இதில் சேரலாதனின் கலை ஈடுபாட்டை அறியமுடிகின்றது.

விழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகின்ற ஊர் நடுவிலான இடம். அங்கே இசைவாணர் மத்தளம் வாசி, ஆடல்கலை வல்லவன் அல்ல என்றாலும் எழுந்து

ஆடினான். அவன் வெற்றித் தலைமாலை வாழ்வதாக எனப் புலவர் வாழ்த்துகின்றார். இதனை,

விழவு வீற்றிருந்த வியலுள் ஆங்கண்
கோடியர் முழவின் முன்னர் ஆடல்
வல்லான் அல்லன்! வாழ்க அவன் கண்ணீர்![30]

என்னும் பாடல் வரிகள் தெளிய வருகின்றது. இதில் சேரலாதனின் கலைத் தேர்ச்சியினைக் கண்டு கொள்ள முடிகின்றது. சேரலாதன் வெறித்தனத்தோடு போர்க் களத்திலும் ஆடலை மேற்கொள்வான். இதனை,

வீந்து உகு போர்க்களத்து ஆடும் கோவே[31]

என்னும் பாடல் வரியால் காணமுடிகின்றது.

### 2.3.4 சேரனின் துணங்கைக் கூத்து

சேரலாதன் செல்வ வளமெல்லாம் விளங்கித் தோன்ற; எரியும் பாண்டில் விளக்கொளியில்; மகளிர் துணங்கைக் கூத்தாட; அவர்களைத் தாங்கும் தெப்பம் போல; ஒலிக்கும் வீரக்கடகம் அணிந்த முதற் கையினைக் கொடுத்தாய். அதனை ஏற்காது அவன் நெருக்கத்தைத் தவிர்க்க ஊடினாள் எனப் புலவர் பாடியுள்ளார்.

சுடரும் பாண்டில் திருநாறு விளக்கத்து
முழாஇமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணைஆக
சிலைப்பு வல் ஏற்றின் தலைக் கைதந்து, நீ
நளிந்தனை வருதல் உடனறளள் ஆகி[32]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இதில் துணங்கைக் கூத்தாடியைப் பார்த்து அம்மகளிரோடு கொண்டுள்ள நெருக்கத்தையும் எடுத்து இயம்புகிறது.

சேரலாதன் போர்க் களத்தில் வீரர்களோடு துணங்கை எனும் வெற்றிக் கூத்தாடியதால் துணங்கைக் கூத்தில் தேர்ச்சிப் பெற்றுள்ளான் எனப் புலவர் குறிப்பிட்டுள்ளதை,

துணங்கை ஆடிய வலம்படு கோமான்[33]

என்னும் பாடல் வரியால் அறியலாம். இவ்வாறு கலைத்துறையில் வேந்தரும் ஈடுபட்டு வந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

## 2.4. பாணர்கள்

பாண் என்றால் இசை என்று பொருள். இசைபாடுவோர் பாணர் என அழைக்கப்பெற்றனர். இவர்கள் நகர்ப்புறங்களில் பொதுமகளிருடன் வாழ்ந்தனர் என சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

### 2.4.1. பாணர்களில் மூன்று வகையினர்

> பாணருளும், இசைப்பாணரும், யாழ்ப்பாணரும் மண்டைப் பாணருமெனப் பலராம்.[34]

பாணர்களில் இசைப்பாணர், மண்டைப்பாணர், யாழ்ப்பாணர் எனப் பல பிரிவினர் உள்ளனர். வாய்ப்பாட்டுப் பாடிப் பிழைப்பவர் இசைப்பாணர், யாழ்மீட்டி வாழ்பவர் யாழ்ப்பாணர்.

மண்டை என்னும் பாத்திரத்தை வைத்திருப்பவர் மண்டைப் பாணர் ஆவர்.[35]

பாடும் கலைஞர் பாணர் எனப்படடனர். அவற்றின் சிறிய யாழை உடையவர் சிறுபாணர். இனிய ஓசையை உடைய சிறிய யாழை இடப்பக்கத்தில் தழுவிப் பண்ணை இயக்குதல் வல்ல பாணன் சிறுபாணன் எனப்பட்டான். இதனை,

> இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ[36]

என்னும் நத்தத்தனாரின் வரியால் அறியமுடிகிறது.

பெரிய யாழை உடையவன் பெரும்பாணன். இடப்பக்கத்தில் தழுவுதலையுடைய பேரியாழை இயக்கு முறையான் இயக்கினான். இதனை,

> இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்[37]

என்ற உருத்திர கண்ணனாரின் வரியால் உணரலாம்.

யாழ்ப்பாணர் போர்க்களத்தே அரசரது செல்வ மிகுதியைப் புகழ்ந்து பாடுவது உண்டு. அது களவழி வாழ்த்து எனப்படும். இவர்கள் விடியற்காலையில் அரசரைப் புகழ்ந்து துதிபாடித் துயில் எழுப்புவது வழக்கம். இது துயிலெடை மங்கலம் எனப்படும். இவர்கள் போர்களில் சிறந்த வீரர்களின் ஆற்றல் தோன்றப் பாடும் பாட்டு பாண்பாட்டு எனப்படும். பாணர்கள் நகருக்கு நகர் சென்றபோது அவர்கள்

மனைவியரும், பிள்ளைகளும் அவர்களுட ன் உணவுக்கலமும் சமையற்கலமும் தூக்கிக் கொண்டு புறப்பட்டுச் சென்றனர்.

> சாதித் தோற்றக் காலத்தில், இப்பாணர் இழிசனர் ஆயினர். கணவன் மனைவி ஊடலைத் தீர்க்க உதவினர். பரத்தையர் தொழிலுக்கு உதவியர். பிரிந்தவரைக் கூட்டி வைப்பது அவர்களது தொழிலாகிவிட்டது[36]

என்பது பாணர்களின் செயல்களாக இலக்கியங்கள் கூறுகின்றன.

பாணர்கள் இசைப்பயிற்சியால் ஐந்திணை மக்களையும் இன்புறச் செய்து, அவர்கள் தருகின்ற பொருட்களை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தியிருக்கின்றனர்.

> நாட்டுப் பாடல்களைப் பாடிக்கொண்டும், அரசர்கள் புகழைப் போற்றிக் கொண்டும் ஆங்காங்கு திரிந்த ஒரு கூட்டத்தினரே பாணர் எனப்பட்டனர்.[39]

இவர்கள் அடுத்த வேளை உணவு எங்கு எவ்வாறு கிடைக்கும் என்று அறியாமல் எப்பொழுதும் திரிந்த வண்ணம் இருந்தனர்.

திருவிளையாடற் புராணத்தில் பாண்டியனின் இசைப்புலவராகக் கூறப்படும் பாணபத்திரரும், திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்களுக்கு யாழ் வாசித்த திருநீலக்கண்ட யாழ்ப்பாணரும், பன்னீராழ்வாரள் ஒருவரும் யாழ் அறிஞருமான திருப்பாணரும் பாணர் குலத்தவரேயாவர்.

### 2.4.2. பாணர்குலம்

வேளாண்குலம் வேளாண் என்றும், சமணர் நெறி சமண் என்றும் கூறப்படுதல் போல பாணர் குலமும் பாண் என்றும் கூறப்படுவதுண்டு. இதனை,

> கிளை பாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்[40]
>
> அங்கட் கிணையன் துடியன் விறலிபாண்[41]
>
> பாண்பாட்டு[42]
>
> பாண்கட னிறுக்கும்[43]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றன.

> பாணருக்குச் சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இசைகாரர், பண்ணவர், பண்டவர் (பண்டர்), ஓவர், அம்பணவர் முதலிய பிற பெயர்களுமுண்டு. பாணருள்

ஆடவர் பாணர் என்றும், பெண்டு பாடினி, பாணிச்சி, பாட்டி, விறலி என்றும் கூறப்படுவர்.[44]

இவ்வாறாக, சங்க காலத்தில் பாணர்கள் வாழ்ந்தமையும், சமுதாயத்தில் அவர்கள் பெற்றிருந்த நிலையினையும் அறியமுடிகின்றது.

### 2.4.3. பாணர்களின் வறுமை

பாணன் கூறுமுகமாகச் சிறுபாணாற்றுப் படை அக்காலத்தில் பாணர்களிடையே நிலவிய வறுமை நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றது. விழியாத கண்ணையும், வளைந்த செவியினையுடைய நாய்க்குட்டி, கறக்கப்படாத பாலினையுடைய முலையை உண்ணுதலைத் தன் பசி மிகுதியால் பொறுக்கமட்டாது வருந்தி தாய் நாய் எட்டி உதைத்துத் தள்ளுகிறது. குரைக்கின்ற ஈன்ற இமையையுடைய நாய் உறைகின்ற இடமாக பாணனின் சமையல் அறை அமைந்துள்ளது. பழைய சுவற்றைத் திரண்ட கரையான் தின்றதும், புழுதியிடத்தே காளான்கள் பூத்ததும் ஆகிய சமையறை விளங்கியது. இந்த சமையல் அறை நெடு நாட்களாக இதே நிலையில்தான் இருந்தது என்பதையும் காணமுடிகின்றன. மேலும் உடல் இளைத்தவளாகப் பாணனின் இல்லாள் கடும்பசிக்கு உள்ளாகி விளங்கினாள்; அப்பசியைப் பொறுக்காது வீட்டின் குப்பையில் இருந்த வேளைக் கீரையைக் கிள்ளி வந்து, உப்பின்றி வேகவைத்து; வாயிற் கதவை அடைத்துச் சுற்றத்தினரோடு பகிர்ந்து உண்டு வருந்தியதாகச் சிறுபாணாற்றுப்படை எடுத்துரைக்கிறது.

மேலும் பாணர்கள் உணவு உண்ணும்போது வாயிற் கதவை அடைத்தல் என்பதே அறியாதவர்கள்; வாயிலுக்கு வந்தவர்களையும்; வழியே செல்பவர்களையும் இன்முகத்தோடு வரவேற்று விருந்து அளிப்பதுதான் பொருநரின் உயரிய எண்ணமாகும். வறுமையின் காரணமாக வேளைக் கீரை உண்பதைப் புறங்கூறுவோர் இகழ்ந்து பேசுவார்கள் என்று எண்ணி உப்பில்லா வேளைக் கீரையை வாயிற்கதவை அடைத்து உண்பித்தாள் எனப் புலவர் பாணரின் வறுமையைத் தம் பாடலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்தல் நோனாது

புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில்
காழ்சோர் முதுசுவர் கணச்சிதல் அரித்த
பூமி பூத்த புகழ்கா ளாம்பி
ஒல்கிபசி யுழந்த ஒடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை உப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து
இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குடன் மிசையும்[45]

*என்னும் நத்தத்தனாரின் வரிகளால் அறியமுடிகின்றது. இவ்வாறாகப் பாணனின் நிலை கூறப்பட்டுள்ளது.*

## 2.4.4. ஆற்றுப்படுத்தும் நிலை

*பெரும்பாணாற்றுப்படையில் வறுமையால் வாடிய பிறகு தொண்டமான் இளந்திரையனிடம் பரிசில்பெற்று வருகின்ற பாணன், வறுமையான நிலையிலுள்ள பாணனை நோக்கி, பழுத்த மரத்தை நாடித்திரியும் பறவை போன்று, அழுகை ஒலியையுடைய சுற்றத்தோடுப் பயமின்றி ஓடித் திரிதலைச் செய்யும் பொலிவுற்ற யாக்கையையும், கற்ற கல்வியை வெறுத்துப் பேசுகின்ற வாயையும் உடையவன் பாணன் என உருத்திரங்கண்ணனார் சுட்டுவதை,*

பழுமரம் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப்பாண[46]

*என்னும் பாடல் வரிகளால் பாணர்களின் வறுமைநிலை தெரியவருகிறது.*

*'உடும்பினை உரித்தது போல எலும்பு புடைத்து எழுந்த விலாப்பகுதியை உடைய சுற்றத்தின் பசியைத் தீர்க்கின்றவரைக் காணமாட்டாய் என அறிவுறுத்துவதும் பசித் துன்பத்தைக் கேட்போர் பலர், உணர்ந்து உதவுவோர் சிலரே என யானழயும் கைக்கொண்டு வருந்துவதை விட்டுவிட்டு, சோழன் நலங்கிள்ளியிடம் சென்றால் இன்ப வாழ்வைப் பெறலாம்' என்று ஆற்றுப்படுத்திய செய்தியை ஆலத்தூர்கிழார் உரைத்துள்ளதை,*

உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின்

கடும்பின் கடும் பசி களையுநர்க் காணாது

சில் செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து

ஈங்கு எவன் செய்தியோ? பாண![47]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகின்றது.

## 2.4.5. பாணரின் செயல்கைகள்

'பசுவின் நிறைமிக்க வழிபலவும் கடந்து வந்தனர். மான் கூட்டம் மிக்க மலை பின்னே கழிய, மீனினம் தழைத்த துறைப் பலவற்றையும் நீந்தினர். நாஞ்சில் வள்ளுவனை நினைத்து வந்தனன். வள்ளிய ஓசையையுடைய சிறிய யாழையும், கந்தல் உடையும் உடைய மூத்த பாணனே!' எனப் புலவர் மருத இளநாகனார் விளித்து கூறுவதை,

ஆனினம் கலித்த அதர் பல கடந்து

மானினம் கலித்த மலை பின் ஒழிய

மீனினம் கலித்த துறை பல நீந்தி

உள்ளி வந்த வள் உயிர்ச் சீறியாழ்.

சிதாஅர் உடுக்கை, முதாஅரிப் பாண![48]

என்னும் பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றன. இவ்வடிகளில் பாணன் கடந்து வந்த வழியின் இயல்பு குறிப்பிடப்படுகிறது.

வளைந்த கோட்டையுடைய சிறிய யாழை வறுமையால் வாடிய இடையின் ஒரு பக்கத்தே தழுவி, 'என் துன்பத்தைத் தீர்க்கவல்ல அறிவோர் யார்' எனக் கேட்கும் பாணனின் வறுமை நிலைக் கண்டவன் கொண்கானங்கிழானிடம் ஆற்றுப்படுத்தும் செய்தி ஒரு பாடலால் அறியப்படுகிறது.

வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ,

உணர்வோர் யார் என் இடும்பை தீர்க்க? என

கிளக்கும், பாண![49]

என்னும் மோசிகீரனாரின் வரிகளால் இதனை உணரமுடிகிறது. இவ்வாறு பாணர்களின் வறுமையான வாழ்க்கைச் சூழலை ஆற்றுப்படை இலக்கியங்கள் சித்திரித்துக் காட்டுகின்றன.

## 2.5. பொருநர்

பொருநர் எனப்படுவோர் வீரர் அல்லது மறவர் போல் வடிவம் பூணுவோராக ஆற்றுப்படை இலக்கியங்கள் சித்தரிக்கின்றன. பொருநர்கள் போர்ப்பாடகர்கள், சிறு முரக ஒன்றை ஏந்திச் சென்றனர். இவர்கள் மன்னன் அல்லது தலைவன் படையின் ஒரு பகுதியேயாவர். பொருநன் முரசறையும் போதெல்லாம் அது படை எடுத்துச்செல்லும் அறிகுறியாகவே இருக்கும் எனக் கருவூர் கதப்பிள்ளை கூறியுள்ளார்.

......................கடற் தானை
இன்இசைய விறல்வென்றி,
தென்னவன் வயமறவன்[50]

என்ற பாடல் வரிகளில் அறியமுடிகின்றது.

### 2.5.1. பொருநரின் வகையினர்

பொருநர்கள் போர்க்களம் சென்று வீரர்களுக்கு உற்சாகம் ஊட்டினர். முரசு கொட்டி வஞ்சி பாடினர். இதனை,

இருள்நிலாக் கழிந்த பகல்செய் வைகறை.
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
பாடுஇமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை
வாடாவஞ்சி பாடினேன் ஆக[51]

என்று மதுரைக் குமரனாரின் வரிகளால் தெளியமுடிகின்றது.

போர்க்களத்தில் மன்னன் பாசறையில் தங்கியிருக்கும்போது மன்னனுக்கு வீர ஆற்றல் மிகுவிக்கின்ற வகையில் பொருநர்கள் இசைக்கருவிகளை இசைத்துப் பாடியுள்ளனர். பேர்க்களத்தில் பொருநரின் செயல்கள் வியப்பூட்டும் வகையில் அமைந்திருந்தன. போர் செய்யாத பொருநர் 'பொராப் பொருநர்' எனவும் அழைக்கப்பட்டனர்.' பொருநர், பாசறையில் கிணைக்கொட்டி மன்னரைத் துயில் எழுப்பினர்' என்பதை,

......................ஏமப் பாசறை
வைகறை அரவம் கேளியர்! பல கோள்
செய்தார் மார்ப! எழுமதி துயில் என
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி[52]

என்று தாயங்கண்ணனாரின் வரியால் அறியமுடிகின்றது.

இவர்கள் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என மூவகைப்படுவர்.[53]

பொருநர் தடாரி, கிணை போன்ற தோற்கருவியுடன் பாடினர். போர்க்களத்திலும் பொருளை எதிர்பாராது மன்னரின் வெற்றிக்குத் துணை நின்றவர்கள். கலை என்பது பொழுது போக்கிற்காகவும், மகிழ்ச்சி அடைவதற்காகவும் மட்டுமல்ல, வீரம், கொடை, இன்னபிற உணர்வுகளைத் தூண்டும் வகையிலும் பொருநர்கள் பாடுவதும், ஆடுவதுமாக விளங்கினர் என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

### 2.5.2. பொருநரின் வறுமைக் கோலம்

பொருநராற்றுப்படை, பொருநரைப் பற்றிய சித்திரிப்பை நல்குகிறது. வறுமையால் வாடிய பொருநன் ஒருவனை, வளம் பல பெற்ற பொருநன் ஒருவன் ஆற்றுப்படுத்துவதாக இந்நூல் அமைந்துள்ளது. பொருநரும், அவரது சுற்றத்தாரும் மிகுந்த பசியொடு திகழ்பவர்கள் என்பதை,

ஆடுபசியுழந்த நின் இரும்பேர் ஒக்கலொடு
நீடுபசி ஓரால் வேண்டின் நீடின்று
எழு மதி[54]

என்ற முடத்தாமக் கண்ணியாரின் வரிகளால் அறியமுடிகின்றது. பொருநர் பசியால் இளைத்த உடம்பினர் என்பதை,

எய்த்த மெய்யேன்[55]

என்னும் பாடல் வரி உணர்த்துகின்றது. ஈரும், பேனும் இருக்கின்ற வேர்ப்பினால் நனைந்த கந்தல் துணியைப் பொருநர் அணிந்திருந்தனர். இதனை,

ஈரும் பேனும் இருந்துஇறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர்[56]

என்னும் பாடல் வரிகளின் வழி அறியலாம்.

இவ்வாறாக பொருநர்கள் வறுமையால் வாழ்ந்து வள்ளல்களையும், வேந்தர்களையும் நாடிச்சென்று பரிசில் பெற்று பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டனர் என்பதை அறியமுடிகின்றது.

## 2.6. கூத்தர்கள்

எண்வகைச் சுவையும் மனத்தின்கண்பட்ட குறிப்புக்களும் புறத்துப் புலப்படுமாறு ஆடுதலில் வல்லவர் கூத்தர்கள். இவர்கள் ஆட்டத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள்.

> கூத்தர் ஆடுநர் எனப்பட்டனர். இவர் ஆடுமிடம் ஆடுகளம் எனப்பட்டது. விழாக்களிலும், பாசறைகளிலும் இவர்களைக் காணலாம். இசைக் கருவிகளைப் பைகளில் கட்டிக் கழையில் தொங்கவிட்டுத் தோளில் சுமந்து சென்றனர்.[57]

கூத்தர்கள் பல்வேறு வகையான கூத்தினை ஆடிப்பாடி மகிழ்வித்துள்ளனர்.

> கழைக்கூத்தர் மூங்கில் மீது நின்றாடினர். வியப்போடு பார்த்து நின்ற கிராமத்து மக்களை அவர்கள் மகிழ்வித்தனர். ஆரியக் கூத்து என்னும் ஒருவகைச் சிறப்புக் கூத்தை ஆடியவர்கள் ஆரியக் கூத்தர் எனப்பட்டனர்.[58]

கூத்தர்கள் குழுவாக ஒன்றுகூடி தம் வாழ்வை மேற்கொண்டனர்.

> குழு வாழ்க்கையில் நடனம் ஒரு சமுதாய நிகழ்ச்சியாகும். துணங்கை, வள்ளை, குரவை முதலிய கூத்துக்கள் இனக்குழு வாழ்க்கையில் இருந்தன. இவை போன்ற கூத்துக்கள் இன்றும் தென்னிந்திய இனக்குழு மக்களிடையே காணலாம். இதில் இனக்குழு மக்கள் அனைவரும் பங்கு கொள்ளுவர். தனியான கலைஞர்களும், இரசிகர்களும் என்ற பிரிவில்லை. இக்கூத்தின் நோக்கம் ஏதாவது வாழ்க்கைப் பயன்பாடேயாகும். காமம், வெற்றி, செழிப்பு, மழை, வேட்டை முதலியவற்றிற்காகக் கூத்துக்கள் அமைந்தன[59]

என்று கூத்தர்களின் வாழ்வியலை சங்க கால சமுதாயம் எனும் நூலில் ந.சுப்பிரமணியன் குறிப்பிட்டுள்ளார்.

### 2.6.1. கூத்தராற்றுப்படை

கூத்தர்களை ஆற்றுப்படுத்த ஓர் ஆற்றுப்படை நூல் சங்க இலக்கியத்தில் உள்ளது. அந்நூல் ஆற்றுப்படை என்ற பெயரில் இல்லாமல், மலைபடுகடாம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்து என்னும் நூலில் ஒவ்வொரு பாட்டிலும் பொருளால் சிறப்புடைய தொடர் ஒன்றே அவ்வப்பாட்டின் பெயராய்

அமைந்தாற்போல இப்பாட்டிலும் பொருளாற் சிறப்புடைய மலைபடுகடாம் என்ற தொடரே இப்பாட்டின் பெயராக அமைந்துள்ளது. இதனை,

அலகைத் தவிர்த்த எண்அருந் திறத்த
மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப[60]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

### 2.6.2. கூத்தர்களின் வாழ்வு நிலை

பொருள் வழங்கும் வள்ளல்களைத் தேடி நெடுந்தூரம் நடந்து வந்தமையினால் வருந்துகின்ற அடியினையுடையவர் ஆடல் மகளிர்கள் என்பதை,

மதந்தபு ஞமலி நாவின் அன்ன
துளங்கியல் மெலிந்த கல்பொரு சீறடிக்[61]

என்னும் பெருங்கௌசிகனாரின் வரியால் அறியலாம். கூத்தர்கள் பெரிய சுற்றத்தினர்களோடு நெடுந்தூரம் நடந்து வந்தவர்கள். இதனை,

புலம்புவிட் டிருந்த புன்றில் காட்சிக்
கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ[62]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றது. இவ்வாறாகக் கூத்தர்கள் வெகுதூரம் கடந்து வேந்தர்களையும், வள்ளல்களையும் நாடிப் பரிசில் வாழ்க்கை மேற்கொண்டனர் என்பதனைத் தெளிய முடிகின்றது.

### 2.7. விறலியர்

பொருநர், கூத்தர் வகுப்பினைச் சார்ந்த பெண்களே விறலியர் என அழைக்கப் பெற்றனர். விறலியர் ஆடலில் சிறந்தவர்கள் என்பதை,

அறற்குழற் பாணி தூங்கி அவரொடு[63]
மண்ணுமை முழவின் பண்ணமை சீறியாழ்
ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க[64]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. விறலியர் பாடல்கள் பாடுவதில் சிறந்து விளங்கினர் என்பதை,

இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர்
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்[65]
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்

நரம்பு மீது இறவாது உடன்புணர்ந்து ஒன்றிக்

கடவது அறிந்த இன்குதல் விறலியர்[66]

என்ற பாடல் வரிகளால் தெளிய முடிகிறது.

கூத்தர், பொருநர் போல் திறமை பெற்ற கலைஞர்கள் போர்ப் பாடல்கள் பாடினர். பாசறைகளுக்குச் சென்றனர். விறலியர் யாழையும், சிறுபறையையும் வைத்திருந்தனர். இதனை,

நல்யாழ். ஆகுளி, பதலையொடு சுருக்கி

சொல்லாமோதில் சில் வளை விறலி!

களிற்றுக் கணம் பொருத கண் அகன் பறந்தலை[67]

என்ற நெடும்பல்லியத்தனாரின் பாடல்களால் அறியமுடிகிறது.

### 2.7.1. விறலியரின் தோற்றப் பொலிவு

விறலியர்கள் வள்ளல்களைப் பாடிசென்று அவர்களிடமிருந்து பரிசில் வாங்கும் இயல்புடையவர்கள். ஒளி பொருந்திய நுதலினை உடையவர்கள். இதனை,

சேயிழை பெறுகுவை வாள் நுதல் விறலி

..................................

நீரினும் இனிய சாயற்

பாரி வேள்பால் பாடினை செலினே[68]

என்னும் கபிலரின் வரிகளால் அறியமுடிகிறது.

விறலியர் தம் சுற்றத்தினரோடு வள்ளலை நாடிச் சென்று பரிசில் பெறும் இயல்புடையவர்கள். விறலியர்கள் நெடுவழி வந்த வருத்தம் தீர அமர்ந்திருக்கும்போது, தன் வருத்தத்தைத் தெரிவித்து, கவிழ்ந்து கிடக்கும் உண்கலமாகிய என் மண்டையை மலர்க்குநர் யார்? என்று ஏங்கியிருப்பர். இதனை,

ஒரு தலைப் பதலை தூங்க, ஒரு தலைத்

தூம்பு அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கி,

கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார்? எனச்

சுரன்முதல் இருந்த சில் வளை விறலி[69]

என்ற ஔவையாரின் வரிகள் நமக்கு தெளிவுப்படுத்துகிறது. விறலியர்கள் மிகுந்த அழகினை உடையவர்களாக இலக்கியங்கள் எடுத்து இயம்புகின்றன.

மெல்லியதாய் வீழ்கின்ற மழையின் அழகைக் கொண்ட கூந்தலையும், ஓடி இளைத்த நாயினது நாவை ஒத்து அணிகலன்கள் இன்மையால் பொலிவிழந்த அடியையும், பிடியின் கையெனத் திரண்டு செறிந்த தொடையும், வேங்கை மலர் போன்ற சுணக்கத்தையும், கோங்கரும் பொத்து அணிகலன் அகத்தே அடங்கிய முலையையும் நுங்கின் இனிய நீரினை ஒத்த ஊறலையுடைய எயிற்றையும், முல்லைக்குச் சூடுதற்கமைந்த கற்பையும், மெல்லியல்பையும், மான் நோக்கையும், ஒளி பொருந்திய நுதலையும் உடையவர்களாக விறலியர்கள் இருந்தார்கள் என ஒரு பாடல் குறிப்பிட்டுள்ளது.

ஐதுவீழ் இகுபெயல் அழகுகொண்டு அருளி
நெய்கனிந்து இருளிய கதுப்பில் கதுப்பென
மணிவயின் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயில்மயில் குளிக்கும் சாயல் சாஅய்
உயங்குநாய் நாவில் நல்லெழில் அசைஇ
வயங்குஇழை உலறிய அடியின் அடிதொடர்ந்து
ஈர்ந்துநிலம் தோயும் இரும்பிடித் தடக்கையில்
சேர்ந்துஉடன் செறிந் குரங்கிற் குரங்கென
மால்வரை ஒழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த ஓதி ஒது
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும்பு அரற்றும் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்து
யாணர்க் கோங்கின் அவர்முகை எள்ளிப்
பூகைத்து ஒடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சேறு இகுதரும் எயிற்றில் எயிறெனக்
குல்லைஅம் புறவில் குவிமுகை அவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமான் நோக்கின் வாள்நுதல் விறலியர்[70]

என்பது அந்தப் பாடல் ஆகும்.

### 2.7.2. விறலியரின் நிலை

எட்டுத்தொகை நூல்களுள் பெருவழக்காயிருந்த விறலியாற்றுப் படை, பத்துப்பாட்டில் இல்லை. பொருநன், பாணன் முதலானோருடன் விறலி சென்றமைக் குறிக்கப்பட்டுள்ளது. பெண்கள் ஆடவர் பாதுகாப்பில் வாழ்ந்தார்கள். ஆகவே பெண்கள் தம் விருப்பம் போல எங்கும் செல்ல முடியவில்லை. தகுந்த ஆட வருடைய பாதுகாப்பிலே செல்லவேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. கூத்தர் தலைவனை விறலியர் சூழ்ந்து நிற்பதனை எடுத்துகாட்டுகிறது. இதனை,

கணங்கொள் தோகையின் கதுப்பிகுந்து அசைஇ
விலங்குமலைத்து அமர்ந்த சேயரி நாட்டத்து
இலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்றக்
கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழல்
புனல்கால் கழீஇய மணல்வார் புறவில்
புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்
கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ[71]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகிறது. இவ்வாறாக விறலியர்கள் தம் வாழ்க்கைத் திறம்பட வாழ்ந்தார்கள் என்பதை அறியமுடிகின்றது.

### 2.8. பரிசிலரின் வாழ்க்கை

புலமையும், வறுமையும் அமைந்திருப்பது பரிசிலரின் வாழ்க்கை நிலையாகும். இவர்கள் தங்களது வறுமையைப் போக்கிக் கொள்ள வேந்தர்களையும், வள்ளல்களையும் நாடிச்சென்று அவர்களைத் தங்களது கலைத் திறமையால் மகிழ்வித்து அவர்கள் தரும் பரிசில்களைப் பெற்றுப் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டனர்.

> பறவைகள் பழுமரம் தேர்ந்து பறக்கின்றன. பழம் உண்டபின், அம்முயற்சியையும் மறந்து ஆடல் பாடல்களால் இயற்கை அன்னையின் கோயிலை அணிசெய்கின்றன. கலைஞர்களும் அத்தகையவர்களே. கர்வமும் செருக்கும் அற்ற கல்வியையும், செம்மையையும் பெற்று வளமாக வாழும் வள்ளல்களே கலைஞர்கள் நாடும் பழுமரங்கள், அவர்களை அணுகி நல்லுதவி பெற முயல்வார்கள். உதவி பெற்ற மகிழ்ச்சியால் தம்மை மறந்து கலையின்பத்தை நாடெங்கும் பரப்புவார்கள். நாளைய வாழ்க்கையைப் பற்றிய கவலையே அவர்களுக்கு இல்லை.[72]

இவ்வாறு குறிப்பிடுவது பரிசிலர்களின் வாழ்க்கையைப் பற்றிய முழுமையான சித்திரிப்பாக அமைகின்றது.

பரிசிலர்கள் அளவறிந்து வாழும் வாழ்க்கை மேற்கொள்ளாது, பெற்ற பொருள்களைப் போற்றிப் பல ஆண்டுக்காலம் வாழ விரும்பாது, எதிர்கால வாழ்க்கையைக் குறித்த கவலை கொள்ளாது வாழ்ந்தமையால் தான் அவர்களிடம் நீங்கா வறுமை குடிகொண்டது. வறுமை மிகுந்த பிறகே வள்ளல்களை நாடிச் சென்றனர். இவ்வாறாகப் பழுமரம் நாடிச் சென்று உண்டு வாழும் பறவையின் வாழ்க்கை வாழ்ந்ததாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 2.9. சங்கப் பரிசில்கள்

சங்க கால வேந்தர்களின் அரியணையாகிய சிம்மாசனத்தைக் கொடையும், அறமும் மட்டுமே அலங்கரித்தன. அரசர்கள் தம்மை நாடி வந்த பரிசிலர்களுக்கு வேண்டிய பொருளை நல்கி வாழ்த்தி வாழ வைத்தார்கள். அப்பரிசில்களில் சிலவற்றைக் காணலாம்.

### 2.9.1. உணவு

சங்க கால வேந்தர்களிடம் பரிசில் வேண்டிச் செல்லும் புலவர், பாணர் முதலியோருக்கு முதலில் விரும்பிய உணவை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

#### 2.9.1.1. பசிய இறைச்சியிலான உணவு

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் கபிலரின் கையைப் பற்றியபோது அவர் கை மிக மென்மையதாய் இருந்ததலைக் கூறினான்; அதற்கு மறுமொழி கூறவந்த கபிலர் தம் கையின் மென்மையுடன் அரசன் கையின் வன்மையும் கூறினார். "பெருமானே! உன்னைப் புகழ்வோருடைய கைகள் புலால் மணமுடைய பசிய இறைச்சியைப் பூமணம் வீசும் புகையை எழுப்பிச் செய்த ஊனையும், துவையலையும், கறியையும், சோற்றையும் உண்பதன்றி வருந்தும் தொழிலாய்ப் பிறிதொன்றும் அறியாது" என்று அக்கருத்து கூறப்பட்டுள்ளது.

. . . . . . நின் தாள் தோய் தடக்கை
புலவு நாற்றத்த பைந்தடி

பூ நாற்றத்த புகை கொளீஇ, ஊன் துவை
கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது
பிறிது தொழில் அறியா[73]

என்ற பாடல் வரிகளால் இதனை உணரமுடிகின்றன. புலவர்கள் புலால் உணவு விரும்பி உண்டனர் என்பது அறியமுடிகின்றன.

**2.9.1.2. பாசறையிலும் உணவு அளித்தலும்**

வேந்தர்கள் போர்க்களத்தில் இருந்துபொழுது தம்மை நாடி வந்த புலவர், பாணர், இரவலருக்கு உணவளித்துச் சிறப்பித்தார்கள். சோழன் நலங்கிள்ளி தம்மை பாசறையில் காண வந்த பாணர்க்கு உணவளித்துச் சிறப்பித்தான். வாடாத பசிய இலைகள் இடையே கட்டப்பெற்று மொட்டுக்களால் அமைந்த மாலை; அதன் பந்துவடிவம் போன்று இறைச்சிக்கலந்த பெரிய சோற்றுத்திரளைப் பாணர்க்கு வழங்கி அவர்தம் சுற்றத்துடன் உண்ணச் செய்யும் இயல்புடையது வெய்ய போர்க்கள முனையாகிய பாசறையிலும் உணவு அளித்தான் எனக் கோவூர்க்கிழார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

புலராப் பச்சிலை இடை இடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்து கண்டன்ன
ஊன் சோற்று அமலை பாண் கடும்பு அருத்தும்[74]

என்னும் பாடல் வரிகளால் அறிந்துக்கொள்ள முடிகிறது.

**2.9.1.3. கறியும் சோறுமாகிய உணவு**

போர் காரணமாக வேந்தன் பாசறையில் தங்கியிருந்தபோதும் உணவு அளித்த செயல் வியக்கத்தக்க வகையில் அமைந்திருந்தன என்பதை இலக்கியங்கள் வழி காணமுடிகிறது. அதியமான் நெடுமான் அஞ்சி தம்மை நாடி வந்தவர்களுக்குப் பரிசில் நீட்டிப்பான் அல்லன். ஒரு பொழுதும் ஓயாமல் உண்ணவும், தின்னவும் படுதலால் ஈரம் காயாத உண்கலத்தில் மெழுகான் இயன்ற மெல்லிய அடை போலக் கொழுத்த இறைச்சியை அளிக்க வல்லன். உலகமே வறுமையற்ற காலமாயினும் தவறாது கறியும், சோறும் தந்து உதவுவான் என ஔவையார் குறிப்பிடுவதை,

பொழுது இடைப்படாஅப் புலரா மண்டை
மெழுகு மெல் அடையின் கொழு நிணம் பெருப்ப

அலத்தற் காலை ஆயினும்

புரத்தல் வல்லன்[75]

என்னும் பாடலடிகளில் காணமுடிகின்றன.

சங்க காலத்தில்,

மன்னர்கள் புலவர்க்கும், பாணர்க்கும் அளித்த பெருவிருந்துகளில் ஊன் சோறே பரிமாறப்பட்டது. ஓரிடத்திலும் புலாலுணவு பழிக்கப்படவில்லை. புலவர்கள் அதனைப் பெரிதும் பாராட்டியே பாடியுள்ளனர்[76]

என்பதை இலக்கியங்கள்வழி அறியலாம்.

### 2.9.1.4. ஆட்டுக்கிடாவை வெட்டிச் சமைத்த உணவு

கபிலர் பாரி வாழ்ந்த பறம்புமலையைப் பிரியும்போது வருந்தினர். தன்னை நாடி வரும் இரவலர்க்கு மதுவைத் தருவார்; ஆட்டுக்கிடாவை வெட்டிச்சமைத்து ஊனும்; சோறும் வேண்டி வேண்டி அளிப்பார். இப்படி தந்த இன்புறுவித்த பறம்பினது நன்றியை நினைத்து புலம்பியதாகக் என கபிலர் எடுத்துரைத்துள்ளார்.

மட்டு வாய் திறப்பும், மைவிடை வீழ்ப்பவும்

அட்டு ஆன்று ஆனாக் கொழுந்துவை ஊரன்சோறும்[77]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

### 2.9.1.5. பஞ்சு போன்ற இறைச்சி உணவு

அறம் உரைத்த வாயில் ஆடடுகிடாவை அசைத்து அசைத்து உண்டு மகிழ்ந்தனர் என்று இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றன. தேர்வண் மலையன், சோழனுக்குப் போரில் உதவி புரிந்து வெற்றியோடு வந்திருப்பது கண்டு மிக்க மகிழ்ச்சியுடன் பெருஞ்சாத்தனார். பருத்திப் பெண்டிர் நூற்கும் பஞ்சு போன்ற தன்மையது இறைச்சி; அவ்விறைச்சியின் மேல் படர்ந்த வெண்மை நிறமுடைய கொழுப்பு; எரியாது பூத்துக் கிடக்கின்ற நெருப்புப் போன்றது; இதையும் கள்ளையும் முறையாக ஒன்றற்கொன்று மாறுபட உண்டார்கள் என புலவர் கட்டுவதை,

பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன

நெருப்புச் சினம் தணிந்த நிணம் தயங்கு கொழுங்குறை

பசுஉக் கள் மண்டையொடு, ஊழ் மாறுபெயர

உண்கும், எந்தை! நிற் காண்கு வந்திசினே,

நள்ளாதார் மிடல் சாய்த்த

வல்லாள! நின் மகிழ் இருக்கையே[78]

என்னும் பாடல் வரிகளால் உணரமுடிகிறது. பரிசிலரின் இறைச்சியையும், கள்ளையும் மாறி, மாறி உண்டு இன்புற்றனர் என்பதை அறியமுடிகின்றன.

### 2.9.1.6. மன்னனோ சேர்ந்து உண்ணும் உணவு

பரிசிலர்களின் பசியைப் போக்குவதில் வேந்தன் அக்கறைக் கொண்டு விளங்கினான் என்பதால் பாசறையில் இருந்தாலும் வழியாகச் செல்லும் பரிசிலருக்குத் தானே இறைச்சியைச் சுட்டும் அளித்தனன் என்பதைக் காணமுடிகின்றன.

அதியமான நெடுமானஞ்சி காணவரும் பரிசிலருக்கு முதலில் உணவு அளித்துப் பசியைப் போக்குவான்; குறைந்த உணவாக இருந்தாலும் பல கலத்தினை உடைய பலரோடு சேர்ந்து உண்பான்; மிகுதியான உணவாக இருந்தாலும் பல கலத்தினையுடைய பலரோடு சேர்ந்து உண்பான்; இருந்த போதினும் எலும்புடன் கூடிய ஊன் உள்ள பகுதி முழுவதும் பரிசிலருக்கு அளிப்பவன் என்று ஔவையார் குறிப்பிடுவதை,

சிறு சோற்றானும் நனிபல கலத்தன்; மன்னே!

பெருஞ் சோற்றானும் நனி பல கலத்தன்; மன்னே!

என்பொடு தடி படு வழி எல்லாம் எமக்கு ஈயும்; மன்னே![79]

அமிழ்துஅன மரபின் ஊன்துவை அடிசில்

வெள்ளி வெண் கலத்து ஊட்டல் அன்றி[80]

என்ற பாடல் வரிகளில் அறியமுடிகிறது.

### 2.9.1.7. விழாக்கோலம் கொண்ட விருந்துணவு

மறக்குடி மகளிரது கொடைப் பண்பையும்; அவர் தலைவர்களது மறப்பண்பையும் வியந்து போற்றுவதாக அமைந்த பாடலில் உணவு சிறப்பிடம்

பெறுகிறது. சிறுவர்கள் நெடுந்தொலைவு சென்று வேட்டையாடாமல் அருகில் உள்ள ஆழமான மடைகளிலிருந்து உடும்புகளைப் பிடித்து வருவர்; அவற்றை வீட்டில் உள்ள மனைவி அறுத்துத் தயிருடன் கூட்டிச் சமைப்பாள்; அவள் அதனையும் புதிய சுவையுடன் பிற உணவுகளையும் சமைத்து விருந்தினர்க்கு வழங்குவாள்; இப்படி மறக்குடி மகளிரும் கொடையளிப்பதில் உணவுக்கே முதலிடம் கொடுத்தனர் எனத் தங்கால் பொற்கொல்லனார் பாடியுள்ளார். இதனை,

........................மனைவியும்
வேட்டச் சிறாஅர் சேண்புலம் படராது
படப்பைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொடு ஒராங்கு
வருவிருந்து அயரும் விருப்பினள்[81]

என்னும் பாடிய வரிகளால் தெளிய முடிகின்றன.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் காண வந்த பரிசிலர் மன்னனது மாலையைப் பெறலாம் என்றே வந்தனர்; மன்னன் போர்க் களத்தில் இருந்தபோது வந்த பரிசிலருக்கு முதலில் உணவு வழங்கினான்; பசி தீர்ந்து மகிழ்ச்சி பொங்கும் தருணத்தில் வேண்டிய பரிசிலை அளித்து மேலும் மகிழ்ச்சியை மிகுவித்தான்.

குறைவின்றி விளங்கும் வாளினுடைய மிக்க ஒளி வெற்றி உண்டாக மின்னலைப் போல மின்னி; அம்புகளாகிய மழையைப் பெய்த இடம் நிறைந்த பாசறைக் கண்ணே; மனம் பொருந்தாத பகைவர் உடலினின்றும் நீங்கிய அரிந்த தலைகளாற் செய்யப்பட்டது அடுப்பு; கூவிளங் கட்டையாகிய விறகு இட்டு உரித்து ஆக்கப்படும் கூழிடையே வரிக்குடர்கள் பிறழ்ந்து பொங்க தலையிற் பொருந்தாது நீங்கிய மண்டையோட்டை வன்னிமரத்தால் செய்யப்பட்ட காம்பைச் செருகி; அமைந்த துடுப்பினால் ஈனாத பேய்மகள்; தோண்டித் துழாவித் சமைத்த மாக்களும் உண்ட மறுக்கும் ஊன்சோறாகிய பிண்டத்தை மடையன் கொற்றவைக்கு ஏந்திக் காட்டினர்.

திருமண விழாவில் நிகழ்வது போல் விருந்தினர் எல்லோருக்கும், வழிபடுங்கலத்துப் புதிது பெய்த புனித நீரை, கலத்தின் வெவ்விய வாயின் வழியாகப் பெற்று, புதுநீரைத் தெளித்து புலால் நாறும் போர்க்களம் விளங்கக் களவேள்வி செய்தவனே விசித்துக் கட்டப்பட்ட, கிணைப்பறை இம்மென ஒலிக்கும்படி அறைத்து, மன்னனைப் பாடிய வந்ததன் காரணம். நிலவு போல் ஒளி வீசும் நினது மாலையைப் பெறலாம் என்றே வந்தோம் என்பார். இக்கருத்து அமைந்த பாடல் மாங்குடி கிழாரால் எழுதப்பட்டது.

விசிபிணித் தடார் விம்மென ஒற்றி,
ஏத்தி வந்தது எல்லாம் - முழுத்த
இலங்குவாள் அவிர்ஒளி வலம்பட மின்னி,
கணைத்துளி பொழிந்த கண்கூடு பாசறை
பொருந்தாத் தெவ்வர் அரிந்தலை அடுப்பின்
கூவிள விறகின் ஆக்குவரி நுடங்குல்
ஆனா மண்டை வன்னிஅம் துடுப்பின்
ஈனா வேண்மாள் இடம்துழந்து அட்ட
மாமறி பிண்டம் வாலுவன் ஏந்த
வதுவை விழவின் புதுவோர்க்கு எல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்க எனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்! நின்
நிலவுத்திகழ் ஆரம் முகக்குவம் எனவே[82]

என்பது அப்பாடல்.

### 2.9.1.8. திடமான உணவு

பரிசிலருக்கு இறைச்சி உணவு மட்டும் அளிக்கவில்லை. வரகு, தினை போன்ற திடமான உணவுப் பொருள்களையும் வழங்கினார்கள்; அவ்வாறு வரகு, தினை முதலிய உணவுப் பொருள்கள் யாவும் இரவலர்கள் உண்பதற்காக வழங்கப்பட்டுத் தீர்ந்துவிட்டது; கதிர்களாகக் காய வைத்திருந்த விதைப்பதற்கு எனக் கொண்ட தினையை மனையோள் உரலின் கண்பெய்து, சிறிதும் புறத்தே செல்லாமல் உணவு ஆக்கி வழங்குவாள் எனப் புலவர் புலப்படுத்தியுள்ளதை,

வரகும் தினையும் உள்ளவை எல்லாம்

இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென

குறித்து மாறு எதிர்ப்பைப் பெறா அமையின்

குரல் உணங்கு விதைதினை உரல்வாய்ப் பெய்து

சிறிது புறப்பட்டன்றோ இலளே;[83]

நிணம் பெருத்த கொழுஞ்சோற்றினட[84]

*என்னும் பாடல் வரிகளால் உணரமுடிகிறது.*

### 2.9.1.9. கொழுவிய ஊன் உணவு

*வேந்தர்கள் கரிய ஆட்டுக்கிடாவை வீழ்த்தி அதன் ஊனைத் தீயிலிட்டுச் சுட்டுக் காயம் பெய்து அட்ட இடம் அகன்ற கொழுவிய ஊன் உணவை இரவலர்க்கு அளித்து மகிழ்ந்தார்கள்.*

காயம் கனிந்த கண்அகன் கொழுங்குறை

நறவு உண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப[85]

*என்னும் பாடல் வழி அறியமுடிகின்றது.*

*தருமபுத்திரன் பரிசிலர்க்கு உணவை வேண்டும் அளவு வழங்குவதில் சிறந்து விளங்கியவன்; ஆட்டுக் கிடாவை வெட்டி வீழ்த்தி; அதன் இறைச்சியைக் கிழித்து; சூட்டுக் கோலிற் கோத்து சுட்டு; சுட்டிறைச்சியாகச் சமைத்து தெய்வங்கட்கு இலையில் பலி இடுதல் போல மடைவேண்டுநர்க்கு இலைகளில் படைத்துச் சமயம் பார்த்துக் குறையாமல் கொடுத்தும், சோற்றுணவு வேண்டுநர்க்கு சமயத்தே வேண்டுவன அருளும் தன்மையன் எனக் கோதமனார் சுட்டுகிறார்.*

அவிழ்வேட்டுநர்க்கு இடைஅருளி

விடை வீழ்த்துச் சூடுகிழிப்ப[86]

*என்றும் பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றன.*

*மாவிலங்கை என்னும் ஊருக்குத் தலைவனான ஓய்மான் வில்லியாதன் பரிசிலர்க்குப் பசியைப் போக்கும் வல்லவனாவர். குறுகிய கால்களை உடைய ஆண்பன்றியின் கொழுவிய ஊன் துன்பங்களான நல்ல வெள்ளி ஊனை, நல்ல*

*மணமுனை ,ய நெய்யை உருக்கி, அதில் இட்டுப் பொரித்து நாட்காலையில் உணவாக அளித்து பசியைப் போகக் கூடியவன் என நன்னாகனார் சுட்டுவதை,*

குறுந்தாள் ஏற்றைக் கொழுங்கண் அவ்விளர்

நறுநெய் உருக்கி, நாட்சோறு ஈயா[87]

*என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.*

### 2.9.1.10. வெல்லப் பண்ணியாரம் அளித்தல்

*கரும்பனூர் கிழானை நாடி வந்த பரிசிலர்களுக்கு மிகுதியாக இறைச்சி உணவு வகைகளை அளித்துள்ளார். இறைச்சியையும், சோற்றையும் உண்டு வெறுத்தால், பாலிற்கலந்து செய்தனவும், வெல்லப்பாகிற் செய்தனவும் ஆகிய பண்ணியங்களை இவை மிக இனிய எண்ணுமாறு அளவாக நன்கு கலந்து மென்மையாகப் பருகி விருந்தினர்களாகத் தங்கி, பசியைப் போக்கி இனிது தங்க வாழ்ந்தர்கள் என நன்னாகனார் வெளிப்படுத்தியுள்ளதை,*

ஊனும் ஊணும் முனையின் இனிது என

பாலின் பெய்தவும் பாகின் கொண்டவும்

அளவுபு கலந்து மெல்லியது பருகி

விருந்துறுத்து ஆற்றி இருந்தனெம் ஆக[88]

*என்றும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.*

### 2.9.1.11. ஊன் கலந்த பலவகைச் சோற்றுணவு

*சோழன் நலங்கிள்ளி தம்மை நாடி வந்த பசியால் துன்புற்ற இரவலர்களுக்கு முதலில் நெய்யால் தாளிதம் செய்யப்பட்ட ஊன் கலந்த பலவகைச் சோற்றினை அளித்து சிறப்பித்தான் எனக் கோவூர்கிழார் புகழ்ந்து உரைப்பதை,*

நெய்குய்ய ஊன்நலின்றி

பல்சோற்றான்..........[89]

*என்னும் வரிகளால் தெளியமுடிகின்றது.*

### 2.9.1.12. வெள்ளியப உண்கலத்தல் அளித்த உணவு

*சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைக் காண வந்த பரிசிலர்க்கு நெய்யினது துளியை உடையவாய் வறுக்கப்பட்ட வறுவலை முகந்து உண்ணவும்*

சுட்டுக் கோலாற் கிழித்துச் சுடப்பட்ட ஊனைத் தின்னவும் ஊனைப் பெய்து வைத்த வெள்ளிய உண்கலத்தில் கொடுத்தனன் என்கிறார் கோவூர்கிழார். இதனை,

நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடுகிழிந்து வாடுஊன் மிசையவும்
ஊன் கொண்ட வெண்மண்டை[90]

என்னும் வரிகளால் தெளியமுடிகின்றது.

பொகுட்டு எழினி பரிசிலர்க்கு உணவை உண்ணும் முறைப்படி அளிப்பதன்றிக் கொள்ளும் முறையில் விருந்தாக அளித்து உண்பித்தான் என ஔவையார் எடுத்தியம்பியுள்ளார்.

ஊண்முறை ஈத்தல் அன்றியும் கோள்முறை
விருந்துஇறை நல்கி யோனே[91]

என்னும் வரிகளால் இதனை அறியமுடிகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தம்மைநாடி வந்த இரவலர்க்கு முதலில் பசித்துன்பத்தைப் போக்கினான். உண்டு கை ஈரமாதலை மறந்த என் பெரிய சுற்றம் மிக்க துன்பத்தினின்று விடுபடுமாறு கொழுவிய ஊனைத் துண்டாக்கிக் கோடையிற் கொண்ட பருத்தியில் சுகிர்ந்த பஞ்சு நிறையத் திணித்துப் பொதியாகிய பொருள்கள் இடையே நிறைந்திருந்தாற் போல வெள்ளிய ஊன் துண்டங்களைக் கொடுத்து உண்பித்துச் சிறப்பிப்பான் என நல்லிறையனார் உரைப்பதை,

ஈர்ங்கை மறந்தஎன் இரும்பேர் ஒக்கல்
கூர்ந்த எவ்வம்விட கொழு நிணம் கிழிப்ப
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்டம் மிடைநிறைந்து அன்ன
வெண்நிண மூரி அருள[92]

என்னும் வரிகளால் அறியலாம்.

### 2.9.1.13. நெய்ச்சோறு அளித்தல்

வாட்டாற்று எழினியாதனை நாடி வந்த பரிசிலருக்குக் கொடுத்த உணவு மற்றும் ஏனைய பொருள்களை எதைச் சொல்வேனோ என்று மகிழ்ச்சி அடைவதைக்

காணலாம். அவன் சமைக்களித்த கொழுவிய துண்டாகிய சூட்டிறைச்சியைச் சொல்வேனோ, வளவிய பூந்தேறலாகிய கள்ளைச் சொல்வேனோ, குறுமுயலின் தசைவிரவித்தந்த நறு நெய்யானாய சோற்றைச் சொல்வேனோ இப்படி உபசரித்தத் தன்மை கூறுவதற்கு வார்த்தைகளே இல்லாமல் தடுமாறி நின்றார்கள் பரிசிலர்கள் என மாங்குடிகிழார் கூறுவதை,

கொழுந்தடிய சூடு என்கோ?
வளநனையின் மட்டு என்கோ?
குறுமுயலின் நிணம் பெய் தந்த
நறு நெய்ய சோறு என்கோ?[93]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளவளவனைக் காணவந்த பரிசிலரிடம் மன்னன். இவன் நம்மை மறவாது நினைந்து வந்த பரிசிலன் ஆவன் என்று சொல்லி வரவேற்றான். முதலில் பசியைப் போக்கும் வண்ணம் நெய் மிக சொரிந்து பொரித்த தாளிப்புடைய நெடிய சூட்டிறைச்சியை உண்ணச் செய்து மகிழ்ச்சி அடைந்தான் எனத் தாயங்கண்ணார் கட்டுவதை,

உள்ளி வந்த பரிசிலன் இவன் என
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு[94]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

### 2.9.1.14. வெண்சோறு அளித்தல்

குமட்டூர் கண்ணனார், சேர மன்னனின் சிறப்புக்களை எடுத்துரைக்கும்போது பசித் துன்பம் நீக்கிய பெருமையினைக் கூறுகின்றார். உன்னைக் காணவந்த என்னுடைய பெரிய சுற்றத்தின் நெடுநாள் பசித்துன்பம் நீக்கினாய். வாள் கொண்டு அறுத்து எடுத்த வெள்ளிய நிணமும் கொழுத்த தசையும் ஆட்டிறைச்சியும் சேர்த்து வெண்ணெல் அரிசிகொண்டு சமைத்த வெண்சோற்றுடன் சேர்த்துப் படைத்த சோறு உண்டு பசி நீங்கி மகிழ்ச்சியுற்றோம் எனக் குமட்டூர் கண்ணார் புலப்படுத்தியுள்ளார்.

எஃகு போழ்ந்து அறுத்த வால் நிணக் கொழுங்குறை
மைஊன் பெய்த வெண்ணெல் வெண் சோறு[95]

என்னும் பாடல் வரிகளால் இதனை அறியமுடிகின்றது.

### 2.9.1.15. சேப்பங்கிழங்கிட்டு சமைத்த உணவு

பாலைக் கௌதமனார் சேரனின் உணவு அளிக்கும் தன்மையை எடுத்துரைக்கிறார். பெரிய மிடாவில் வாளால் வெட்டிய இறைச்சித் துண்டுகளையும், அரிசிச் சோற்றோடு மிதக்கும் சேப்பங் கிழங்கிட்டுச் சமைத்த உணவை அளவின்றிப் பலரும் உண்ணும் உணவு கண்டவர் மயங்கும் சுவை உடையது எனப் புலவர் கூறுவதை,

அடைச் சேம்பு எழுந்த ஆடுறும் மடாவின்
எஃகு உறச் சிவந்த ஊனத்து யாவரும்
கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி[96]

என்னும் பாடல் வரிகளால் உணரமுடிகின்றது.

பாலைக் கௌதமனார் சேரரின் விருந்தோம்பல் சிறப்பையும், விருந்தினர் தம்மைவிட்டு வேறு எங்கும் செல்லாமல் விருந்து உண்ணும் நிலையையும் எடுத்துரைக்கிறார். சேரனை நாடி வரும் விருந்தினர்கள், வரையறை இல்லாது எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுபடி உணவு அளிக்கப்பட்டது. வந்த விருந்தினர்கள் வேறிடம் விருந்துண்ணச் செல்லாது உண்ணச் செய்வதற்காக இறைச்சி விற்போர் நடத்தப்பட்டது. மரப்பலகையில் வைத்து இறைச்சியை வெட்டி எடுத்து, வெண்ணிறக் கொழுப்புடன் கூடிய இறைச்சியை அடுப்பிலேற்றி வேக வைத்துத் தாளிக்கும்போது எழும் ஓசை கடலோசைப் போலக் கேட்டது. இறைச்சியில் நெய் விடுவதால் எழும் புகை வேள்வித் தீயில் நெய்விட எழுந்த ஆவுதிப் புகை போலிருந்தது எனப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

வருநர் வரையார் வார வேண்டி
விருந்து கண் மாறாது உணீஇய, பாசவர்
ஊனத்து அழித்த வால் நிணக் கொழுங் குறை
குய் இடுதோறும் ஆனாது ஆர்ப்ப
கடல் ஒலி கொண்டு செழு நகர் வரைப்பின்
நடுவண் எழுந்த அடு நெய் ஆவுதி[97]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

### 2.9.1.16. செந்நெல் அரிசிலாகிய உணவு

கரிகாற் பெருவளத்தான் பரிசிலர்க்கு உணவு கொடுத்து ஓம்பியமுறை அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகின்ற நிலையினை உணரலாம். உண்ணுதற்குரிய காலம் அறிந்து பரிசிலர்களை அழைத்து அறுகம்புல்லைத் தின்று வளர்ந்த கொழுத்த செம்மறியாட்டின் அழகிய புழுக்காகிய பருத்த மேல் தொடையின் வெந்த இறைச்சியையும்; இரும்பு நாராசத்தைக் கோத்துச் சுடப்பட்ட இறைச்சியாகிய பரிய தசைத் துண்டத்தையும் 'தின்னுங்கள்! தின்னுங்கள்' எனப் பன்முறையும் வற்புறுத்தி கொடுத்தலான் உண்டனர். வெப்பத்தை ஆற்றுதல் பொருட்டு வாயின் இடப்பக்கத்தும், வலப்பக்கத்தும் மாற்றி மாற்றிச் சேர்த்தி ஆற்றித்தின்று இனி இவைகள் வேண்டாம் என்று கூறினார்கள். மேலும் இனிய சுவை உடையனவும், பல வேறு வடிவங்களை உடையதுமாகிய தின் பண்டங்களைக் கொணர்ந்து அவற்றைச் தின்னும்படி வற்புறுத்தினான் என முடத்தாமக் கண்ணியார் புலப்படுத்துவதை,

துராஅய் துற்றிய துருவையம் புழுக்கின்
பராஅரை வேவை பருகெனத் தண்டிக்
காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
ஊழின் ஊழின் வாய்வெய் தொற்றி
அவையவை முனிகுவம் எனினே[98]

என்னும் வரிகளால் உய்த்துணர முடிகின்றது.

தொண்டைமான் இளந்திரையன் அரிவாளைக் கொண்ட வடுக்கிடந்த வலிய கையையுடைய மடையன் ஆகிய பல இறைச்சியிற் கொழுவிய தசைகளும் அரிக்குவை ஈரம் வற்றும்படி உலரவிட்ட பெரிய செந்நெல்லினுடைய பொறுக்கு அரிசியால் ஆக்கின திரண்ட நெடிய சோற்றினை இரவலர்க்கு வாரிவாரி வழங்குவான் என உருத்திரங் கண்ணார் சுட்டுவதை,

கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை
அரிசெத்து உணங்கிய பெருஞ்செந் நெல்லின்
தெரிகொள் அரிசித் திரள் நெடும் புழுக்கல்
அருங்கடித் தீஞ்சுவை அமுதொடு பிறவும்
விருப்புடை மரபில் கரப்புடை அடிசில்[99]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது. இவ்வாறாகச் சங்கப்புற இலக்கியங்கள் பல இடங்களில் பரிசிலருக்கு முதலில் உணவு வழங்கிய செய்தியை விரிவாக விளக்கிறது.

### 2.9.2. உடை

சங்க கால வேந்தர்கள் பரிசிலருக்கும், இரவலருக்கும் உடையினை அளித்துப் பெருமைப் படுத்தினார்கள். பரிசில்கள் முக்கியமான முதன்மையான இடம்பெறுவது உடையேயாகும்.

#### 2.9.2.1. பாம்பின் தோல் போன்ற ஆடை

அவியனைக் காணச் சென்ற இரவலர்க்கு உடையளித்துச் சிறப்பித்தமையைப் புறப்பாடல் ஒன்று புலப்படுத்துகின்றது. பாம்பின் தோல் போன்ற வடிவினை உடையதும், மூங்கிலின் உட்புறத்தே உள்ள பெயர்த்தெடுக்கப்படும் வெள்ளிய தோல் போல நெய்யப்பட்டுள்ள இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாத ஒள்ளிய பூவாலே நெய்யப்பட்டதுமான ஆடையை உடுத்தச் செய்து சிறப்புச் செய்தான் அவியன். இதனை,

பாம்புஉரி அன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியின் இழைஅணி வாரா
ஒண்பூங் கலிங்கம் உடீஇ[100]

என்ற நப்பசலையாரின் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

#### 2.9.2.2. வெள்ளிய ஆடை

காவிரி பாயும் சோழநாட்டில் உள்ள ஓர் ஊர் அம்பை. இவ்வூரின் தலைவன் அருவந்தை. புலவர் வேறொரு செல்வனின் வாயிற்கடை நின்று பாடிய அளவிலே, அருவந்தை, தடாரிப் பறையின் ஓசைகேட்டு அருளி, புலவரைத் தன் மனைக்கு அழைத்து, பசித் துன்பத்தினின்றும் அவரை நீக்கினன். ஆடைக் கொடுத்து மகிழ்ந்தனன்.

புலவருடைய அரையில் உடுத்தியிருந்த நீல நிறமுள்ள கந்தையை நீக்கி, வெள்ளி ஆடை தந்து உடுத்தச் செய்தான். இதனை,

..........................என் அரை

நீல் நிறச் சிதாஅர் களைந்து

வெளியது உடீஇ[101]

*என்னும் கல்லாடனாரின் வரிகளால் உய்த்துணர முடிகிறது.*

### 2.9.2.3. நீர்ப்பாசி போன்ற ஆடை

*அதியமான் நெடுமான் அஞ்சி தம்மை நாடி வந்த பரிசிலரின் இடையில் இருந்த பழமையான நீர்ப்பாசி போன்ற ஆடையினைக் களைந்து, அழகிய பகன்றை மலர் போன்ற புத்தாடை கொடுத்து உடுப்பித்துச் சிறப்பித்தார்.*

....................என் அரை

முதுநீர்ப் பாசி அன்ன உடைகளைந்து

திருமலர் அன்ன புதுமடித் கொளீஇ[102]

*என்ற ஔவையாரின் வரிகளால் இதனைத் தெரியலாம்.*

### 2.9.2.4. நுண்ணிய நூலால் ஆன ஆடை

*பொகுட்டு எழினியைக் காண வந்த பரிசிலர்கள் அணிந்திருந்த "ஊரார் நீர் உண்ணும் கேணியிற் படர்ந்த பெரிய இலையை உடைய பாசியினது வேர் போல்" கிழிந்த உடையைக் களைந்துவிட்டு நேரிய கரையை உடைய நுண்ணிய நூலால் ஆன உடையைத் தந்து உடுப்பித்துச் சிறப்பித்தான் என்பதை,*

ஊர்உண் கேணிப் பகட்டு இலைப் பாசி

வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை

நுண்நூல் கலிங்கம் உடீஇ[103]

*என்னும் ஔவையாரின் வரிகளால் காணமுடிகின்றது.*

### 2.9.2.5. பகன்றைப் பூப் போன்ற ஆடை

*சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நாடி வந்த பரிசிலர் அணிந்திருந்த ஈனுதற்குரிய நாளை அடைந்து, முட்டை ஈன்ற பாம்பினது நாவின் வடிவைப் போல பழமையுற்றிருந்த உடையை முற்றவும் நீக்கினான்; அரும்பு மலர்ந்த*

பகன்றையின் புதுப்பூப் போன்ற அகல மடிக்கப்பட்ட ஆடையைக் கொடுத்து உடுப்பித்தான்.

....................நான்உற
ஈன்ற அரவின் நாஉருக் கடுக்கும் என்
தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கி
போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன
அகன்றுமடி கலிங்கம் உடீஇ[104]

என்னும் நல்லிறையனாரின் வரிகளால் இதனை நாம் அறிய முடிகின்றது.

### 2.9.2.6. பூ வேலைப்பாடு அமைந்த ஆடை

சோழன் குளமுற்றத்துத் துஞ்சி கிள்ளிவளவன் பரிசிலருக்குப் பாம்பின் உரிதாகிய தோலை ஒத்த வெள்ளிய பூவேலைப் பாடு செய்யப்பட்ட ஆடையினை அளித்தான்; கிள்ளிவளவன் மழை போன்று வழங்கும் வள்ளல் தன்மை கொண்டவன். 'வேனிற் காலத்து வெம்மை போல' வறுமையாகிய வெம்மையைப் போக்கக் கூடியவன். இதனை,

பாம்பு உரித்தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி அன்ன வண்மையின் சொரிந்து
வேனில் அன்ன என் வெப்பு நீங்க[105]

என்னும் தாயங்கண்ணனாரின் வரிகளால் தெளியமுடிகிறது.

### 2.9.2.7. மன்னன் அணிந்திருந்ததைப் போல உயரிய ஆடை

வாய்மைக்கு இருப்பிடமாகத் திகழும் வஞ்சனாகிய சேரமான் பரிசிலரைக் கண்டவுடன் அன்பால் மலர்ந்த முகம் உடையவன். பொருநனின் இடையில் சிதர்ந்து நார் நாராய்க் கிழிந்திருந்த உடையை நீக்கினான்; தன் இடையில் உடுத்தி இருந்த 'புகையை விரித்தாற் போன்ற' உயர்ந்த உடையைத் தந்து உடுப்பித்தான் என்பதை,

விரும்பிய முகத்தன் ஆகி, என் அரைத்
துரும்பு படு சிதாஅர் நீக்கி, தன் அரைப்
புகைவிரிந்து அன்ன பொங்குதுகில் உடீஇ[106]

என்னும் திருத்தாமனாரின் வரிகளால் அறியமுடிகிறது.

### 2.9.2.8. புத்தாடை அணிவித்து மகிழ்தல்

சோழன் நலங்கிள்ளி, நெடு மனையின் முற்றத்தில் நின்று இசைத்த பாணனின் தெளிந்த கிணைப் பறையின் ஓசையைக் கேட்டனன். கேட்ட அளவானே, பாணர்பால் உண்டான அருள் குறையாமல் பழமையுற்றுச் சிதர்ந்த பீறிய உடையை அரையிலிருந்து நீக்கினான். மிகப் பெருஞ் சிறப்புடைய புத்தாடை உடுப்பித்தான். அதை அணிந்து பொலியும் அரையைத் தான் பார்த்து மகிழ்ந்தனன். இதனை,

> தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி
> மிகப்பெருஞ் சிறப்பின் வீறு.........
> ..................................................
> கலிங்கம் அளித்திட்டு என் அரை நோக்கி[107]

என்னும் கோவூர் கிழாரின் வரிகளால் உணர முடிகின்றன.

### 2.9.2.9. பட்டாலான ஆடை

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தம்மை நாடி வந்த புலவரின் `நீரில் நனைந்த பருந்தின் இறகுபோல'ச் சேறுபடிந்து, நைந்து போயிருந்த பழங்கந்தல் உடையினை நீக்கினான். பட்டாலான ஆடைகளை வறுமை நீக்க அணிந்து கொண்டனர். இதனை,

> நீர்ப் படு பருந்தின் ஈர்ஞ் சிறகு அன்ன
> நிலம் தின் சிதாஅர் களைந்த பின்றை
> நூலாக் கலிங்கம் வால் அரைக் கொளீஇ[108]

என்னும் குமட்டூர் கண்ணனாரின் வரிகளால் தெளி யமுடிகின்றது. இவ்வாறாகப் பரிசில்களில் உடை முதன்மை இடம் பிடித்துள்ளது. அரசனைக் காணச் சென்றபோது ஆடை அணிவித்துச் சிறப்புச் செய்தனர் என்பதைப் புறப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### 2.9.3. தேறல்

பண்டைய வேந்தர்கள் தம்மைப் பாடிப் பெருமையும், புகழையும் நிலைநாட்டக் கூடிய புலவர்களையும், பரிசிலர்களையும் அழைத்துச் சிறப்பித்தார்கள். தேறல் (மது வகை, கள்)) அளித்து மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்கள்.

பாரியின் பறம்புமலை 'யானை மென்று போட்ட உணவினது சக்கை போல', மதுப் பிழிந்து போட்ட சக்கையிலிருந்து மதுச்சேறு ஒழுகும் முற்றத்தையுடையது எனக் கபிலர் உரைப்பதை,

களிறு மென்று இட்ட கவளம் போல,
நறவுப் பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்
வார் அசும்பு ஒழுகும் முன்றில்[109]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

வேள்பாரி பகைவேந்தர்க்கு இன்னாதவனாகவும், இரவலர்க்கு இனியவனாகவும் ஒழுகினான். பாணர் மகிழ்ச்சியுடன் உண்கலம் மதுவால் நிரம்பி வழியும், கள்ளாகிய தேறல் கல்லையும் உருட்டி ஓடி வரும் தன்மையுடையது. இதனை,

பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க உக்க தேக் கட் தேறல்
கல் அலைத்து ஒழுகும் மன்னே![110]

என்னும் கபிலரின் வரியால் தெளியமுடிகின்றது. பிட்டங்கொற்றன், பரிசிலர்க்கு நாரைப் பிழிந்தெடுத்த கள் தெளிவைப் பாணர் சுற்றத்திற்கு நுகரக் கொடுத்தான். இதனை,

நார்பிழிக் கொண்ட வெங்கட் தேறல்
பண் அமை நல் யாழ்ப் பாண் கடும்பு அருத்தி[111]

என்னும் தாமோதரனாரின் பாடல் வரிகளால் உணரமுடிகின்றது.

### 2.9.3.1. சுற்றத்தாரோடு தேறல் உண்டு களித்தல்

சோழன் கரிகாற் பெருவளத்தான் தமக்குத் துணையாகச் சேர்ந்த இனத்தோடு கூடி மதுவை நிரம்ப உண்டு பெரிய பாணராகிய சுற்றத்தைப் பாதுகாத்தான் எனக் கருங்குழலாதனார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

துணை புணர் ஆயமொடு தசும்பு உடன் தொலைச்சி
இரும் பாண் ஒக்கற் கடும்பு புரந்ததூஉம்[112]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

அதியமான் நெடுமான் அஞ்சி குறைவாகக் கள் கிடைக்குமானால் அதனைப் பரிசிலர்க்குத் தருவான். மிகுதியாகக் கள் கிடைக்கப் பெற்றால் அதனைப் பரிசிலர்

உண்டு எஞ்சிய மதுவைத் தான் விரும்பிய உண்ணுவான் என ஔவையார் எடுத்துரைக்கிறார்.

சிறிய கட் பெறினே, எமக்கு ஈயும்; மன்னே!
பெரிய கட் பெறினே,
யாம் பாட தான் மகிழ்ந்து உண்ணும் மன்னே![113]

என்னும் பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

### 2.9.3.2. புளிப்பேறிய தேறல்

ஒய்மான் நல்லியாதன் 'பாம்பு சீறினாற் போல' பெரிதும் நாட்பட்டு புளிப்பேறிய கள்ளினைத் தெளிவோடு அளிக்கவல்லவன், என நன்னாகனார் கூறியுள்ளார்.

அரவுவெகுண்டு அன்ன தேறலொடு[114]

என்னும் பாடல் வரி இதனை உணர்த்துகிறது.

பொகுட்டு எழினி (தேனினது கடுப்புப் போல', நாட்பட்ட புளிப்பேறிய கள்ளை, 'கோளாகிய விண்மீன் போன்ற' பொன்னாலாகிய பாத்திரத்தில் பெய்து கொடுப்பான் என ஔவையார் எடுத்துரைக்கிறார்.

தேட்கடுப்பு அன்ன நாட்படு தேறல்
கோள்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ[115]

என்னும் வரியால் அறியமுடிகின்றது.

### 2.9.3.3. நிழல் காணும் தெளிந்த தேறல்

சேரமான் வஞ்சன் என்ற வேந்தன் 'அழலை வெளிப்படுத்தினாற் போல்' ஒன்றும் இல்லாமல் காட்சியளித்த பொருநகை உண்கலத்தில் அவனின் நிழல் காணுமாறு தெளிந்த கள்ளினை நிரம்பி அளித்தவன்; பரிசிலருக்குக் கள்ளினை அளித்தும் தான் உண்ணும் உண்கலத்தில் இருந்த துண்டித்த மான் இறைச்சியாகிய வறுத்த பொரிக்கறியையும் அளிக்கவல்லவன் சேரவேந்தன் வஞ்சன் என திருத்தாமனார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

அழல்கான்று அன்ன அரும்பெறல் மண்டை,
நிழல்காண் தேறல் நிறைய வாக்கி
யாண்உண அருளல் அன்றியும் தான்உண்
மண்டை கண்ட மான்வறைக் கருனை[116]

என்னும் வரிகளால் காணமுடிகின்றது.

### 2.9.3.4. இஞ்சிப் பூவோடு சேர்ந்த தேறல்

சோழன் நலங்கிள்ளி இஞ்சிப் பூவோடு சேர்ந்த கள்ளினைப் பரிசிலருக்கு அளித்தவன்; அக்கள்ளினைப் பருகி பரிசிலர்கள் மகிழ்ச்சியால் தூங்காமல் நின்றனர் எனக் கோவூர்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

நார்அரி நறவின் நாள்மகிழ் தூங்குந்து[117]

என்னும் பாடல் வரிகளால் தெளிய முடிகின்றது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பரிசிலர்க்கு இஞ்சிப் பூவோடு சேர்ந்த தெளிந்த கள்ளினை அளித்ததை,

நனை அமை கள்ளின் தேறலொடு மாந்தி[118]

என்ற குமட்டூர் கண்ணனாரின் பாடல் வரி உணர்த்துகிறது.

### 2.9.3.5. நீலமணி நிறமுள்ள தேறல்

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் வீரப் போரிட்டு நின்ற வீரர்களுக்கும், பாணர் முதலானோருக்கும் கள்ளினை வழங்கினான்; இஞ்சியும் மலர்களும் சோத்துக் கட்டப்பட்ட சந்தனம் பூசிய குடத்தினுள்ளே இருக்கும் சுவைமிகுந்த 'முதிர்ந்த நீலமணி போலும்' நிறமுள்ள கள்ளைத் தான் மட்டும் உண்ணாது. பரிசிலர்க்குக் கொடுத்து அவர்களோடு இணைந்து பருகி மகிழ்ந்தான் எனப் பரணர் உரைப்பதை,

தீம் சேறு விளைந்த மணி நிறமட்டம்
ஓம்பா ஈகையின் வண் மகிழ் சுரந்து[119]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

### 2.9.3.6. பூமணம் கமழ்கின்ற தேறல்

கரிகாற் பெருவளத்தான் பெறுதற்கரிய பொற்கலத்தில் பரிசிலர் விரும்பியவற்றையெல்லாம் உண்பீர் உண்பீர் என வேண்டினான்; பூமணம் கமழ்கின்ற

கள் தெளிவை மேன் மேலும் வார்த்து அளித்தான்; அவர்கள் அமையும் அமையும் எனக் கையான் மறுத்து அதனைப் பருகி இன்புற்றனர் என முடத்தமாணக் கண்ணியார் வெளிப்படுத்தியதை,

பெறலருங் கலத்தின் பெட்டாங்கு உண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குடி தரத்தர
வைகல் வைகல் கைகவி பருகி[120]

என்னும் பாடல் வரிக்கொண்டு தெளியமுடிகின்றது. இவ்வாறாக இலக்கியத்தில் பரிசிலருக்குத் தேறலாகிய கள்ளினை அளித்தும் தானும் உண்டும் வேந்தர்கள் மகிழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

### 2.9.4. களிறு

சங்கக் கால வேந்தர்கள் தம்மைப் பாடி வந்த புலவர்கள் மற்றும் இரவலர்களுக்கு வேண்டிய யானை போன்ற பாசில்களை நல்கும் புரவலர்களாகவும் திகழ்ந்தனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி புலவர்க்கு யானை வழங்கிச் சிறப்பித்தான். இதனை,

பூநு தல் யானையொடு புனைதேர் பண்ணவும்[121]

என்ற நெட்டியமையாரின் பாடல் வரியால் உணரலாம்.

### 2.9.4.1. விண்மீன் கூட்டம் போன்ற யானை அளித்தல்

ஆய் அண்டிரன் தன்பால் வரும் பரிசிலர் யாவர்க்கும் மிகுதியான யானைகளை வழங்குவான். மேகம் மறைத்தல் இன்றி வானம் பல விண்மீன் பூத்து வெள்ளொளி பரந்து வெண்மைச் செய்யும். அதைவிட இரவலர்க்கு ஈந்த யானையின் தொகை மிகுதியானது என முடமோசியார் ஆய் அண்டிரன் தரும் யானைப் பரிசின் தொகையைக் கூறியுள்ளார்.

ஆஅய் அண்டிரன், அடு போர் அண்ணல்
இரவலர்க்கு ஈத்த யானையின் கரவு இன்று
வானம் மீன் பல பூப்பின் ஆனாது
ஒரு வழீக் கரு வழி இன்றிப்
பெரு வெள்ளென்னின் பிழையாது மன்னே[122]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

*தன்பால் வரும் பரிசிலர்க்கு ஆய் அண்டிரன் களிறுகளை மிகுதியாக வழங்குவதைக் கண்டு பெருவியப்புற்றான் முடமோசியார் என்ற புலவன் நின் நாட்டில் யானை ஒரு சூலுக்கு ஒரு கன்றுதான் ஈனுமே தவிர பல கன்றுகளை ஈனாது; அவ்வாறிருக்க களிறுகள் பலவற்றைக் கொடையாக அளிக்கும் தன்மையை விளக்குவது எங்ஙனம்? என்று வியப்புற்றனர். எந்த சூழ்நிலையிலும் பரிசிலருக்கு இன்முகத்தோடும், அன்போடும் பரிசில் நல்கும் வள்ளன்மை உடையவர் என்று விளங்கியமையை,*

..........................நின் நாட்டு
இளம் பிடி ஒருசூல் பத்து ஈனும்மோ?
நின்னும் நின் மலையும் பாடி வருநர்க்கு
இன்முகம் கரவாது உவந்து நீ அளித்த
அண்ணல் யானை எண்ணின்[123]

*என்னும் பாடல் வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றன.*

### 2.9.4.2. மலை போன்ற யானை அளித்தல்

*'நாஞ்சில் வள்ளவன்' என்ற மன்னன் பரிசிலருக்கு வரிசை அறிந்து பரிசில் நல்கும் தன்மையன். இரவலர்களின் வறுமையைப் போக்க 'கரம் சூழ்ந்த மலை' போன்றதொரு யானையை அளித்தான் என ஔவையார் சுட்டுவதை,*

..........................தான் பிற
வரிசை அறிதலின் தன்னும் தூக்கி
இருங் கடறு வளைஇய குன்றத்து அன்னது ஓர்
பெருங் களிறு நல்கியோனே[124]

*என்னும் வரிகள் தெளிவாக்குகின்றன. 'வல்வில் ஓரி' என்ற வள்ளல் பரிசிலருக்கு யானைகளை இனத்தோடு கொடுத்து மகிழ்ந்தான் என வன்பரணர் குறிப்பிட்டுள்ளார்.*

யானை இனத்தொடு பெற்றனர்[125]

*என்னும் பாடல்வரி இதனைப் புலப்படுத்துகிறது.*

### 2.9.4.3. யானையைப் பரிசில் வேண்டி பெறுதல்

'குமணன்' என்ற வள்ளல் தம்மை நாடி வரும் பரிசிலர்கள் வேண்டும் பரிசிலை அளிக்கும் வள்ளன்மை உடையவன். புலவர், குமணனிடம் களிற்றின் மீதேறித் தலைமை தோன்றச் செல்லுதலை விரும்பினேன் என்ற எண்ணத்தைத் தெரிவித்து யானையைப் பரிசிலாகப் பெற்று மகிழ்ந்தனர். இதனை,

பனை மருள் தடக் கையொடு முத்துப் பட முற்றிய
உயர் மருப்பு ஏந்திய வரை மருள் நோன் பகடு[126]

அணிகலங்களைக் களிற்றுடன் வேண்டினாலும் அங்ஙனமே தரும் பெருந்தமையாளன் எனக் காரிக்கண்ணனார் எடுத்துரைப்பதை,

அருங்கலம் களிற்றொடு வேண்டினும்[127]

என்னும் பாடல் வரியின்மூலம் உணரமுடிகின்றது. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனைக் காண வந்த புலவர் யானையைப் பரிசிலாகப் பெறவேண்டும் என்ற வந்தனர் எனக் கழாத்தலையார் குறிப்பிடுவதை,

களிறு முகந்து பெயர்குவம்[128]

என்னும் பாடல் வரியின்மூலம் அறியமுடிகின்றது. சேரமான் கடலோட்டிய வெல்கெழு குட்டுவனிடத்தில் படியுடன் கூடிய யானையைப் பரிசிலாக வேண்டிய புலவர்களுக்கெல்லாம் கொடுத்து மகிழ்ந்தனர் எனப் பாணர் சுட்டுவதை,

துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே![129]

என்னும் பாடல் வரிகள் கொண்டு அறியமுடிகின்றது.

### 2.9.4.4. ஆண் யானையை அளித்தல்

பகை நாட்டைச் சூரையாடுவதில் வல்லவர்களான வீரர்களுக்குக் கொலைச் சினமிக்க ஆண் யானைகளை அளித்தான். இதனை,

கொண்டி மள்ளர் கொல் களிறு பெறு![130]

என்ற பரணரின் வரிகளால் உணரலாம். இவ்வாறாக வேந்தர்கள் பரிசிலர்களுக்கு யானைகளைப் பரிசிலாக அளித்து சிறப்பித்தார்கள் என்பதை அறியமுடிகின்றது.

### 2.9.5. குதிரை

செங்குட்டுவனின் போர்க்கள வெற்றியைப் போற்றிப் பாடும் அகவலன் பாணன் குதிரைகளைப் பரிசாகப் பெறுக என்று முரசறைந்து கூறுவான் எனப் பரணர் கூறியுள்ளதை,

கண்டி நுண்கோல் கொண்டு களம் வாழ்த்தும்
அகவலன் பெறு, மாவே![131]

என்னும் பாடல் வரிகள் மேற்கூறிய கூற்றை மெய்ப்பிக்கின்றன.

தொண்டைமான் இளந்திரையன் பரிசிலருக்கு அளிக்கும் கொடை போதாது என்று எண்ணி மீண்டும் மீண்டும் அழைத்துப் பரிசில் நல்கும் பண்பாளன்; கொடைமேல் விருப்பம் கொண்டவனாய்ப் பகைவரிடமிருந்து கவர்ந்த குதிரைகளுடன் பொற்சேணங்களையும் தருவான்; பரிசிலர் சென்ற அன்றே இவை தவிர வேறு பரிசிலர்களையும் தருவான் என உருத்திர கண்ணனார் கூறுவதை,

ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஒழித்த
விசும்புசெல் இவுளியொடு பசும்படை தரீஇ[132]

என்னும் வரிகள் மூலம் தெளிய முடிகின்றது.

### 2.9.6. தேர்

சங்க கால மன்னர்கள் மகிழ்ச்சியாக இருக்கையில் பரிசில்களை வாரி வாரி வழங்கிச் சிறப்பு செய்தனர். பரிசிலில் தேரோடு குதிரையையும் அளித்து மகிழ்ந்தனர். சங்க வேந்தர்கள் அளித்த பரிசில்களில் சிறப்பிடம் பெறுவது தேர். மன்னர்களைத் தேடி வரும் பரிசிலர்களுக்கு எண்ணற்ற பரிசில்களை நல்கி தேரில் அமர்த்தி அவரவர் இல்லம் செல்ல அனுமதி அளிக்க மனம் இல்லாமல் வழியனுப்புவான். பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதி புலவர் 'பொருந்திய பட்டமுடைய நெற்றி'யுடன் விளங்கும் யானையுடன் அலங்கரிக்கப் பெற்ற தேரினைச் செலுத்துமாறு அமைத்தனர் என நெட்டிமையார் குறிப்பிடுவதை,

பூ நுதல் யானையொடு புனை தேர் பண்ணவும்[133]

என்னும் வரிகளால் தெளியமுடிகிறது.

பரிசிலருக்குப் பரிசில்கள் வழங்கி; அவர்களைத் தேரில் அமர்த்தி அனுப்பவேண்டும் என்பதற்காக தேர்களின் இருப்பையை உடையது பாரியின் பறம்பு மலை எனக் கபிலர் எடுத்துரைப்பதை,

தேர் வீசு இருக்கை நெடியோன் குன்றே[134]

என்னும் வரியில் காணமுடிகின்றது. மலையமான் திருமுடிக்காரி மகிழ்ச்சியுடன் இருக்கும்போது தேர் வழங்குதல் யாவர்க்கும் எளிது எனக் கபிலர் உரைப்பதை,

யார்க்கும் எளிதே தேர் ஈதல்லே[135]

என்னும் வரியால் மூலம் உய்த்துணர முடிகின்றது. கரிகாற் பெருவளத்தான் யானைக் கொம்பாற் செய்த கொடிஞ்சியையுடைய தேரிடத்தே அரக்கு ஊட்டப்பட்ட தலையாட்டம் அசையவும், பிடரி மயிர் அசையவும் 'பால் போன்ற' வெண்ணிறம் அமைந்த நான்கு குதிரைகளை ஒருங்கே கட்டித் தந்தருளினான் என முடத்தாமக் கண்ணியார் குறிப்பதை,

கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்
ஊட்டுளை துயல்வர ஓரி நுடங்கப்
பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்[136]

என்னும் பாடல் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

ஓய்மா நாட்டு நல்லியக் கோடன் தச்சன் தொழில் முற்றுப்பெற்ற பின்னர் ஏறிப்பார்த்து நல்ல ஓட்டம் உண்டென்று புகழப்பட்ட அழகிய நடையை உடைய தேரோடு குதிரையைப் பின்னிடச் செய்யும் ஓட்டமுடை வெள்ளை எருதையும் அதனை ஊரும் பாகனொடு யானை குதிரை அணிகலன் முதலிய ஏனைப் பரிசில்களையும் வழங்கினான் என உருத்திர கண்ணனார் கூறுவதை,

கருஞ்தொழில் வினைஞர் கைவினை முற்றி
ஊர்ந்து பெயர் பெற்ற எழில்நடை பாகரொடு
மாசெலவு ஒழீக்கும் மதனுடை நோன்றாள்
வாண்முகப் பாண்டின் வலவனொடு அரீஇ[137]

என்னும் வரிகள் கொண்டு அறியமுடிகின்றது. இவ்வாறாகப் பரிசில்கள் பெற்று செல்கின்ற புலவர்களையும், பரிசிலர்களையும் தேர் மீது ஏற்றிச் சென்று சிறப்பு செய்வதையே மன்னர்கள் பெருமையாக எண்ணினர் என்பது பெறமுடிகின்றது.

### 2.9.7. ஆனிரை

சங்கப் பரிசில்களில் ஆனிரையும் ஒன்றாகும். புலவர்கள் தமக்கு வேண்டும் பரிசிலை வேந்தனிடம் உரிமையாகவே கேட்டுப் பெற்றுள்ளனர். பிட்டங் கொற்றனிடம் இனமாகிய நல்ல காளைகளைத் தொழுவோடு (கொட்டில்) வேண்டினர் எனக் காயக்கண்ணனார் குறிப்பிடுவதை,

இன மலி கதச் சேக் களனொடு வேண்டினும்[138]

என்னும் வரியின் மூலம் தெளிய முடிகின்றது. செல்வக் கடுங்கோ வாழியாதன் துஞ்சிய பிறகு அவன் அளித்த பரிசில்களையெல்லாம் எண்ணி மகிழ்ந்தான் புலவன். அப்பரிசில்களில் புலவனுக்கு உடனே நினைவில் வந்தது மன்றிடம் நின்ற பசுக்கூட்டங்களை அளித்ததுதான் என குண்டுகட் பாலியதனார் கூறுவதை,

மன்று நிறையும் நிரை என்கோ?[139]

என்னும் வரி இதனை நமக்கு உணர்த்துகிறது. கல்லாடனார் என்ற புலவர் வேங்கடப் பகுதியைச் சார்ந்தவர். முன்னர் ஒரு முறை பொறையாற்றுக் கிழானிடம் பரிசு பெற்றுச் சென்றவர் மீண்டும் வந்தனர். புலவர் தனக்கு வேண்டுவன அளிக்க என்று வேண்டாமல் நெல்லின் தானியப் போர் எருதுகளின் பேருழைப்பால் உண்டாகிய பெரும் பொருளை மகிழ்ச்சி மிக வாழ்த்திப் பெற்றார். இதனை,

முகடுற உயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
பகடுதர பெருவளம் வாழ்த்தி, பெற்ற
திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி[140]

என்னும் பாடல் வரிகளைக் கொண்டு அறிந்துணர முடிகிறது.

'தாமான் தோன்றி கோன்' என்ற வேந்தன், புலவர் முடவராதலின் (மாற்று திறனாளி) பகடு பூட்டிய வண்டியில் தான் அவர் செல்ல இயலும். அதனை அறிந்த கோன் அவருக்கு ஊர்தியொடு பரிசில் நல்கினான்.

'வானத்தே விண்மீன்கள் பூத்தாற் போல', அழகிய நிறத்தை உடைய பலவாகிய ஆநிரைகளை ஊர்ந்து செல்வதற்கேற்ற காளைகளோட நல்கினான் என ஐயூர் முடவனார் குறிப்பிட்டதை,

..............................விசும்பின்

மீன்பூத்து அன்ன உருவப் பல் நிரை

ஊர்தியொடு நல்கி யோனே[141]

என்னும் வரிகளில் அறியமுடிகின்றது.

நன்னன் பரிசில் நீட்டியாது பரிசிலர் விருப்பம் போல் கொடுக்கும் கொடையாளன். மணிகள் ஆரவாரிக்கும் ஏறுகளையுடைய பல நிரைகளை அளித்தவன் எனப் பெருங்கௌசிகனார் எடுத்தியம்புவதை,

கறங்குமணி துவைக்கு ஏறுடைப் பெருநிரை[142]

என்னும் வரியால் அறிய முடிகின்றது. இவ்வாறாகச் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் ஆனிரை பரிசிலாக அளிக்கப்பட்டதை அறியமுடிகிறது.

### 2.9.8. அணிகலன்

சங்க கால வேந்தன் பரிசிலருக்கு அளித்த பரிசில்களில் முக்கியமானது அணிகலனே ஆகும். இப்பரிசில் ஏனைய பரிசில் பொருள்களை அலங்கரித்தது. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி பரிசிலர்க்கு அரிய மதில் அரண்கள் பலவற்றை வழங்கினான். அவ்வரண்களில் கொண்ட அழகிய அணிகலன்களைப் பரிசிலர்களுக்கு முறையுடன் வழங்கினான் எனக் காரிக்கிழார் கூறியுள்ளதை,

பாசவல் படப்பை ஆர் எயிர் பல தந்து

அவ்எயில் கொண்ட செய்வுறு நன் கலம்

பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கி[143]

என்னும் வரிகளின் மூலம் காணலாகின்றன.

சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் பரிசில் வேண்டியோர்க்கு அரிய அணிகலன்களை நல்குவன்; ஆகவே அவன் கைகள் முழந்தாளைத் தொடும் வன்மை உடையது எனக் கபிலர் கட்டுவதை,

பரிசிலர்க்கு அருங் கலம் நல்கவும்; குரிசல்!

வலிய ஆகும் நின் தாள் தோய் தடக் கை[144]

என்னும் வரியால் உணர முடிகின்றது.

பரிசிலர்க்கு மட்டுமல்லாது வேள்விச் செய்யும் அந்தணர்க்கும் பரிசில் அளித்தான் வேந்தன். வேள்வி செய்தலை உடைய அந்தணர்க்குப் பெறற்கரிய அணிகலன்களைத் தாரை நீர் வார்த்துக் கொடுத்த பெருந்தகையாளன் எனப் புலவர் கூறுவதை,

கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு
அருங்கலம் நீரோடு சிதறி[145]

என்னும் வரிகளால் அறியலாம்.

சோழன் இளஞ்சேட் சென்னியன் பெறுதற்கரிய அணிகலன்களும், பிற பொருள்களாகிய செல்வத்தையும் பரிசிலர்க்குத் தாங்க மாட்டாத அளவு வழங்கினான் என ஊன்பொதி பசுங்குடையார் கூறுவதை,

மேம்படு சிறப்பின் அருங்கல வெறுங்கை
தாங்காது பொழிதந் தோனே[146]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் பாணர், விறலியருக்கு உயர்ந்த பொன்னணிகளை நிறையத்தரும் கொடையாளன் எனப் பாலைக் கௌதமனார் உரைப்பதை,

சிறு மகிழானும் பெருங் கலம் வீசும்[147]

என்னும் வரியால் அறிந்துணர முடிகிறது.

ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் இரவலர்க்கு வறுமைத் துயர்தீர நாளும் இல்லையென்னாது அணிகலன்களை அள்ளித் தருவான் எனப் புலவர் கூறுவதை,

இரவலர் புன்கண் தீர. நாள் தொறும்
உரை சால் நன் கலம் வரைவு இல வீசி[148]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் பாணர் தன் சுற்றத்தாருடன் சென்றாலும் கடலில் கிடைத்த முத்துக்களும், நல்ல அணிகலன்களும் பரிசிலாக வழங்கினான் எனக் கபிலர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

கடன் அறி மரபின் கை வல் பாண!

தெண் கடல் முத்தமொடு நன் கலம் பெறுகுவை[149]

என்னும் வரிகளால் அறிந்துணர முடிகின்றன. சேரமான் இளஞ்சேரல் இரும்பொறை விறலியர்க்கு நிறைய அணிமணிகளை அளிப்பான் எனப் பெருங்குன்றூர் கிழார் உரைப்பதை,

சென்மோ, பாடினி! நன் கலம் பெறுகுவை[150]

என்னும் வரிகள் மூலம் அறியமுடிகின்றன.

**2.9.9. பொற்றாமரை**

பொன்னாகிய தாமரைப் பூ பரிசில் பொருள்களில் தனிச் சிறப்பு பெற்றுத் திகழ்கிறது. பாண்டியன் பல்யாகச் சாலை முதுகுடுமிப் பெருவழுதி பாணர்க்குப் பொற்றாமரையை அளித்தார் என நெட்டிமையார் சுட்டுவதை,

பாணர் தாமரை மலையவும்[151]

என்னும் பாடல் வரி புலப்படுத்துகின்றது. பொற்றாமரையினை வெள்ளியிழையில் கட்டி மாலையாகப் பாணர்க்குக் கொடுத்தல் இயல்பாகக் கொண்டிருந்தனர் வேந்தர்கள்.

சோழன் நலங்கிள்ளி நெருப்பிலிட்டுத் தகடாக்கிச் செய்த தாமரை மலரை மெல்லிய கம்பியாகச் செய்த வெள்ளியிழையாகிய நூலில் இட்டதும், வேலைப் பாடமைந்த அழகு பொலிவதுமாகப் பொன்னாலாகிய அணிகலனைச் சூடிக்கொண்டு பாணர்கள் தம் சுற்றமுடன் சூழ்ந்து விளங்கியது வேந்தனின் அணிகலன் என முதுகண்ணன் சாத்தனார் கூறுவதை,

அழல் புரிந்த அடர் தாமரை

ஐது அடர்ந்த நூற் பெய்து

புனை வினைப் பொலிந்த பொலன் நறுந் தெரியல்

பாறு மயிர் இருந்தலை பொலியச் சூடி[152]

என்றும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. கிள்ளிவளவனிடம் சென்று பரிசில் பெற்று வரும் பாணர் எதிர்வரும் பாணனை நோக்கி பாணனைப் பூவில் தேன் உண்ணும் வண்டு மொய்க்காத பொன்னால் ஆகிய தாமரையைப் பெறுவாய் என ஆற்றுப்படுத்துவதற்காக ஆலத்தூர் கிழார் கூறுவதை,

...............பூவின்

ஆடு வண்டு இமிராத் தாமரை[153]

என்னும் பாடல் வரியால் உணர முடிகின்றது. வையாவிக் கோப்பெரும்பேகன் பாணர்களுக்குப் பொன்னாகிய தாமரை மலரைச் சூட்டினான் எனப் பரணர் எடுத்துரைப்பதை,

பாணன் சூடிய பசும் பொற்றாமரை[154]

என்னும் வரியின் மூலம் காணமுடிகின்றது. வேந்தர்கள் வாடாத பொன் தாமரைப் பூவினைத் தலையில் பரிசாகச் சூட்டினார்கள் என ஆலங்குடி வங்கனார் உரைப்பதை,

வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே[155]

என்னும் வரியில் தெளியலாம். அழகிய நீர் நிலையில் பூக்காத, எரிபோலும், பெரிய பொற்றாமரைப் பூவினைப் பாணன் தன் சென்னியில் அணிந்து விளங்கினர் எனக் கூகைக்கோழியார் விளக்குவதை,

பாணன் சென்னிக் கேணி பூவா

எரிமருள் தாமரைப் பெருமலர் தயங்க[156]

என்னும் வரிகளைக் கொண்டு தெளியமுடிகின்றது. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பாணர்களுக்குப் பசும்பொன்னாலான பூக்களைச் சூட்டி மகிழ்ந்தான் எனக் காப்பியாற்று காப்பியனார் உரைப்பதை,

பாணர் பைம் பூ மலைய[157]

என்னும் வரியில் அறியலாம். கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் தம்மைப் பாடிவரும் பாணருக்கு நல்ல பொன்னால் செய்த தாமரைப் பூவைச் சூட்டி மகிழ்ந்தான் எனப் பரணர் குறிப்பிட்டுள்ளார்.

பைம் பொன் தாமரை பாணர்ச் சூட்டி[158]

என்னும் பாடல் வரியின் மூலம் காணமுடிகின்றது.

கரிகாற் பெருவளத்தான் பரிசிலர்க்கு 'நெருப்புத் தழைத்தாற் போன்ற' செயற்கையால் அன்றி இயற்கையால் தனக்கு இதழுற்ற பொற்றாமரை மலரைக் கடை குழன்ற கரிய மயிரிடத்தே அழகுறச் சூட்டி மகிழ்ந்தனன். பேகன் பாணர்களுக்குப் பொற்றாமரையைப் பரிசாக அளித்தும் அதனை அவர்கள் தலைமேலே சூட்டி மகிழ்ந்தனன் என முடத்தாமக் கண்ணியார் கூறுவதை,

எரி அகைந் தன்ன ஏடுஇல் தாமரை

சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி[159]

என்னும் பாடல் வரியின் மூலம் இதனை அறியலாம். தொண்டைமான் இளந்திரையன் பாணர்களுக்கு வெண் பெற்றாமரையைச் சூட்டி மகிழ்ந்தான் என உருத்திரகண்ணனார் கட்டுவதை.

ஆடுவண்டு இமிரா, அழலவிர் தாமரை

நீடுஇரும் பித்தை பொலியச் சூட்டி[160]

என்னும் செய்யுள் அடிகள் இதனை மெய்ப்பிக்கின்றன.

**2.9.10. பொன்மாலை**

சங்க கால வேந்தர்கள் பரிசிலருக்கும், பாணர், விறலியருக்கும் பொன்மாலையைப் பரிசிலாக அளித்து மகிழ்ந்தனர். பேகன் விறலிக்கு மாட்சியமைக்கப்பட்ட அணியுடைய பொன்னரி மாலையைப் பரிசிலாக வழங்கினான் எனப் பரணர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

மாண் இழை விறலி மாலையொடு விளங்கு[161]

எனும் வரியினால் உய்த்துணர முடிகிறது.

கண்டீரக் கோப்பெரு நள்ளி தம்மை நாடி வந்த பரிசிலரிடம் பெறுதற்குரிய பெருமையணிந்த நல்ல அணிகலங்களைத் தரவேண்டும் என எண்ணினன்; ஆனால் நாட்டை விட்டுக் காட்டில் இருப்பதால் கொடுக்க முடியவில்லை என வருந்தினன்; இருப்பினும், தன் மார்பில் அணிந்திருந்த முத்துவட ஆரத்தையும், முன் கையில் அணிந்த கடகத்துடன் (வளை) தந்தனன் என வன்பரணர் உரைத்துள்ளார்.

பெறுதற்கு அரிய வீறுசால் நன் கலம்

பிறிது ஒன்று இல்லை காட்டு நாட்டேம் என

மார்பில் பூண்ட வயங்கு காழ் ஆரம்

மடை செறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்[162]

என்னும் வரிகள் மூலம் தெளியமுடிகின்றது.

வேந்தர்கள் பாணனுக்கு மட்டுமல்லாது விறலினுக்கும் பரிசில் நல்கினார்கள். பாணனின் மனைவியாகிய பாடினிக்குப் பொன்னரிமாலை அணியை அளித்ததை,

பாடினி மாலை அணி[163]

என்ற வரியில் ஆலங்குடி வங்கனார் குறிப்பிட்டுள்ளார். வேந்தர்கள் வாடாத பொன்மாலையைப் பாடினிக்கு அளித்து மகிழ்ந்தனர் எனக் கூகைக் கோழியார் கட்டுவதை,

வாடா மாலை பாடினி அணிய[164]

என்னும் வரியின் மூலம் தெளியமுடிகின்றது.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாசறைக் கண்ணே தங்கியிருந்தான். அச்சமயத்தில் பரிசிலர்கள் வந்து 'நிலவு போல் ஒளிவீசும் மன்னனின் மாலையைப் பெறலாம்' என்று எண்ணி வந்ததை,

நிலவுத்திகழ் ஆரம் முகக்குவம்[165]

என்னும் வரியால் அறியமுடிகிறது. சேரமான் வஞ்சன் உலகுமெல்லாம் விலைமதிக்கத் தக்க பல மணிகள் விரவிக் கோர்க்கப்பட்டு ஒளி விளங்கும், 'பாம்பு போல்' வளைந்து கிடைக்கும் மாலையை நல்கிய,

விரவுமணி ஒளிர்வரும்அரவு உறழ் ஆரமொடு[166]

என்னும் வரியால் தெளிய முடிகின்றது. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் அழகிய நெற்றியை உடைய நாடக மகளிருக்குப் பொன்னால் செய்த மாலைகளைச் சூட்டினான் எனப் பரணர் உரைப்பதை,

ஒள் நுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டி[167]

என்னும் வரியின் மூலம் உய்த்துணர முடிகின்றது. கரிகாற் பெருவளத்தான் நூலாற் கட்டாத நுண்மையினையும் பிணக்குத்தையும் உடைய பொன்னரி மாலையையும் வெள்ளிய முத்து மாலையும் பாடினி சூடத் தந்தருளினான்.

நூலின் வலவா நுணங்கரில் மாலை
வால்ஒளி முத்தமொடு பாடினி அணிய[168]

என்னும் வரிகளால் காணமுடிகின்றன. இவ்வாறாகச் சங்கப் பரிசில்களில் பொன்னரி மாலையைப் பரிசிலாக பெற்றுத் திகழ்ந்தனர் பரிசிலர்கள் என்பது பெறமுடிகிறது.

**2.9.11. பொன்**

பொன்னாலாகிய அணிகலன் அனைவரையும் அழகுப்படுத்தக் கூடியது. மற்றவரின் கவனத்தை ஈர்க்கும் ஆற்றல் உடையது. பகைவருடைய யானைகளைக் கொன்று அவற்றின் நெற்றிப் பட்டத்துப் பொன்னைக் கொண்டு தாமரைப் பூக்கள் செய்து பாணர்க்கு வழங்குவது பண்டைத் தமிழர் மரபாகக் கொண்டிருந்தார்கள் என நப்பசலையார் கூறுவதை,

ஒன்னார் யானை ஓடைப் பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ[169]

என்னும் பாடல் வரிகள் அறியமுடிகின்றது.

வல்வில் ஓரி 'பரிசிலர்க்குத் தன் மலையில் பிறந்த வலியில்லாத நல்ல பொன்னைப் பல மணித்திரளுடன் கலந்து கொள்வீராக' என்று சொல்லிச் கரத்திடத்தே தந்தனன் என வன்பரணர் உரைத்துள்ளதை,

தன் மலைப் பிறந்த தாஇல் நன் பொன்[170]

என்னும் வரியால் உணரமுடிகின்றது. வேந்தர்கள் பரிசிலருக்கு மட்டுமல்லாது பார்ப்பனருக்குப் பரிசில் நல்கினார்கள் என ஔவையார் குறிப்பிட்டுள்ளார்.

ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புரைபடச் சொரிந்து[171]

என்னும் வரிகளால் தெளிய முடிகிறது.

சோழன் பெருநற் கிள்ளி இரவலர்களுக்கு நானிலங்களிலிருந்து பெறப்பட்ட பொருள்களைப் பரிசிலாக நல்கினான்; அதில் காட்டிற் பெறப்பட்ட பொன்னை வழங்கி மகிழ்ந்தான் என உலோச்சனார் புலப்படுத்துகின்றார்.

கடறுபயந்த பொன்னும்[172]

என்னும் பாடல் வரியால் உணரமுடிகின்றது.

இவ்வாறாக பரிசிலர்கள் பொன்னைப் பரிசிலாகப் பெற்று வாழ்வை பொன்மயமாக வாழ்ந்தார்கள் என்பதை அறியமுடிகின்றது.

**2.9.12. மணி**

சங்கப் பரிசிலை அலங்கரித்து அழகுப்படுத்துவது மணியாகும். வல்வில் ஓரி பல மணிகளைச் சுரத்திடத்தே இரவலர்க்கு வழங்கினான் என வன்பரணர் உரைப்பதை,

பல் மணிக் குவையொடும் விரைஇ கொணர்ம் என
சுரத்திடை நல்கியோனே[173]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

சோழன் பெருநற்கிள்ளி மலையிடைப் பெற்ற மணிகளை இரவலர்க்கு அளித்து மகிழ்ந்தனன் என உலோச்சனார் சுட்டுவதை,

மலை பயந்த மணியும்[174]

என்னும் வரியால் உணர முடிகின்றது. இவ்வாறாக மணிகள் பரிசிலை அழகுப்படுத்துகின்றன.

**2.9.13. முத்து**

கடலில் பிறந்த முத்து பரிசிலில் ஒளியாய் ஒளிர்ந்தது. பிட்டங் கொற்றன் சிறுகண் யானையின் தந்தத்தில் விளைந்த ஒளி திகழும் முத்தத்தை விறலியர்க்குக் கொடுத்தான் என தாமோதரனார் சுட்டுவதை,

ஒளி திகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து[175]

என்னும் வரியால் காணமுடிகின்றது.

சோழன் பெருநற்கிள்ளி இரவலர்க்கு சுடல் இடத்தே பெறப்பட்ட ஒளி படைத்த முத்துக்களைப் பரிசிலாக நல்கினான் என உலோச்சனார் உரைத்துள்ளார். இதனை,

கடல்பயந்த கதிர்முத்தமும்[176]

என்னும் பாடல் வரியில் உய்த்துணர முடிகின்றது. கரிகாற் பெருவளத்தான் பாடினிக்கு வெள்ளிய முத்து மாலையை சூடத் தந்தனன் என முடத்தாமக் கண்ணியார் கூறியுள்ளார். இதனை,

வால்ஒளி முத்தமொடு பாடினி அணிய[177]

என்னும் பாடல் வரியால் அறியமுடிகின்றது. இவ்வாறாகச் சங்கப் பரிசில் முத்தாக மிளிர்கின்றது.

**2.9.14. நாடு, ஊர்**

புலவரின் அறிவுத் திறனுக்காகவும், இரவலனுக்கு அளிக்கும் கொடைக்காகவும், புரவலான விளங்கும் வேந்தர்கள் நாடுகளையும், பல ஊர்களையும் பரிசிலாக அளித்து மகிழ்ந்தார்கள்.

வேள்பாரியிடம் வடித்து முறுக்கப்பட்ட நரம்பினையுடைய யாழை வாசித்து; மணம் பொருந்திய கூந்தலையுடைய விறலியர் பின்வர ஆடியும், பாடியும் சென்றால் நாட்டையும், மலையையும் பரிசிலாகத் தருவான் எனப் பாணர்கள் உரையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு கபிலர் கூறுவதை,

சுகிர் புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரைஒலி கூந்தல் நும்விறலியர் பின்வர
ஆடினீர் பாடினீர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே[178]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

பாரியைப் பாடி வந்த பரிசிலருக்கு முந்நூறு ஊர்களைப் பரிசிலாக நல்கினான் என்று கபிலர் சுட்டுவதை,

முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்[179]

என்னும் வரியின் மூலம் உணரமுடிகின்றது. மலையமான் திருமுடிக்காரியின் நாடு பரிசிலர் மட்டுமல்லாது வேள்வித்தீயை ஓம்பும் அந்தணர்க்கும் உரிமை உடையது எனக் கபிலர் கூறுவதை,

அழல் புறந்தருஉம் அந்தணரதுவே[180]

என்னும் வரியால் தெளிய முடிகின்றது. பரிசிலருக்கு நீர்வளம் மிக்கிருந்த மருத நிலத்து ஊர்களைக் கொடுத்தனர் எனச் சிறுவெண் தேரையார் குறிப்பதை,

ஆம் இருந்த அடைநல்கி[181]

என்னும் வரியால் தெளியமுடிகின்றது. சேரமான் இளஞ்சேரல் இரும்பொறை கபிலரை அழைத்துக் கொண்டு நன்றா என்ற ஒரு குன்றின் மீதேறி நின்று, கண்ணுக்கு எட்டிய தூரம் வரை உள்ள ஊர்களெல்லாம் பரிசாகத் தந்தனர் எனப் பெருங்குன்றூர்க் கிழார் கூறுவதை,

உவைல கூராக் கவலை இல்நெஞ்சின்

நஉவில் பாடிய நல் இசைக்

கபிலன் பெற்ற ஊரினும் பலவே[182]

என்னும் வரிகளால் காணமுடிகின்றது.

இவ்வாறாக பரிசிலருக்கும், அந்தணர்க்கும் நாடும், ஊரும் பரிசிலாக அளித்து சிறப்பித்தார்கள் என்பதை அறியமுடிகின்றது.

**2.9.15. நெல்**

மனிதனின் அடிப்படைத் தேவைகளில் முதன்மை இடம்கொண்டது உணவு. உணவினை அளிப்பது நெல். அந்நெல்லினைப் பரிசிலாக வாரி வழங்கிச் சிறப்பித்தார்கள் வேந்தர்கள். பிட்டங் கொற்றனிடம் நெற்களத்தில் குவித்து வைத்த நெல்லின் குவியலை அளிப்பவர் எனக் காரிகண்ணனார் புலப்படுத்துவதை,

களம்மலி நெல்லின் குப்பை வேண்டினும்[183]

என்னும் வரியால் உணர முடிகின்றது.

அதியமான் நெடுமான் அஞ்சி 'வேங்கைப் பூவைக் கண்டாற் போன்ற' உழு எருதுகளைக் கொண்டு உழுது, விளைவித்த செந்நெல்லை நெற்போர் முழுமையும் எடுத்துக் கொள்க எனச் சொல்லிக் கொடுத்தனர் என ஔவையார் எடுத்துரைக்கிறார்.

அகடுநனை வேங்கை வீகண் டன்ன

பகடுதரு செந்நெல் போரொடு நல்கி,

கொண்டி பெறுக! என்றோனே[184]

என்னும் வரிகள் இதனை புலப்படுத்துகின்றன.

வாட்டாற்று எழினியது நாட்டு இயல்பையும் அவன் தந்த வளத்தையும் குறித்துப் புலவர்கள் பாடியுள்ளனர். புலவர்கள் மன்னரது பரிசில் நல்கும் தன்மையைக் கண்டு வியப்புற்று மன்னனை வாழ்த்தினர். திறந்து பின் மூடுதற்கு மறந்தொழிந்த நெற் கூடுகளிலிருந்து முகந்து கொள்ளப்படும் உணவுப் பொருள்களைச் சொல்வேனோ என மாங்குடிகிழார் வியப்புறுகிறார்.

திறந்து மறந்து கூட்டுமுதல்

முகந்து கொள்ளும் உணவு என்கோ[185]

என்னும் வரிகளால் உய்த்துணர முடிகிறது.

இவ்வாறாகச் சங்க இலக்கியப் பாக்கள் பலவற்றில் நெல்லின் நிலையும், பரிசில் வழங்கப்பட்ட முறைமையும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

### 2.9.16. நிதி

மனிதனின் அத்தியாவசியத் தேவைக்கும், அடிப்படை நிலைக்கும் நிதி அவசியமானதாகும். பகைவர் நாட்டை அழித்து அங்கிருந்து பெறப்பட்ட பொருள் குவியலைப் பாணர் முதலிய பரிசிலரின் வறுமையை நீக்க வழங்கினர் என நத்தத்தனார் குறிப்பிடுவதை,

வயவர் தந்த வான்கோழ் நிதியமொடு[186]

என்னும் வரியால் நன்னது நாட்டில் நுகர்தற்கு மிகையாகப் பொருள் குவிந்து கிடந்தது எனப் பெருங்கௌசினார் கூறுவதை,

நிலந்தினக் கிடந்த நிதியமொடு அனைத்தும்[187]

என்னும் வரியால் தெளியமுடிகின்றது. இவ்வாறாக நிதி என்னும் பரிசில் சங்க இலக்கியத்தில் இடம் பெறுவதை அறியமுடிகின்றது.

### 2.9.17. நெற்போர் களம்

களம் என்பது ஏர்களம், போர்களம் என இருவகையாகப் பிரிப்பர் சங்க காலத்தினர். இதில் நெல்லைக் குவித்து வைக்கின்ற நெல்போர்க்களம். புலவர்கள் தம் பாடல்களில் சிறப்பாக எடுத்தாளப்பட்டுள்ளது. இத்தகைய நெல்லாகிய போர்க்களத்தைச் சங்க வேந்தர்கள் பரிசிலாக அளித்து மகிழ்ந்தனர்.

வேந்தர்களிடம் உணவுக்காக நெல்லைப் பரிசாக வேண்டினால் நெல் மட்டும் அளிக்காது மன்னனின் மனையின்தான் பணி புரியும் உழவர்களையும், நெற்போர்க்களத்தையும் அளிக்கின்ற கொடைத்தன்மை மிக்கவராய்த் திகழ்ந்தனர்.

பிட்டங்கொற்றனிடம் சென்று நெல்லினை வேண்டினால் களத்தில் குவிந்திருக்கும் நெற்போர்க் குவியலை அப்படியே அளிக்கவல்ல கொடையாளன் எனக் காரிகண்ணனார் விளக்கியுள்ளார்.

இன மலி கதச் சேக் களனொடு வேண்டினும்

களம் மல் நெல்லின் குப்பை வேண்டினும்[188]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் உணவுக்காக நெல்லினைப் பரிசிலாக வேண்டினால் அவன் மனைக்கண் பணிபுரியும் உழவர்களோடு, நெற்போர்க்களங்களும் விரைவாக நல்கினன் எனக் குறிப்பிடுவதை,

மனைக் களமரோடு களம் என்கோ?[189]

என்ற வரியால் தெளிய முடிகின்றது. இவ்வாறாகப் பரிசிலில் நெற்போர்க்களம் இடம்பெறுவதை அறிய முடிகின்றது.

### 2.9.18. நெல்லிக்கனி

சங்க இலக்கியத்தில் குறிப்படப்படும் பரிசில்கள் புலவர்களை மட்டும் வியப்பில் ஆழ்த்தவில்லை. இன்றுவரை அவ்விலக்கியங்களைப் படிப்போரையும் வியப்பில் ஆழ்த்துகின்றன. வியப்பளிக்கும் பரிசில் பொருளாக அமைவது நெல்லிக்கனியாகும். வள்ளல்களின் ஒருவனாக உயர்ந்து நிற்கும் வேந்தன் அதியமான். தொன்மையான பெரிய மலையின் பிளவிடத்தில் அரிதான உச்சியில் சிறிய இலையையுடைய நெல்லியின் இனிய கனியைக் கொண்டான். அக்கனியின் மகத்துவம் உண்பவருக்கு இறப்பு அகலும் என்பதே, அதனைப் பெறுவதற்கு அரியது என்று கருதாமல் அக்கனியின் அரும்பயனாக அமைந்த தன்மையை புலவர்க்குக் கூறாமல் மனத்து அடக்கினான்; அவ்வரிய கனியை இறப்பு அகலுமாறு அளித்தனன் என ஔவையார் எடுத்துரைப்பதை,

......................தொல் நிலைப்

பெருமலை விடகரத்து அரு மிசைக் கொண்ட

சிறியலை நெல்லித் தஞ்கனி குறியாது

ஆதல் நின் அகத்து அடக்கி

சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே![190]

என்னும் வரிகளால் அறியமுடிகின்றது.

## 2.10. பதிற்றுப்பத்துப் பதிகப் பரிசில்கள்

மூவேந்தருள், சேர வேந்தரின் பரிசில் நல்கும் பண்பு குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது. இவர் தம் பரிசில் திறத்தை அறிந்து கொள்வதற்குப் பதிற்றுப் பத்து நல்ல சான்றாகும். சேர வரலாற்றுப் பெட்டகமாகத் திகழும் பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பத்தினையும், ஒவ்வொரு புலவர் சேர மன்னனின் மீது பாடியபோது அவர்கள் அளித்த கொடை எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாகும்.

### 2.10.1. இரண்டாம் பத்துப் பரிசில்

> இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், புலவர் குமட்டூர் கண்ணனாருக்கு உம்பர் காட்டுப் பகுதியில் உள்ள ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகக் கொடுத்தான். அத்தோடு அமையாது முப்பத்தெட்டாண்டுகள் தென்னாட்டு வருவாயில் பாகமும் கொடுத்ததாக[191]

என்பது அறியமுடிகிறது.

### 2.10.2. மூன்றாம் பத்துப் பரிசில்

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், புலவர் பாலைக் கௌதமனாருக்கு அளித்த பரிசில் பெறுவதற்கரிய பரிசிலாகக் குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது.

> யானும் என் பார்ப்பினியும் சுவர்க்கம் புகல் வேண்டும் எனப் பாலைக் கௌதமனார் பரிசில் வேண்ட, அவர் விரும்பியபடியே சேரனும், பார்ப்பாரில் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பித்ததாகவும், பத்தாவது வேள்வியில் புலவரும் புலவரின் மனைவியும் காணாமல் ஆயினர்[192]

(சுவர்க்கம் சென்றுவிட்டனர்) புலவர்கள் சுவர்க்கம் செல்லவேண்டும் என்ற எண்ணத்தைக்கூட வேந்தர்கள் நிறைவேற்றி அமைத்துள்ளனர் என்பதை மூன்றாம் பத்தின் பதிகவுரை கூறுகின்றது.

### 2.10.3. நான்காம் பத்துப் பரிசில்

> களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்,
> புலவர் காப்பியாற்றுக் காப்பியனாருக்கு நாற்பது நூறாயிரம் பொன் கொடுத்து, தான் ஆளுவதில் பாகமும் கொடுத்தான்[193]

என்பதை அறியமுடிகிறது.

### 2.10.4. ஐந்தாம் பத்து பரிசில்

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்,

புலவர் பரணருக்கு தம் உம்பற்காட்டு வருவாயினையும், தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான்[194]

என்பதனைஅறியமுடிகிறது.

### 2.10.5. ஆறாம் பத்து பரிசில்

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்,

புலவர் காக்கைப் பாடினியார், நச்செள்ளையாருக்கு, கலன் அணிக என ஒன்பது துலாம் பொன்னும், நூறாயிரம் காணமும் கொடுத்துத்தன் பக்கத்துக் கொண்டான்[195]

எனப் பதிற்றுப்பத்தின் ஆறாம் பதிகம் குறிப்பிடுகிறது.

### 2.10.6. ஏழாம் பத்து பரிசில்

செல்வக் கடுங்கோ வாழியாதன்,

புலவர் கபிலருக்குச் சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து, நன்றாவென்னும் குன்றேறி நின்று தன் கண்ணில் கண்ட நாடெல்லாம் காட்டிப் பரிசிலாகக் கொடுத்தான்[196]

என்பதை உய்த்துணர முடிகின்றது.

### 2.10.7. எட்டாம் பத்து பரிசில்

தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை,

புலவர் அரிசில் கிழாருக்குத் தன் ஆட்சியையே கொடுக்க, புலவர் அதனை ஏற்காது. அமைச்சர் பதவியினை ஏற்றுக்கொண்டார்[197]

என அறியமுடிகிறது.

### 2.10.8. ஒன்பதாம் பத்து பரிசில்

குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை,

புலவர் பெருங்குன்றூர் கிழார் 'மருள் இல்லார்க்கு மருளக் கொடுக்க' என்னும் உவமையினை கேட்ட அளவிலே முப்பத்தீராயிரம் காணம் கொடுத்து, புலவர் அறியாமல் ஊரும் மனையும் வளம் மிகப் படைத்து எண்ணற்கு ஆகா அருங்கல வெறுக்கையோடு பண்ணூராயிரம் பாற்பட வகுத்துக் கொடுத்தான்[198]

என்பதையும் அறியமுடிகின்றது.

மேற்குறிப்பிட்ட சான்றுகளின்படி வேந்தரின் பரிசில்களைத் தொகுத்துரைக்கலாம்.

1. பதினாறாயிரம், முப்பதினாயிரம், நூறாயிரம், நாற்பது நூறாயிரம் என்ற எண் அளவில் பொன் கொடுத்தல்.
2. ஊர்களைப் பிரமதேயமாகக் கொடுத்தல்.
3. அரச வருவாயில் பங்களித்தல்.
4. ஆட்சி உரிமையில் பங்களித்தல்.
5. குன்றேறி நின்று, கண்ணிற் கண்ட நிலப்பரப்பெல்லாம் கொடுத்தல்.
6. தன் நாட்டு ஆட்சியையே கொடுத்தல்.
7. புலவரும் அவர் மனைவியும், மேலுலகம் புகவேண்டி வேள்வி செய்தல்.
8. தன் மகனையே புலவருக்குத் தொல் கடனாற்றப் பணித்தல்.

வேந்தர்களின் பரிசில் பண்பில் குறிப்பிடத்தக்கன. புலவருக்காக வேந்தன் வேள்வி செய்ததும், தன் மகனைத் தொல்கடனாகப் பணித்தலும் அரிய செய்திகள் காப்பிய இலக்கியங்களிலும் குறிப்பிடப்படுகின்றன.

நான்மறை யாளன் செய்யுள் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோன்[199]

என்னும் சிலப்பதிகார வரிகளில் இளங்கோவடிகள் கூறுவதன் மூலம் இதனை அறியமுடிகிறது. ஆனால் வேந்தன் இயற்றிய வேள்வியைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை. இவ்வாறாகப் பதிற்றுப்பத்துப் பதிகச் செய்யுளில் பரிசில் அளித்தமையைத் தெளியலாம். சங்க காலத்தில் வேந்தர்களும், புலவர்களும் ஒன்றாக இணைந்து தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பாடுபட்டனர் என்பதும்; அச்சமயத்தில் புலவருக்கு ஏற்பட்ட வறுமையைப் போக்கவே பரிசில்கள் நல்கப்பட்டது என்பதும்;

பரிசில்கள் அளிக்கப்பட்டதற்குப் புலமையும், மொழிப்பற்றுமே பெரிதும் காரணமாக அமைந்தது என்பதும் பெறலாகின்றன.

## 2.11. தொகுப்புரை

'பரிசிலர்களும் பரிசில்களும்' - என்னும் இவ்வியலில் ஆராய்ந்த செய்திகளிலிருந்து கீழ்க் குறிப்பிடப்பெறும் செய்திகள் பெறப்படுகின்றன.

பரிசிலர் என்ற சொல் புலவர்க்கும், கலைஞர்களுக்கும் பொதுவாக வழங்கப்பட்டது. இரவலர் என்னும் சொல்லும் புலவர், பாணர் முதலான பலர்க்கும் பொதுவாக அமைந்தது என்பது தெரிகின்றது.

புலவர்கள் மன்னர்களின் ஆற்றல்களைத் தம் அறிவுத் திறனால் பாடினர். இரவலர் அரசனுடைய அவைக் களத்தே செம்மாந்த தலையுடன் பலமுறை புகுதல் எளிதாக இருந்தது.

அறிவானும், ஒழுக்கத்தானும் நிறையுடையவர்கள் புலவர்கள்; நாட்டின் பண்பட்ட மரபுகளைக் கட்டிக்காக்கும் காவலராகவும், கரையமைத்து ஒழுங்குப்படுத்தும் பொறுப்பாளராகவும் விளங்கினார்கள்.

கற்றுத்தெளிந்த அறிஞர்களிடையே மலர வேண்டிய நட்பிற்குச் சாதியும், சமயமும் எக்காலத்தும் குறுக்கீடாக இருக்கமுடியாது என்பதைக் காட்டுவதாகச் சங்ககாலப் புலவர்களது வாழ்க்கை அமைந்திருந்தது.

ஒருவனைப் புகழ்ந்து பாடிய பல புலவர்களுக்குள் தகுதி, திறமை, புலமை அடிப்படையில் எவ்விதமான கருத்து வேறுபாடுகளும், மனத்தாங்கல்களும் உருவானதாக அறிய இயலவில்லை.

சங்க காலத் தமிழகத்தில் இசை, கூத்து, நாட்டியம், நாடகம் முதலிய கலைகளைப் போற்றி வளர்த்தவர்கள் பாணர், பொருநர், கூத்தர், விறலியர் முதலியோராவர் என்பதை அறியமுடிகிறது.

சங்க காலம் ஒரு பொற்காலம் என்றாலும் கலைஞர்கள் வறுமையில் வாடியுள்ளனர். அவர்கள் பேராசை கொண்டு திரியாமல் வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்துள்ளனர்.

பாணர்கள் இசைக் கலைஞர்கள் என்பதும், மிகவும் வறுமையான சூழலில் வாழ்ந்து வந்தவர்கள் என்பதும், இவர்களில் இசை, மண்டை, யாழ்பாணர்கள் என்று மூன்று பிரிவினர்கள் இருந்தனரென்பதும் தெரிய வருகின்றது.

பொருநர் என்பவர் போர்ப்பாடகர் என்பதும், இவர்களில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என்று மூவகைப் பிரிவினர் இருந்தனர் என்பதும் தெளிவாகிறது.

கூத்தர்கள் என்போர் ஆட்டத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள் என்பதும், இவர்கள் ஆடியவை இசை சார்ந்த நாடகங்கள் என்பதும் தெரியருகிறது.

விறலியர் - பொருநர், கூத்தர் வகுப்பினைச் சார்ந்த பெண்களே விறலியர் எனப்பட்டனர். இவர்கள் அழகான தோற்றப் பொலிவைக் கொண்டவர்கள். ஆடல் பாடல்களால் புரவலர்களை மகிழ்வித்துப் பரிசில் பெற்றவர்கள் என்பது தெரியவருகின்றது.

உணவு, உடை போன்ற அடிப்டைத் தேவைகளைப் பரிசிலாக அளித்து வறுமை அறியா வாழ்வைச் செம்மைப்படுத்தினர் வேந்தர்கள் என்பதை அறியமுடிகின்றது.

பொன், மணி, முத்து, அணிலகன், பொன் மாலை போன்ற அலங்கார ஆபரணங்களைப் பரிசிலாகப் பெற்று வாழ்ந்த நிலையும், யானை, தேர், குதிரை, ஆனிரை போன்ற பரிசில்களும், நாடும், ஊர், நெல், நிதி, களம் நெல்லிக்கனி போன்றவையும் பரிசிலாகப் பெற்றனர் என்பது தெரிய வருகின்றது.

பதிற்றப்பத்து பதிகம் கூறும் சில பரிசில்கள் வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. க.வெள்ளைவாரணன், சங்க காலத் தமிழ் மக்கள், ப.30.
2. புறம்., 343:5
3. நற்., 185:6.
4. குறுந்., 137:3.
5. பதிற்., 40:18.
6. புறம்., 3:24.
7. மேலது., 54:1-4.
8. மேலது., 75:4.
9. மேலது., 387:13.
10. நெடுநல்., 76.
11. ந.சி.கந்தையாபிள்ளை, செந்தமிழ் அகராதி, ப.275.
12. புறம்., 63:5.
13. மேலது., 312:4.
14. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.264.
15. புறம்., 12:1-2.
16. மேலது., 21:10-11.
17. மேலது., 27:7-8.
18. ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.30.
19. புறம்., 72:13-14.
20. மேலது., 202:7-8.
21. மேலது., 202:11-13.
22. மேலது., 126:10-11.
23. மேலது., 99:11-12.
24. பெரும்., 283:287.
25. புறம்., 136:6-11.
26. தொல்.பொருள்.இளம்பூரணர் உரை, நூ.98.

27. கு.இராசரத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள். ப.89.
28. பதிற்., ஆறாம் பத்து. பகதி.1-2.
29. பதிற்., 51:19-24.
30. மேலது., 56:1-3.
31. மேலது., 56:8.
32. மேலது., 52:8-11.,
33. மேலது., 57:4.
34. தொல்.பொருள்.நச்சினார்க்கினியர் உரை, நூ,36.
35. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.42.
36. சிறுபாண்., 35.
37. பெரும்., 462.
38. க.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப.98.
39. மேலது., பக்.308-309.
40. புற. வெண்பா மாலை., சூ.144.
41. மேலது.. சூ.16.
42. மேலது., சூ.137.
43. புறம்., 203:11.
44. நக்கீரன் (ப.ஆ.), பண்பாடடுக் கட்டுரைகள், ப.79.
45. சிறுபாண்., 130-139.
46. பெரும்., 20-23.
47. புறம்., 68:1-4.
48. மேலது., 138:1-5.
49. மேலது., 155:1-3.
50. மேலது., 380:3-5.
51. மேலது., 394:6-9.
52. மேலது., 397:7-10.
53. இரா.தண்டாயுதம், சங்க இலக்கியம் (பத்துப்பாட்டு), ப.56.
54. பொருநர்., 61-63.

55. மேலது., 68.

56. மேலது., 79-81.

57. கா.சுப்பிரமணியம், சங்க காலச் சமுதாயம், ப.99.

58. நா.பழனிவேலு, சங்கப் புறஇலக்கியங்களில் சமூகச் சித்திரிப்புகள், ப.92.

59. கா.சுப்பிரமணியன், சங்க கால சமுதாயம், ப.101.

60. மலைபடு., 347-348.

61. மேலது., 42-43.

62. மேலது., 49-50.

63. சிறுபாண்., 162.

64. பொருநர்., 109-110.

65. மலைபடு., 358-359.

66. மேலது., 534-536.

67. புறம்., 64:1-3.

68. மேலது., 105.

69. மேலது., 103:1-4.

70. சிறுபாண்., 13-31.

71. மலைபடு., 44-50.

72. மு.வரதராசன், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள், ப.5.

73. புறம். 14:11-15.

74. மேலது., 33:12-14.

75. மேலது., 103:8-11.

76. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடு, ப.125.

77. புறம்., 113:1-2.

78. மேலது., 125:1-6.

79. மேலது., 235:4-6.

80. மேலது., 390:17-18.

81. மேலது., 326:7-12.

82. மேலது., 372.

83. புறம்., 333:9-13.

84. மேலது., 384:15.

85. மேலது., 364:5-6.

86. மேலது., 366:18-19.

87. மேலது., 379:8-9.

88. மேலது., 381:1-4.

89. மேலது., 382:8-9.

90. மேலது., 386:3-6.

91. மேலது., 392:18-19.

92. மேலது., 393:10-14.

93. மேலது., 396:15-18.

94. மேலது., 397:12-13.

95. பதிற்., 12:16-17.

96. மேலது., 24:20-23.

97. மேலது., 21:20-23.

98. பொருநர்., 103-107.

99. பெரும்., 471-476.

100. புறம்., 383:9-11.

101. மேலது., 385:5-7.

102. மேலது.,390:13-15.

103. மேலது., 392:13-15.

104. மேலது., 393:14-18.

105. மேலது., 397:15-17.

106. மேலது., 398:18-20.

107. மேலது., 400-10-13.

108. பதிற்., 12:19-21.

109. புறம்., 114:3-5.

110. புறம்., 115:2-4.

111. மேலது., 170:12-13.

112. மேலது., 224:2-3.

113. மேலது., 235:1-3.

114. மேலது., 376:14.

115. மேலது., 392:16-17.

116. மேலது., 398:16-17.

117. மேலது., 400:14.

118. பதிற்., 12:18.

119. மேலது., 42:12-13.

120. பெருநர்., 156-158.

121. புறம்., 12:2.

122. மேலது., 129:5-9.

123. மேலது.,130:1-5.

124. மேலது., 140:5-8.

125. மேலது., 153:9.

126. மேலது., 161:16:17.

127. மேலது., 171:10.

128. மேலது., 368:1.

129. மேலது., 369:26-28.

130. பதிற்., 43:25.

131. மேலது., 43:27-28.

132. பெரும்., 491-492.

133. புறம்., 12:2.

134. மேலது., 114:6.

135. மேலது., 123:6.

136. பொருநர்., 163-165.

137. சிறுபாண்., 257-260.

138. புறம்., 171:8.
139. மேலது., 381:24.
140. மேலது., 391:3-5.
141. மேலது., 399:30-32.
142. மலபடு., 573.
143. புறம்., 6:14-16.
144. மேலது., 14:10-11.
145. மேலது., 361:4-5.
146. மேலது., 378:11-12.
147. பதிற்., 23:9.
148. மேலது., 54:7-8.
149. மேலது., 67:3-4.
150. மேலது., 87:1.
151. புறம்., 12:1.
152. மேலது., 29:1-4.
153. மேலது., 69:19-20.
154. மேலது., 141:1.
155. மேலது., 319:15.
156. மேலது., 364:2-3.
157. பதிற்., 40:24.
158. மேலது., 48:1.
159. பொருநர்., 159:160.
160. பெரும்., 481-482.
161. புறம்., 141-2.
162. மேலது., 150:18-21.
163. மேலது., 319:14.
164. மேலது., 367:1.
165. மேலது., 372:13.

166. புறம்., 398:27.

167. பதிற்., 48:2.

168. பொருநர்., 161-162.

169. புறம்., 126:1-2.

170. மேலது., 152:28.

171. மேலது., 367:4-5.

172. மேலது., 377:16.

173. மேலது., 152:29-30.

174. மேலது., 377:16.

175. மேலது., 179:11.

176. மேலது., 377:17.

177. மேலது., 162.

178. புறம்., 109:15-18.

179. மேலது., 110:4.

180. மேலது., 122:3.

181. மேலது., 362:13.

182. பதிற்., 85:11-13.

183. புறம்., 171:9.

184. மேலது., 390:21-23.

185. மேலது., 396:19-20.

186. சிறுபாண்., 249.

187. மலைபடு., 575.

188. புறம்., 171:8-9.

189. மேலது., 387:25.

190. மேலது., 90:7-12.

191. பதிற்., இரண்டாம் பத்து பதிகம்.

192. மேலது., மூன்றாம் பத்து பதிகம்.

193. மேலது., நான்காம் பத்து பதிகம்.

194. பதிற்., ஐந்தாம் பத்து பதிகம்.

195. மேலது., ஆறாம் பத்து பதிகம்.

196. மேலது., ஏழாம் பத்து பதிகம்.

197. மேலது., எட்டாம் பத்து பதிகம்.

198. மேலது., ஒன்பதாம் பத்து பதிகம்.

199. சிலம்பு., 28:137-138.

## இயல் 3

## வேந்தர் - புலவர் உறவுநிலை

### 3.0. முன்னுரை

*சங்கக் காலத் தமிழர் பண்பாட்டில் காணும் சிறப்புக் கூறுகளில் ஒன்று ஆட்சியாளர்க்கும், அறிவாளர்க்குமிடையே அமைந்திருந்த நெருக்கமான உறவாகும். இவ்வுறவின் பன்முகத் தன்மைகளைப் புறப்பாடல்கள் தெற்றென விளக்குகின்றன.*

*பழந்தமிழ் வேந்தர்களுடைய சிறப்புகளுள் ஒன்று, புலவர்களுடன் அவர்கள் கொண்டிருந்த நட்பாகும். வேந்தரைப் பாடிப் பரிசில் பெற வேண்டுவதே தொழிலாகக் கொள்ளாமல் அவர்கள் தவறு செய்தவிடத்து அஞ்சாது கண்டித்து அறநெறிப்படுத்தும் இயல்பினராகவும் புலவர் பெருமக்கள் திகழ்ந்தனர். பழந்தமிழ்ப் புலவர்கள் வேந்தர்பால் அன்பு கொள்ளலும், நட்புப்பூணலும், குறை கண்ட விடத்து அதனை மென்மையாகக் கடிதலும், நிறை கண்டவிடத்து மேம்படப் பாராட்டலும் என்ற நிலையில் உறவு கொண்டிருந்தனர். இது குறித்து இவ்வியல் ஆராய்கிறது.*

### 3.1. உறவு நிலை

*வேந்தர், புலவர் தொடர்பு உயிர் ஒத்த உறவாக அமைந்திருந்தது. தன்னை நாடி வந்த புலவருக்கு, வேந்தன் கைக்கொடுத்து பண்பாடுடையவனாக விளங்கினான்.*

*சேரமான் செல்வக் கடுங்கோள வாழியாதன் கபிலரின் கையைப் பற்றிய போது அவர் கை மிக மென்மையதாய் இருத்தலைக் கூறினான். அதற்கு மறுமொழி கூற வந்த கபிலர் தன் கையின் மென்மையுடன் அரசன் கையின் வன்மையும் பாடினான். இதனை,*

கடுங் கண்ண கொல் களிற்றால்
காப்பு உடைய எழு முருக்கி
பொன் இயல் புனை தோட்டியால்
முன்பு துரந்து, சமம் தாங்கவும்
பார் உடைத்த குண்டு அகழி

நீர் அழுவ நிவப்புக் குறித்து
நிமிர் பரிய மா தாங்கவும்
ஆவம் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன் ஞாண் வடுக் கொள வழங்கவும்
பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும்; குரிசில்
வலிய ஆகும் நின் தாள் தோய் தடக்கை[1]

*என்ற கபிலர் பாடல் வரிகளால் அறிய முடிகிறது.*

*இவ்வாறாக வேந்தர் புலவர்களை உறவினர்கள் போலவும், விருந்தினர்கள் போலவும் வரவேற்று மகிழ்ந்தனர். வேந்தர்கள் புலவர்களின் வருகையை எதிர்ப்பார்த்துக் காத்திருந்தனர். வேந்தர்-புலவர் உறவுநிலை இனிதாகவே அமைந்தது என்பதைச் சங்க இலக்கிய பாடல்களின் வாயிலாக அறிய முடிகின்றது.*

### 3.1.1. மார்போடு தழுவல்

*சங்க காலத்தில் அன்பு மிகுதியால் புலவரும் வேந்தரும் ஒருவரை ஒருவர் மார்போடு மார்பு பொருந்தத் தழுவிக் கொள்ளுதல் வழக்கமாக இருந்தது.*

இரும் புலி வேட்டுவன் பொறி அறிந்து மாட்டிய
பெருங்கல் அடாரும் போன்ம் என விரும்பி
முயங்கினேன் அல்லனோ[2]

*என்ற குடபுலவியனாரின் வரிகளால் புலப்படுத்தப்படுகிறது.*

*இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ என்னும் வேந்தர்கள் ஒன்றாக இருந்த இடத்திற்குப் பெருந்தலைச் சாத்தனார் சென்றார். புலவர் இளங்கண்டீரக் கோவை மட்டும் மார்போடு தழுவினான் இளவிச்சிக்கோவைத் தழுவவில்லை. அதற்கான காரணத்தைப் புவலர் கூறும்போது கண்டீரக்கோன் நாட்டில் பரிசிலர்கள் புரவலர்களை நாடிச் செல்லும்போது புரவலர்கள் தம் இல்லத்தில் இல்லாவிட்டாலும் அவரது மனைவி தகுதியறிந்து பரிசில் அளித்து மகிழ்வாள்.*

*இவ்வகையில் ஆடவர் இல்லத்தில் இல்லாவிட்டால் வரும் பரிசிலர்கள் ஏமாற்றம் அடையக்கூடாது என்ற நிலையில் தான் பெண்களும் பரிசில் நல்கினர்.*

பெருந்தலைச் சாத்தனார் இளவிச்சிக்கோவைத் தழுவாததற்கு இரு வகையான காரணங்களைக் கூறியுள்ளார்.

1. இளவிச்சிக்கோ நாட்டைப் பாடி வரும் புலவர்கள், அனைத்து வீட்டுக் கதவுகளும் அடைக்கப்பட்டு இழிவு செய்யப்பட்டனர். ஆதலால் மன்னனையும், நாட்டையும், நாட்டில் உள்ள மலைகளையும் எவரும் பாடுவதில்லை.
2. இளவிச்சிக்கோவின் முன்னோர் பெண் கொலைப் புரிந்ததால் புலவர் தழுவ மறுத்து விட்டார். இதனை,

> புன்தலை மடப்பிடி பரிசிலாகப்
> பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
> கண்டீரக்கோன் ஆகலின். நன்றும்
> முயங்கல் ஆன்றிசின், யானே; பொலந்தேர்
> நன்னன் மருகன் அன்றியும். நீயும் முயங்கற்கு
> ஒத்தனை மன்னே[3]

என்ற வன்பரணரின் பாடல் வரிகளால் அறியலாம்.

இதிலிருந்து பண்டைய காலத்தில் பெண்களும் பரிசளிக்கும் நிலை இருந்தது என்பதை அறிய முடிகிறது. மேலும் புலவர்கள் பரிசில் வாழ்க்கை மேற்கொண்ட போது தன்மானம் இழந்து தன் உரிமையை விட்டு வாழ்ந்ததாக எந்தக் குறிப்புகளும் காணப்படவில்லை என்பது புலனாகின்றது.

இவ்வாறாகப் பண்டைக் கால வேந்தரும் புலவரும் உறவாக இருந்த நிலையிலும் தம் உரிமையையும், தன்மானத்தையும் விட்டுக் கொடுக்காத இயல்பினராகப் புலவர்கள் திகழ்ந்தார்கள் என்பதைத் தெளிய முடிகிறது.

புலவர் பெருந்தலைச் சாத்தனாரின் செயலை நோக்கும் போது புலவர்கள் பரிசில் வாழ்க்கை மேற்கொண்ட போதும் பரிசிலுக்காக மட்டுமே வேந்தரோடு உறவுக் கொள்ளவில்லை என்பது தெளிவாகின்றது. மேலும் இளவிச்சிக்கோவை

புலவர் தழுவாததற்கு முன்னோர் செய்த பெண் கொலையே காரணமாக அமைந்தது. 'பாவம் செய்த கையினால் பொருள் பெறுவது இழிவு' எனக் கருதியப் பண்டைப் புலவர்களின் மனப்பான்மையை இதனால் உணர முடிகின்றன.

### 3.1.2. புலவர் வழியில் மன்னர்

அறிவுடையான் காட்டும் வழியில் செல்ல பண்டைய மன்னர்கள் தயங்கவில்லை. ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் மூத்தோனை வருக என்று அழையாது. அவருள் அறிவுடையோனை வருக என்று அழைத்து அவன் காட்டும் நெறிவழியே அரசனும் நடப்பான் என்பதை,

அறிவுடையோன் ஆறு அரசம் செல்லும்[4]

என்ற வரியால் பண்டைய வேந்தர்கள் அறிவு உடையோருக்கு மதிப்பளித்துப் போற்றிய தன்மையைக் காணமுடிகின்றது.

புலவர்கள் தங்களைப் புகழ்ந்து பாடுவதை வேந்தர்கள் பெரும் பேறாகக் கருதினர். புலவர்கள் வாழ்த்தைப் பெறுபவர் துறக்கம் எய்துவர் என்னும் நம்பிக்கை பண்டைக் காலத்தில் நிலவியது.

அகன்ற உலகில் பரந்த புகழுடையார்க்கு அல்லாது பிறர்க்கு உயர்நிலை உலகமாகிய சுவர்க்கம் தங்குதல் இயலாது என்பதை உணர்ந்த தன்மையனாக விளங்கியவர் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை. இதனை,

இவண் இசை உடையோர்க்கு அல்லது, அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை[5]

என்ற மோசிகீரனாரின் வரிகளால் காணமுடிகிறது.

மலையமான் திருமுடிக்காரி கபிலரால் பாராட்டப்பட்டவன். புலவர் எவரும் இனி பாடிப் பரிசில் பெற முடியாத அளவிற்குக் கபிலர் திருமுடிக்காரியைப் பாடியுள்ளார் என்பதனை,

இரந்து செல் மாக்கட்கு இனிஇடன் இன்றி
பரந்து இசை நிற்கப் பாடினன்[6]

என்ற மாறோக்கத்து நப்பசலையாரின் வரிகளால் காணமுடிகிறது.

புலவர்கள் தங்களை வாழ்த்த வேண்டும் என்ற வேந்தரின் விருப்பமும் இருவரின் உறவுமுறைக்குக் காரணமாக அமைந்திருந்ததை அறியலாம்.

### 3.2. தமிழுலகம் அளித்த பெருமை

புலவர்க்கும் அவர்தம் செய்யுள்களுக்கும் பண்டைத் தமிழுலகம் அளித்த பெருமையினைச் சங்கப் புலவர்கள் கொடுத்துள்ள அடைமொழிகளாலேயே ஒருவாறு அறிதல் கூடும்.

விரைவாகப் பலபொருள் அடக்கிப் பாடல் புனையும் செவ்விய நாவினையும், செறிந்த புலமைமையயும் பலரும் அறிய நின்று விளங்கிய புகழையும் உடையவன் கபிலன். இதனை,

செறுத்த செய்யுட் செய் செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்[7]

என்ற இளங்கீரனாரின் வரிகள் இவ்வாறு கபிலரைக் குறிப்பிடுகின்றன. மேலும் பொய்யாத நாவினை உடையவர் எனவும், கபிலர் பாராட்டப்பட்டவர். இதனை,

பொய்யா நாவின் கபிலன்[8]

என்ற மாறோக்கத்து நப்பசலையாரின் வரியால் தெளியலாம்.

திருந்திய சொல்லையுடையவராக மோசி என்னும் புலவன் இருந்ததனை,

. . . . . . . . . . . . . . . திருந்துமொழி
மோசி . . . . . . . . . . . . . . . . . . . . .[9]

என்ற பெருஞ்சித்திரனாரின் வரியால் அறிய முடிகின்றது.

இனிய சொற்களைத் தேர்ந்து பாடும் திறனும், ஆராயும் நுட்பமான ஆராய்ச்சியை உடைய அறிவுடையோராக புலவர்கள் இருந்தனர் என்பதனை,

அம்சொல் நுண் தேர்ச்சிப் புலவர்[10]

என்ற ஔவையாரின் வரியால் காண முடிகிறது.

புகழ்மிக்கச் செய்யுள்களைப் பாடுவதில் திறன் மிக்கவராகக் கழாத்தலையார் என்னும் புலவர் விளங்கினார் எனக் கபிலர் குறிப்பிடுகிறார்.

புகழ்ந்த செய்யுள் கழாஅத் தலை[11]

என்னும் பாடல் வரி இதனை உணர்த்துகிறது. இவ்வாறாக, பண்டைய தமிழுலகம் பன்மொழி புலமை மிக்க புலவர்களுக்கு அளித்த பெருமையினைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

### 3.2.1. புலமைப் பாராட்டு துணை

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு போரிட்டுத் தோற்றான். பெருநற்கிள்ளிக்குக் குறுநில மன்னன் திருமுடிக்காரி என்னும் தேர்வண் மலையன் துணை நின்றான்.

தேர்வண் மலையன் தனக்குத் துணை நின்றதாலேயே தான் வெற்றி பெற்றதாகப் பெருநற்கிள்ளியும், தேர்வண் மலையன் தனக்குத் துணை நல்காமையினாலேயே தான் தோல்வி உற்றதாக இரும்பொறையும் கூறிக்கொள்ளுகின்றனர். இருபெரு வேந்தர்களின் வெற்றியும் தோல்வியும் ஒரு குறுநில மன்னனிடம் அடங்கியிருந்தது.

தேர்வண் மலையனனால் போரில் வென்றோன் நன்றியறிவால் பாராட்டுகின்றான். தோன்றோன் பேராண்மையை வியந்து போற்றுகின்றான். நண்பரும், பகைவரும் ஒப்பப் பாராட்டும் சிறப்பு முருகனுக்கு உரியதாகும். அத்தகு பெருமை வாய்ந்த மலையன் சேஎய் மலையை இருப்பிடமாக உடையவன் என்பதனை,

வல் வேல் மலையன் அல்லன் ஆயின்
நல் அமர் கடத்தல் எளிது மன், நமக்கு எனத்
தோற்றோன் தானும் நிற் கூறும்மே
தொலைஇயோன் இவன் என
ஒரு நீ ஆயினை - பெரும! பெரு மழைக்கு
இருக்கை சான்ற உயர் மலைத்
திருத் தகு சேஎய்! நிற் பெற்றிசினோர்க்கே[12]

என்ற பெருஞ்சாத்தனாரின் வரிகள் உணர்த்துகின்றன. பழந்தமிழகத்தின் அரசியல் நிலையினை இஃது தெற்றென எடுத்துக்காட்டுகிறது.

தேர்வண் மனலயன் தனக்குத் துணை நல்காமை குறித்து வருந்திய இரும்பொறை கபிலர் இருந்திருப்பின் இவன் துணை தனக்குக் கிடைக்கும்படி செய்திருப்பார் எனக் குறிப்பிடுகின்றார். இதனை,

இலங்கு வளை மகளிர் தெற்றி ஆடும்
விளங்கு சீர் விளங்கில் விழுமம், கொன்ற
களம் கொள் யானை, கடு மான், பொறைய!
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
இன்று ஊன் ஆயின் நன்றுமன்[13]

என்ற பொருந்தில் இளங்கீரனாரின் வரிகளால் அறிய முடிகின்றன.

நாடாளும் வேந்தனுக்குத் தூது செல்லும் பணிகளையும் புலவர்கள் மேற்கொண்டனர். தன்னுடைய வீரம் உணர்ந்த நிலையில் தொண்மான் பால் இரங்கிய அதியமான் ஔவையைத் தூதாக விடுத்தனன். அவன் கருதியபடி தூது சென்று துணிவுடன் தம் கருத்துரைத்தார் ஔவையார்.

இவ்வாறாக வேந்தனுக்குப் போரில் படைத்துணைச் சேர்க்கும் பணியினையும், தூது செல்லும் பணியினையும் மேற்கொண்டதால் வேந்தனுக்குப் புலவர்களின் புலமை துணையாகவும் விளங்கியது என்பதை அறியலாம்.

### 3.2.2. புரவலர் அளித்த பெரும் மதிப்பு

வேந்தரொடு நிகராக அமர்ந்து வட்டாடி மகிழும் அளவிற்குப் புலவர்கள் உரிமை பெற்றிருந்தனர். சோழன் மாவளத்தானும், புலவர் தாமப்பல் கண்ணாரும் வட்டாடி மகிழந்திருந்தனர். சோழன் மாவளத்தான் நலங்கிள்ளியின் தம்பியாவான். அப்பொழுது வட்டுக்களில் ஒன்று, புலவரை அறியாமல் அவர்பால் மறைந்துவிட்டது. அதுகண்டு மாவளத்தான் புலவர் வட்டினை வேண்டுமென்றே ஒளித்தனர் எனத் தவறாக நினைத்து அவரை அவ்வட்டினால் எறிந்தான்.

தவறு செய்யாத தம்மேல் வட்டெறிந்த மாவளத்தானின் குடிப்பிறப்பில் ஐயங்கொள்வதாகச் சினத்தில் கூறிவிட்டார் புலவர். தன் குடிப்பிறப்பை ஐயங்கொண்டு சினந்து புலவர் கூறிய பொழுதிலும், சினங்கொள்ளாது அமைதியாகத் தன் செயலுக்கு நாணி நின்றான் மாவளத்தான். இந்நிலையினைக் கண்டார் புலவர். தான் சினத்தில் கூறிய சொல்லின் பொருளை நினைத்து வருந்தினார். தாம் கூறிய சொல்லின் கடுமையினையும், அதனைக் கேட்டு நாணி நிற்கும் மாவளத்தானின் பண்பையும் கண்டார். மாவளத்தானின் பொறுமையை எண்ணிப் போற்றினார். பெருகி வரும் காவிரி மணலினும் அவன் வாழ்நாள் பலவாகப் பெருகுக! என வாழ்த்தினார். இச்செய்தியை,

நிலமிசை வாழ்நர் அலமரல் தீர
தெறு கதிர்க் கனலி வெம்மை தாங்கி
கால் உணவு ஆக, சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும் மருள கொடுஞ்சிறைக்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
யானே பிழைத்தனென்; சிறக்க நின் ஆயுள்
மிக்க வரும் இன் நீர்க் காவிர்
எக்கர் இட்ட மணலினும் பலவே![14]

என்ற தாமப்பல் கண்ணனாரின் பாடலால் அறியமுடிகிறது.

வேந்தனின் குடிப்பிறப்பைத் தாம் ஐயுறுவதாக அவ்வேந்தனின் முன்பே கூறும் அளவிற்குப் புலவர் உரிமையும் நட்பும் பெற்றிருந்ததை இதனால் அறியலாம். அரசானகிய தம்மை நேருக்கு நேர் இழிவாக ஒரு புலவர் பழித்தபோதும் அதைக் கேட்டுச் சினம் கொள்ளாமல் அமைதியாய் இருந்த வேந்தனின் செயல், புலவர் பால் இருந்த பெரு மதிப்புக்கு நல்ல சான்றாக அமைகிறது.

### 3.3. புலவோரின் பொதுமைப் பண்பு

புலவர் பெருமக்கள் தலை மக்களின் பண்புச் சிறப்பு நோக்கினரே அன்றி அவர்தம் செல்வத்தையும், செல்வாக்கையும் நோக்கினார் அல்லர். உணர்ச்சி இல்லோர் உடைமையை நினையாமை என்பதை,

உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்[15]

என்ற மதுரைக் குமரனாரின் வரியால் இதனை அறியலாம்.

சங்கப் புலவர்கள் பெருமையில்லாத மன்னரைப் பாடுவதில்லை. மற்றவருக்குப் பொருளைக் கொடுத்து உதவும் குணம் இல்லாரிடத்து புலவர்கள் செல்வதில்லை.

நள்ளி என்ற வேந்தன் நாள்தோறும் தன்னை நாடி வரும் பரிசிலருக்குச் செல்வத்தை, அணிகலன்களை, களிற்றைக் கொடுத்து விடுவதால் அவரைப் பாராட்டிய என் நாவானது பெருமையற்ற அரசனைப் புகழ்ந்து கூறிப் பாராட்டுதற்கு அறியாதென புலவர் வன்பரணர் குறிப்பிட்டுள்ளார்.

பீடு இல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டி

செய்யா கூறிக் கிளத்தல்

எய்யாதாகின்று எம் சிறு செந் நாவே[16]

என்ற செய்யுள் வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றன.

### 3.3.1. குறுநில மன்னரைப் பாடுதல்

கபிலர், பரணர், ஔவையார் முதலான புலவர்கள் தம் காலத்தே வாழ்ந்த பேரரசர்களை மட்டுமல்லாது குறுநிலத் தலைவர்களையும் பாடினார்கள்.

கபிலர் தன் நண்பரான பாரியை மட்டும் பாடாது சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனை மட்டுல்லாது காரியையும் பாடியுள்ளார். வீரக்கழல் அணிந்த இலக்கணத்தால் பொருந்திய அடியையுடைய கார் என்ற வேந்தன் என்றும், அவனது நாடு கடல் நீராலும் கொள்ளப்படாது. பகைவர் போரிட்டும் கைக்கொள்ளப்படாது என்று வாழ்த்துகிறார். இதனை,

கடல் கொளப்படா அது, உடலுநர் ஊக்கார்

கழல் புனை திருந்து அடிக்காரி. நின்நாடே[17]

என்ற கபிலர் வரியால் காண முடிகிறது.

ஒளவையார் தம் நண்பரான அதியமானை மட்டுமின்றி நாஞ்சில் வள்ளுவனையும் பாடியுள்ளார். பலா மரங்கள் மிகுந்த நாஞ்சில் மலைக்கு வேந்தன் ஆகிய நாஞ்சில் வள்ளுவன் தெளியாது கொடுக்கும் கொடைத் தன்மையன் என்பதை,

தடவு நிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்

மடவன், மன்ற செந்நாப் புலவீர்!

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

தேற்றா ஈகையும் உளதுகொல்?

போற்றார் அம்ம. பெரியோர் தம் கடனே[18]

என்று குறிப்பிட்டுள்ளார்.

வானத்தின்கண் விளங்கித தோன்றும் விண் மீன்களிலும், இம்மென முழங்கிப் பெய்யும் பெரிய மழைத்துளிகளிலும், உயர்ந்து மிக்கு மேம்பட்டு, வேந்தனுடைய வாழ்நாட்கள் விளங்குவனவாக என ஒளவையார் புகழ்ந்துள்ளார். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும், சேரன் மாரி வெண்கோவும், பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும் ஒருங்கு இருந்தாரை,

. . . . . . . . . . . . . . . . . . வானத்து

வயங்கித் தோன்றும் மீனினும், இம்மெனப்

பரந்து இயங்கு மாமழை உறையினும்

உயர்ந்துமேந் தோன்றிப் பொலிக, நும் நாளே[19]

என ஒளவையார் வாழ்த்தினார்.

ஒளவையார் மூன்று வேந்தர்களை மட்டுமல்லாது மற்ற குறுநில மன்னர்களையும் பாடியுள்ளார்.

பரணர் கடல் பிறக்கோட்டிய செல்கெழுகுட்டுவனையும், நாற்பதின்மருக்கு மேற்பட்ட குறுநில மன்னரையும் பாடியுள்ளார்.[20]

இதனால் பேரரசர், சிற்றரசர் என்னும் வேறுபாடு காணாத புலவர் பண்பை வெற்றியும் தோல்வியும் வீரர்களுக்கு இயல்பானவையாம். இதனை, நன்குணர்ந்த பண்டைப் புலவோர், வென்றோரைப் பாடியவாறே வீரம் காட்டிப் பொருது தோற்றோரையும் பாராட்டியுள்ளார்.

வெண்ணிப் பறந்தலையில் கரிகாற் பெருவளத்தானொடு பொருது புறப்புண் நாணி வடக்கிருந்தான் பெருஞ்சேரலாதன். கரிகாலன் வெற்றியைப் புகழும் வெண்ணிக் குயத்தியார், தோற்ற சேரமானை வென்றவனினும் நல்லவன் எனப் பாராட்டியுள்ளமை புதுமையானதாகும்.

சென்று, அமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே
கலி கொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப் புகழ் உலகம் எய்தி
புறப் புண் நாணி, வடக்கிருந்தோனே[21]

இவ்வாறு புலவர்கள் இருவர் போரிடும்போது வெற்றிப் பெற்றவரை மட்டும் வாழ்த்தாது, தோற்றவரின் குணத்தினையும் பாடுவது புலவோரின் பொதுமைப் பண்பினை விளக்குவதாக கழாத்தலை என்ற ஊர்ப்பெயரையே தம் பெயராகக் கொண்ட கழாத்தலையார் என்னும் புலவர், வென்ற சோழனைக் கதிரவனாகவும், தோற்ற சேரமானைத் திங்களாகவும் கண்டு இருவரையும் போற்றுகின்றார்.

தன் போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப் புண் நாணி, மறத் தகை மன்னன்
வாள் வடக்கிருந்தனன்; ஈங்கு
நாள் போல் கழியல ஞாயிற்றுப் பகலே[22]

என்னும் செய்யுள் வரிகளால் இதனை உணர்த்துகின்றன. இவ்வாறாகப் பண்டைய புலவர்களிடத்தில் ஒரு திறம் பற்றாப் பொதுமைப் பண்பைக் காண முடிகின்றது.

### 3.3.2. கூற்றுவனை இகழ்தல்

சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையும், அதியமானும் போரிட்டனர். அதில் சேரமான் வெற்றி பெற்றான். அதியன் இறந்து விட்டான். இதை கண்ட அரிசில்கிழார் சேரமானின் தகடூர் வெற்றியைப் பாராட்டினார். அதே சமயம் அதியன் இறந்ததிற்காக கூற்றுவனையே இகழ்ந்து உரைக்கிறார்.

வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்கெழு குறும்பின் தகடூர் நூறி[23]

*இங்ஙனம் பாராட்டிப் பேசும் அரசில்கிழார் அதியமானின் இறப்பிற்காகவும் கசிந்து கண்ணீர் விடக்காணலாம்.*

கன்று அமர் ஆயம் கானத்து அல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டு புலத்து உறையவும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
ஈன்றோள் நீத்த குழவி போல,
தன் அமர் சுற்றம் தலைத்தலை இனைய
கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சமொடு
நோய் உழந்து வைகிய உலகினும், மிக நனி
நீஇழந்தனையே, அறன் இல் கூற்றம்[24]

*என்ற வரியால் இதனை அறிய முடிகிறது. இதில் அதியமானின் உயிரைக் குடித்தவன் சேரமானேயெனினும் அவனைப் பழியாது கூற்றுவனைப் பழிக்கின்றார் புலவர். வீரர் ஆயினும் போரில் உயிர்விடுவது இயற்கையெனக் கருதியமையால் வென்றவர்களைக் கொன்றவர்களாகக் கருதிப் பழிப்பதிலர் புலவர் என்பதை அக்கால வழக்காக மேலும் அறிய முடிகின்றது.*

### 3.4. வேந்தர்-புலவரிடையே மலர்ந்த நட்பு

*சங்க காலம் சங்கதமிழ் வளர்ச்சியால் சரித்திரம் படைத்த பொற்காலம். மன்னர் ஆட்சியிலும் மக்கள் நலனே மேலோங்கித் திகழ்ந்த பொன்னான காலம். அக்காலத்தில் சில மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் இடையே வியக்கத்தக்க அளவிற்கு ஆழமான நட்பு நிலவியுள்ளமையை அறியமுடிகின்றது.*

### 3.4.1. கோப்பெருஞ்சோழனும்-பிசிராந்தையாரும்

*சில மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் இடையே வியக்கத்தக்க அளவிற்கு ஆழமான நட்பு நிலவியுள்ளமையை அறிய முடிகின்றது. கோப்பெருஞ்சோழனுக்குப் பாண்டி நாட்டுப் பிசிராந்தையார்க்கும் இடையே தோன்றியிருந்த பெரு நட்பு சான்றோர் உலகையே வியப்பில் ஆழ்த்திற்று. இதனை,*

நினைக்கும் காலை மருட்கை உடைத்தே
எனைப் பெருஞ் சிறப்பினோடு ஈங்கு இது துணிதல்

அதனினும் மருட்கை உடைத்தே. பிறன் நாட்டுத்

தோற்றம் சான்ற சான்றோன் போற்றி

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

அன்னோனை இழந்த இவ் உலகம்

என் ஆவதுகொல்? அளியது தானே![25]

என்ற பொத்தியாரின் வரிகளில் காண முடிகிறது.

கோப்பெருஞ்சோழன் விரும்பத்தக்க நற்பண்புகள் நிரம்பப் பெற்றவனாகவும், குடிமக்களைப் புரப்பதிலும் ஆட்சியை நடத்துவதிலும் அறநெறிகளைக் காப்பதிலும் நீதி வழங்குவதிலும் நிகரற்றவனாகவும் திகழ்ந்தான். அவனிடம் சென்று பரிசில் பெற்றுத் திரும்பிய புலவர்களும், இரவலர்களும் வாயார, நெஞ்சார வாழ்த்தினார்கள். இதனால் புலவர் பிசிராந்தையாரின் உள்ளம் 'காந்தத்தை நாடிச் செல்லும் இரும்புத்துண்டு' போல சோழனை நாடிச் சென்றது. அவனைக் காண வேண்டும். கண்டு உரையாடி மகிழ வேண்டும் என நாளும் ஏங்கினார்.

> ஒவ்வொரு நாளும் அவரின் உள்ளம் மட்டும் உறையூருக்குச் சென்று உரையாடி விட்டுத் திரும்பியது. அந்த கற்பனை உரையாடலிலேயே தம்மை ஈடுபத்திக் கொண்டு பெருமகிழ்ச்சியில் மூழ்கிக் கிடந்தார்.[26]

இவ்வாறாகக் கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் கொண்டிருந்த நட்பினை இலக்கியச் சான்றுகள் பலவற்றால் அறிய முடிகின்றது.

வளமுடன் வளவன் வாழ்ந்த நாளில் அவனைக் காணாது. அவன் புகழை மட்டும் கேட்டு உணர்ச்சி நட்பு பூண்டிருந்த புலவர் பிசிராந்தையாரும் உயிர் துறந்தமை உலக வியப்புகளுள் ஒன்றாகவே காண முடிகின்றன. பழந்தமிழகத்தில் வேந்தருக்கும் புலவருக்கும் இருந்த உறவின் உயர்ந்த நிலையினைக் கோப்பெருஞ் சோழனின் வரலாறு உணர்த்துகிறது.

### 3.4.2. கபிலரும்-பாரியும்

இலக்கிய உலகில் புலவர் பெருமான் கபிலருக்குத் தனி இடம் உண்டு. ஒழுக்கமும், உயர் புலமையும் கொண்டவர். தம் வாழ்நாள் முழுவதும் துறவு நெறியை மேற்கொண்டு, பாரியின் கெழுதகைத் தோழராய் ஒழுகி, அவர் இறந்தபோது அந்தத்

*துயரத்தைத் தாங்காது தாமும் வடக்கிருந்து உயிர் துறக்க முனைந்த கபிலர் பெருமான். பாரியின் மகளிர்க்குத் தந்தை நிலையிலிருந்து கடனாற்ற விரும்பினார் என்பதை,*

நெடுமாப் பாரி மகளிர்; யானே

தந்தை தோழன்; இவன் என் மகளிர்[27]

*என்ற பாடல் வரியால் அறிய முடிகிறது.*

*புரவலர்-புலவர் இவரிடையே மலர்ந்த நட்பு வெறும் பரிசிலர் என்ற உறவு நிலை மட்டுமல்லாது, புரவலர் இறந்த போது புலவரே தந்தை நிலையிலிருந்து புரவலரின் மகள்களைக் காப்பாற்றி கடனாற்றும் நிலைக்கு உயர்ந்துள்ளது என்பது சங்கப் பாடல்கள் வழியாகப் பெறலாகின்றது.*

### 3.4.3. உயிர்விடத்துணியும் நட்பு

*தம் புலமையைப் பாராட்டிச் சேரன் கொடுத்த பெருஞ்செல்வத்தையும் எண்ணாமல் நண்பனில்லாத உலகின் வெறுமையை எண்ணி உயிர்விடத் துணிந்தார் புலவர் கபிலர்.*

நூறாயிரம் காணமும், நன்றா என்றும் குன்றின்மேல் நின்று, கண்ணிற் கண்ட

நாடும் கொடுத்தான் செல்வக் கடுங்கோ வாழியாதன்.[28]

*இதனை மறுத்து நண்பர் இல்லாத உலகில் உயிர் விட வேண்டும் என எண்ணினார்.*

*கபிலரும் பாரியும் கொண்ட நட்பு மறுமையிலும் காதலனை அடைய விரும்பும் காதலியின் அன்பைப்போல் இருந்தது. அதனாலேயே அவரது அன்பிற்கு ஏங்கி வடக்கிருந்தார். இதனை,*

இம்மைபோலக் காட்டி உம்மை

இடையில் காட்சி நின்னோடு

உடனுறை ஆக்குக உயர்ந்த பாலே[29]

*என்ற பாடல் வரிகளால் பொய்யா நாவிற் கபிலர் தம் நண்பன் பாரியின் மறைவிற்குப் பிறகு தாமே தந்தையாக இருந்து அவன் மகளிர்க்கு மணம் முடிக்கக் கடிது உழைத்தார் என்பதனைப் புறநானூற்றுப் பாடல் வரிகளால் காண முடிகின்றது.*

புலவர்க்கும் மன்னர்க்கும் இடையே நிலவிய உறவு வெறும் பண்டமாற்று நிலையன்று என்பதை இதனால் அறியமுடிகின்றது.

அரசுக்காகப் புலவர்கள் பிரச்சாரம் செய்வதும், அதற்கு ஈடாக பரிசு கொடுப்பதுமான உறவு நிலைமையை அதாவது பண்டமாற்றுப் பரிவர்த்தனையைக் குறிப்பதன்று.[30]

இவ்வாறாக எண்ணத்தாலும், குணத்தாலும் மட்டுமே வேந்தரும் புலவரும் நெருங்கிய உறவுக் கொண்டிருந்தனர் என்பது பெறமுடிகிறது.

### 3.4.4. கோப்பெருஞ்சோழனும் பொத்தியாரும்

பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் கொண்டிருந்த தொடர்பு புலவர், இரவலர் என்ற நிலையினைக் கடந்து உள்ளம் உணர்ந்த உயிர் நட்பாக விளங்கியது. வேந்தன் உயிர் துறக்கும் பொழுது தாமும் உடனிருந்து உயிர் துறக்கும் அளவிற்கு அவர்கள் அன்பு பூண்டொழுகினர்.

கோப்பெருங்சோழனுடன் உடனுறைந்து பழகிய புலவர் பொத்தியார், சோழனின் மறைவு குறித்துப் பெரிதும் வருந்தி உரைத்துக் கலங்கியுள்ளார். புலவர் பால் அன்புடையனும், சான்றாண்மை மிக்கவனுமாகிய கோப்பெருஞ் சோழனைக் கூற்றுவன் கொண்டு போயினான். வாய்மையுடைய புலவர்கள் எல்லோரும் வாருங்கள். அனைவரும் ஒருங்கே கூற்றுவனை இகழ்வோம் என அழைக்கிறார். இதனை,

நினையாக் கூற்றம் இன் உயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ, அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்[31]

எனப் புலவர் கலங்கி உரைப்பதைக் காண முடிகிறது.

வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனோடு பொத்தியாரும் உயிர் விட வேண்டும் என விரும்பினார். ஆனால் சோழன், பொத்தியாருக்கு மகவு பிறக்கப் போவது அறிந்து, பிறந்த பின் வா என்று கூறி அவ்விடத்திலிருந்து அனுப்பி விட்டான். இதனை,

அழல் அவிா வயங்கு இழைப் பொலிந்த மேனி.
நிழலினும் போகா, நின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்த பின் வா என
என் இவண் ஒழித்த அன்பிலாள![32]

என்ற பாடல் வரி உணர்த்துகிறது.

புதல்வன் பிறந்த பின் வா எனக் கூறித் தடுத்த சோழனின் அருளுள்ளத்தையும் புதல்வன் பிறந்த பின் சோழன் உயிர் நீத்த இடத்திலே தனக்கும் இடம் தேடிக் கொண்டு வடக்கிருந்து உயிர்விட்ட பொத்தியாரின் உயிர் நட்பும் வியப்பானதாகும்.

நிலை பெறு நடுகல் ஆகியக்கண்ணும்
இடம் கொடுத்து அளிப்ப, மன்ற-உடம்போடு
இன் உயிர் விரும்பும் கிழமைத்
தொல் நட்புடையார் தம்முழைச் செலினே[33]

என்று இந்நிகழ்வு குறிப்பிடப்படுகிறது.

பொன்னுக்காகவும், பொருளுக்காகவும் நட்பு பாராட்டாமல் உண்மையான அன்பின் அடிப்படையில் உள்ளம் உணர்ந்த நட்பினைப் புலவர்கள் வேந்தர்பால் வைத்திருந்தனர் என்பதைக் கோப்பெருஞ்சோழனின் வரலாறு உணர்த்துகிறது. சோழனுடன் பழகிய புலவர் அனைவரும் அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்த நிகழ்ச்சி உருக்கமானது.

### 3.4.5. உண்மை அன்பை உணர்ந்த நெஞ்சம்

அரசருக்கும் புலவருக்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு. தமிழ்நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று. அதனை வடநாட்டு அரசரிடம் காணுதல் அரிது[34]

எனக் கூறும் இக்கூற்று ஈண்டுக் கருதத்தகும்.

தம்மை புரந்தவரிடம் புலவர் கொண்டிருந்த உணர்வு ஒத்த நட்பினை மேற்காணும் கூற்று புலப்படுத்துகிறது. புலவர்கள் வாயால் வாழ்த்தப் பெறுதலைத்

தங்களின் பெரும்பேறாக ஆட்சிக்குரியவர்கள் கருதுவதையும், வேந்தர்களின் மறையோடும், தங்கள் வாழ்வு முடிந்து விட்டதாகப் புலவர்கள் இரங்குவதையும் நோக்கும்போது இவ்விருவரிடையே மலர்ந்த நட்பு வெறும் பொருள் அடிப்படையில் மட்டும் விளைந்தது என்று கூறுவதைவிட, உள்ளார்ந்து உணர்வொத்துத் தோன்றியது என மதிப்பிடலாம்.

பரிசிலர் என்ற நிலையிலிருந்து மாறி, அறம் உரைக்கும் அறிஞர் என்ற நிலைக்கு உயர்ந்து, பூமி கண்டவிடத்துக் கடிந்துரைக்கும் அளவிற்கு உரிமை பெற்று வேந்தன் வேறு, தான் வேறு என்ற வேறுபாட்டைக் கடந்து, ஒத்த உணர்வால் வேந்தனுடன் உயிர்துறக்கும் அளவிற்கு உள்ளம் ஒற்றுமையுணர்வைப் பழந்தமிழ்ப் புலவர்கள் பெற்றிருந்தனர். வேந்தருக்கும் புலவருக்கும் உள்ள உறவின் முறையான வளர்ச்சியினைப் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து நாம் தெளிவாக அறிய முடிகிறது.

### 3.5. ஒற்றுமை

மூவேந்தரும் ஒற்றுமையாக நாடாண்ட நாட்கள் குறைவு. பகைத்துப் போரிட்ட நிலையே பரக்கக் காணப்படுகிறது. ஒவ்வொரு வரும் பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணம் உடையோராக விளங்கினர். ஒரு நாட்டில் ஒரு வேந்தன் வலிமையுடையவனாக வளர்ந்து விட்டால் அந்நாட்டில் பிறகுடிகளில் தோன்றிய ஏனைய மன்னர்களை அடக்கித் தானே பெரு வேந்தனாகத் திகழ விரும்புகிறான். நாட்டின் பெருவேந்தனான பிறகு, ஏனைய நாடுகளைத் தன்கீழ்க் கொண்டுவர விரும்பிப் போர் மேற்சென்றான். இவை மட்டுமின்றி ஒரு வேந்தன் சிறக்க வாழ்ந்தால் ஏனைய வேந்தரும் குறுநில பிறந்தவர்களே தங்களுக்குள் பகைத்துப் போர் மேற்கொள்ளுதலும் உண்டு. அனைத்திற்கும் மேலாகத் தந்தையை எதிர்த்து மகனும், அண்ணனை எதிர்த்துத் தம்பியும் பகைத்துப் போர் நடத்துதலும் உண்டு. இவ்வாறு ஒற்றுமையற்ற தமிழ் வேந்தர்களிடம் ஒருமுறை ஒற்றுமை ஏற்பட்டது.

சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் நட்பு பாராட்டி ஒருங்கிருந்தனர். இவர்களிடம் நிலவும் இந்த ஒற்றுமை உணர்வு யாண்டும்

நிலவ வேண்டும் என்று விரும்பியது ஒரு பெண்பாற் புலவரின் தமிழ் உள்ளம். அவருடைய விருப்பம் வாழ்த்தோடு கூடிய அறிவுரையாகவே மலர்ந்தது.

வேந்தர் காக்கும் நாடு அனைத்தும் வளங்களை உடையதாக இருப்பினும் இவர் இறக்கும் பொழுது அந்நாடு உடன் செல்வதில்லை. அதுவரை அந்நாட்டுடன் தொடர்பு இல்லாவரிடம் நாட்டின் ஆட்சி உரிமை சென்றமைகிறது. எனவே இவ்வாட்சி உரிமை அழிவுடையது; நிலையற்றது என்பதை நினைவில் இருத்தல் வேண்டும். இறந்த பிறகும் இறுதிவரை வருவது நல்வினை ஒன்றே. எனவே நாடி வருவார்க்கு வளம் பலவும் வழங்கி நல்வினை உடையவர்களாக ஆகுங்கள். உங்களுக்குக் கூறத்தக்க உண்மைகளுள் இதுவே தலையாயது. இதனை உணர்ந்து நீங்கள் மூவரும் இனிது வாழ்க. நீங்கள் மூவரும் ஒன்று கூடி உலகை ஆட்சி செய்தால் உலகில் இன்பம் உண்டாகும். ஒருவர் பகைகொண்டு பிரியினும் உலக இன்பம் பாழுறும். எனவே இன்றே போல் ஒரு மனப்பட்டு உலகாளுதல் வேண்டும் என ஔவையார் அறிவுரை கூறினார்.

தமிழ் வேந்தர்கள் தங்களுக்குள் ஒன்றுபட்டுத் திகழ வேண்டும் என்னும் தாளா வேட்கையை ஔவையாரின் மேற்காணும் வாழ்த்தலால் அறிகிறோம். இவரது அரசியல் உணர்வு தமிழர்க்கு இன்றும் அரும்பயன் நல்கக் கூடியது.

### 3.5.1. புலவரின் மகிழ்ச்சி

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் நட்பு பூண்டு ஒருங்கிருந்தனர். இவ்விருவரின் ஒற்றுமையைக் கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் மகிழ்ந்து வாழ்த்துகிறார்.

புலவரின் வாழ்த்து அறம் சார்ந்த அறிவுடையராக அமைந்தது. `நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உறுதுணையாகி அன்பு கொண்டு இன்றுபோல் வாழ்க. உங்கள் ஒற்றுமை நிலைத்திருக்குமானால், இந்நில உலகமெல்லாம் உங்கள் காலடியின் கீழ் வருதல் உறுதி. நீங்கள் ஒற்றுமையோடு இருப்பின் அதுகண்டு

பொறாது உங்கள் ஒற்றுமைக்கு கேடு சூழ்வர் பகைவர், நல்லவர் போலவும், உங்களுக்கு நன்மையைத் தேர்ந்து உரைப்பவர் போலவும், முன்னோர் முறைகளைத் தேர்ந்து மொழிபவர் போலவும், எடுத்துக்கூறி உங்களுக்குள் பகை சேர்ப்பர். எனவே, இவற்றையெல்லாம் கேளாது இன்று போல் ஒற்றுடையுடன் வாழ்க. இவ்வொற்றுமையால் நீங்கள் பல நாடுகளை வென்று, அந்நாட்டுக் குன்றுகள் தோறும் உங்கள் கொடிகள் பறக்கும்படி செய்யுங்கள் என்று வாழ்தினார்.

........ நல்ல போலவு நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது
இன்றே போல்கநும் புணர்ச்சி[35]

என்ற காரிக்கண்ணாரின் பாடல் வரிகள் இவை.

பழந்தமிழ் வேந்தரிடைய ஒற்றுமையைக் காண்டல் அரிதாயிருக்கிறது. அவ்வாறு ஒற்றுமையுடனிருக்கும் சிலரையும் பகைகொள்ளுமாறு பிரித்து விடும் அரசியல் சூழ்ச்சி நடைபெற்றிருப்பதைக் காரிக்கண்ணானாரின் பாடல் அறிவுறுத்துகிறது. நல்லவர் போலவும், நன்மை செய்பவர் போலவும், தொல்லோர் சென்ற நெறியை உணர்த்துபவர் போலவும், காதல் நெஞ்சினர் போலவும் உடனிருந்து நடித்துப் பகை சூழ்வர் என்பதை எடுத்துரைக்கும் புலவரின் எண்ணம் உரைத்தக்கது.

### 3.5.2. பகைவரையும் பழித்துரையாப் பண்பு

முடியுடை மூவேந்தர் பாரியின் மீது அழுக்காறு கொண்டமையாலும், மகட்கொடை மறுத்தமையாலும், பறம்பு மலையை முற்றுகை இட்டனர். எனினும் தம் நண்பன் மீது படை எடுத்து வந்தார்கள் என்ற காரணம் பாராட்டி, அவர்கள் மீது பொறாமை கொள்ளவில்லை கபிலர். சான்றாண்மை நிறைந்த பொதுமை உள்ளம் இவருடையது. படை எடுத்து வந்த பகைவர் ஆயினும் அவர்களைப் பழித்துரைக்க இவரது செந்நா மறுத்தது. இதனை,

நளிகொள் முரசின் மூவிரும்[36]
கடந்தடுதானை மூவிரும்[37]

வலம்படுதானை வேந்தர்[38]

அண்ணல் யானை வேந்தர்[39]

என்ற கபிலரின் வரிகள் பகையுணர்ச்சி இல்லாமை உணரத்தக்கது. இவ்வாறு முடியுடை மூவேந்தரையும் அடைமொழிகள் தந்து சிறப்பித்துள்ளமையால் எந்நிலையிலும் பிறரைப் பழித்துக்கூறாத பண்புடைமை பெறப்படுகிறது.

### 3.5.3. மன்னர் பழி காத்தல்

வேந்தர்கள் தவறு செய்ய நேர்ந்தபொழுது, உரிய நேரத்தில் அவர்களது தவறினை உணர்த்தி, அதனால் அவர்களுக்கு ஏற்பட இருந்த பழியினின்று காத்துள்ளனர் புலவர் பெருமக்கள். சோழன் குளமுற்றத்துத் துஞ்சி கிள்ளிவளவன் திருக்கோவலூரைத் தலைநகராக் கொண்டு, மலைநாட்டை ஆட்சி புரிந்த மலைய மானுடன் பகைக்கொண்டு போருடற்றினான். வெற்றி பெற்ற வளவன் மலையமான் மக்கள் இருவரையும் கைப்பற்றிக் கொணர்ந்து யானைக்காலின் கீழிட்டுக் கொல்லத் துணிந்தான். இச்செயலால் கிள்ளி வளவனின் புகழ் குன்றும், வரலாற்றில் நிலைத்த பழி நேரும் என்பதை உணர்ந்த கோவூர்கிழார் உள்ளம் பதறினார். இக்கொடுமையைத் தடுத்து நிறுத்த விரைந்தார்.

வளவனின் முன்னோர் செயலை எடுத்துக்காட்டி கோவூர் கிழார் முறைப்படுத்தினார். `புறாவுக்காகத் தன் ஊனைக் கொடுத்துப் புரந்த முன்னோன் மரபில் வந்தவனே! நீ கொல்லத் துணிந்திருக்கும் மக்களோ சிறுவர்கள். தம்மை நாடி வந்தோருக்கு வாரி வாரி வழங்கிய வள்ளலின் மக்கள் எதிர்த்து நிற்கும் பருவமும் ஆற்றலும் அற்றோர். இவர்களைக் கொல்லுதல் நினக்கு அருளாகாது' என,

நீயே புறவின் அல்லல் அன்றியும், பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;
இவரே, புலன் உழுது உண்மார் புன்கண் அஞ்சி,
தமது பகுத்து உண்ணும் தன் நிழல் வாழ்நர்,
களிறு கண்டு அழூஉம் அழாஅல் மறந்த
புன் தலைச் சிறாஅர்; மன்று மருண்டு நோக்கி
விருந்தின் புன்கணோ உடையர்;
கேட்டனை ஆயின், நீ வேட்டது செய்ம்மே[40]

என்ற பாடலில் அறிவுறுத்தினார். இவ்வாறு கூறி வளவனின் கொலைச் செயலைத் தவிர்த்த புலவர் கோவூர்கிழாரின் அருள் உள்ளம் போற்றத் தக்கது. இக்கொலையைப் புலவர் தடுத்து நிறுத்தியதால், கிள்ளி வளவனின் வாழ்வில் மாசு படியவில்லை.

தன்னிடம் தோற்ற மன்னனின் குழந்தைகளைக் கொன்ற பழி வளவனுக்கு ஏற்பட்டிருக்கும், மலையமானின் மக்களைக் காப்பாற்றி, கிள்ளிக்கு ஏற்பட இருந்த பழியினின்றும் அவனைக் காப்பாற்றி, பிறல் நலம் கருதும் பெருந்தகைமையோடு தொண்டாற்றிய புலவரின் பணி நிலைத்த புகழுக்குரியது.

கோப்பெருஞ் சோழனுக்கு எதிராக அவன் பெற்ற மக்களே போருக்கு எழுந்த புன்மை நிலையினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

தமிழ்நாட்டு வேந்தர்களின் குடும்பங்களில் தலைகாட்டாத குறை எவ்வாறோ இச்சோழனின் குடும்பத்தில் புகுந்தது.[41]

பகை வேந்தர் இருவர் போரிட்டுக் கொள்வது மரபு. தந்தையை மகன் எதிர்ப்பது தமிழர் வரலாற்றில் புதுமை; பழிக்கு இடம் தருவது. இப்பழி நேரா வண்ணம் தடுத்து நிறுத்தக் கருதினார். புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ் சோழனுக்கு அறிவுரை நல்கினார்.

நின்னோடு போருக்கு வந்திருப்பவர் நின் பகைவராகிய சேரரோ, பாண்டியரோ அல்லர். உனக்குப் பின்னால் ஆட்சிப் பொறுப்பேற்க இருப்பவர் நின் மக்கள். நீ வெற்றி பெற்றால் உனக்குப் பிறகு ஆட்சியினை யாருக்கு வழங்குவாய். நீ தோற்றாலும் அது நின் புகழுக்கு மாசு உண்டாக்கும். எனவே, போரைத் தவிர்த்து அமைதியடைக என்றார். இதனை,

எண் இல்காட்சி இளையோர் தோற்பின்
நின் பெருஞ் செல்வம் யார்க்கு எஞ்கவையே?
அமர் வெஞ் செல்வ! நீ அவர்க்கு உலையின்
இகழுநர் உவப்ப, பழி எஞ்சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தை, நின் மறனே[42]

என்ற பாடல் வரிகளால் தெளிய முடிகிறது. இவ்வாறு கோப்பெருஞ்சோழனின் மறத்தைக் கெடுத்து, அறத்தில் நாட்டம் ஏற்படச் செய்த புலவரின் பணி குறிப்பிடத்தக்கது.

**3.5.1. பெரும்பழியைத் தவிர்த்தல்**

நலங்கிள்ளியிடமிருந்து பரிசில் பெற்று, நெடுங்கிள்ளியின்பால் பரிசு பெறும் பொருட்டு இளந்தத்தன் என்ற புலவர் உறையூர் சென்றார். நலங்கிள்ளியிடமிருந்து வந்தமையால் அவரை ஒற்றன் எனக் கருதிக் கொல்லத் துணிந்தான் நெடுங்கிள்ளி. புலவரைக் கொன்ற பெரும்பழி நெடுங்கிள்ளிக்கு வந்துவிடுமே எனக் கருதியே கோவூர்கிழார், நெடுங்கிள்ளிக்கு உண்மையை உணர்த்திப் புலவரைக் காப்பாற்றினார். இவ்வுண்மையை உணர்த்தும் போது புலவர்களின் இயல்பினைத் தெள்ளிதின் உணர்த்துகிறார் கோவூர்கிழார்.

பழுமரம் நாடிச்செல்வன பறவைகள். அவை போலத் தமக்குப் பரிசில் வழங்குவோரை நாடிச் செல்பவர் புலவர்கள். அங்கும் தம் வல்லமைக்கு ஏற்பப் பாடிப்பெறும் பரிசிலால் மகிழ்வர். தாம் மகிழ்வதோடன்றித், தாம் பெற்ற பொருள் கொண்டு தம் சுற்றத்தையும் மகிழ்விப்பர். தாம் பெறும் பொருள்களை மிகுத்துக் காக்கும் இயல்பு இல்லாதவர். தம்மைப் புரப்போரால் பெறும் சிறப்புக்காக இவ்வாறு வருந்தி நாளும் அலைவதே இப்பரிசில்களுடைய வாழ்க்கையின் தன்மையாகும்.

பிறருக்குக் கொடுமை செய்ய அறியாதவர், கல்வியால் நம்முடன் மலைத்தவரை அவர் நாண வென்று, செம்மாந்து நடந்து, அவ்விடத்தில் இனிதாக ஒழுகும் இயல்பினர். அவ்வாறு ஒழுகும் பொழுது, ஓங்கு புகழுடன் நிலம் ஆளும் வேந்தரைப் போன்ற சீரும் உடையோராய் விளங்குபவர் எனப் புலவரின் உயர்ந்த வாழ்க்கையினை எடுத்துரைக்கிறார். கோவூர்கிழார்,

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி
நெடிய என்னாது சுரம் பல கடந்து
வடியா நாவின வல்லாங்குப் பாடி
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு. கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீது அறிந்தன்றோ? இன்றே திறப்பட

அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்றாது. காவல்
குழவி கொள்பவரின், ஓம்புமதி!
அளிதோ தானே; அதுபெறல் அருங்குரைத்தே[46]

குழவி கொள்வாரின் குடிபுறம் தந்து[47]

*என்னும் பாடலடிகளால் இதனைக் காண முடிகிறது.*

*சோழன் நலங்கிள்ளியிடம் நாடி வரும் இரவலர்க்கு உதவி புரியும் நட்பினையுடைய பண்பு பெற வேண்டும் என்றும், இவ்வுலகில் நின் சுற்றம் மகிழ்ச்சியை அடையட்டும், நின் பாதுகாத்து வைத்த பொருட்செல்வம் புகழை அடையட்டும் என வாழ்த்துவது போல் அறிவுறுத்தினார் புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கூறியுள்ளார்.*

நகைப்புறன் ஆக நின் சுற்றம்!
இசைப்புறன் ஆக நீ ஓம்பிய பொருளே[48]

*என்னும் பாடல் வரியின் மூலம் இதனை அறியலாம்.*

*ஆலத்தூர் கிழார் நிலம் கீழ் மேலாகப் பெயர்ந்தாலும் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தவர்க்குத் தீவினையிலிருந்து உய்வது என்றில்லை எனச் செய்ந்நன்றியின் சிறப்பை அழகுற எடுத்துக் கூறியுள்ளார். இதனை,*

நிலம் புடை பெயர்வது ஆயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என
அறம் பாடின்றே - ஆயிழை கணவ[49]

*என்ற பாடல் வரிகளால் இதனை அறிய முடிகிறது.*

*மூவேந்தரும் ஒருங்கிருக்கக் கண்ட ஔவையார் அவர்கட்கு அரசத்திருவும் ஒருநாள் அழியும் தன்மையதே என்பதைக் கூறி வரையறுக்கப்பட்ட வாணாளைத் தாம் இன்பமுடன் கழித்தலோடு நல்வினைகளையும் ஆற்றவேண்டுமென வற்புறுத்துகின்றார்.*

வாழச் செய்த நல்வினை அல்லது

ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை[50]

என்ற பாடல் வரியினால் இதனைக் காண முடிகிறது.

மன்னர் எவரையும் முன்னிலைப்படுத்தாது பொதுவான அறநெறிகளை எடுத்து மொழியும் பாடல்கள் பல புறநானூற்றில் உள. அவை யாவையும் மன்னர்களை நோக்கிக் கூறியனவே எனக் கொள்வதில் தவறில்லை. ஈதலே செல்வத்தின் பயன் என நக்கீரரும், ஊழின் பெருவலியைக் கணியன் பூங்குன்றனாரும் வற்புறுத்தியுள்ளனர். மேலும் இதனை,

நல்லது செய்த லாற்றீ ராயினும்

அல்லது செய்த லோம்பு மின்[51]

என நரிவெரூ உத்தலையா,

இன்னா தம்ம இவ்வுலகம்

இனிய காண்கிதன் இயல்புணர் தோரே[52]

என்ற பக்குடுக்கை நன்கணியாரின் வரிகள் தெளிவுப்படுத்துகின்றன.

நல்வினையால் வரும் நன்மையும், தீவினையால் வரும் தீமையும் இல்லை என்பார்க்கு உறவுடையன ஆகாமல் தவிர்க்குமாறு முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளிக்கு அறிவுறுத்தியுள்ளார். இதனை,

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்

இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்[53]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 3.6.2. புலவர் விரும்பும் பரிசில்

மன்னர்களின் பொது வாழ்வினும், ஆன்மீக வாழ்விலும் பங்கேற்று நின்றவாறே. அவர்தம் தனிவாழ்வாம் குடும்ப வாழ்விலும் பங்கேற்று உரிய பணிகளையாற்றினார் புலவர்.

மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்க வேண்டிய மன்னர்களின் இல்லறத்தில் மாசேற்பட்ட போது அதனைப் போக்க விரும்பினர். சான்றோர் பெரும்பெயர்ப்

பேகன் தன் மனையாளைத் துறந்து பரத்தையொருத்தியொடு வாழ்ந்த போது கபிலர், அரிசில்கிழார், பரணர், பெருங்குன்றூர்கிழார் ஆகிய சான்றோர்கள் அவனை நெருங்கி அறிவுரைக் கூறித் தெருட்டினர்.

சங்க கால மன்னர்களும், புலவர்களும் நட்புச் சிறப்பினராக விளங்கினர். அரசர்களின் இன்பத்தில் பங்கு பெறுதலும், புகழ்பாடி இன்புறுதலும், பரிசில் பெறுதலும் தங்கள் வாழ்க்கை என்று நினைக்கவில்லை. மன்னர்களின் துன்பத்தில் பங்கு பெறுதலைக் கடமையாகக் கொண்டவர் மன்னவன் அக வாழ்வில் தவறு செய்த போதும் இடித்துரைக்கத் தவறவில்லை.

வையாவிக்கோப் பெரும்பேகன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். மயிலின் துன்பத்தைப் போக்கத் தன் போர்வையைத் தந்தவன். மயிலனைய தன் மனைவி கண்ணகியின் துன்பத்திற்குக் காரணமானான். அவளை விடுத்து நல்லூர்ப்பரத்தையை நாடினான். இதையறிந்த புலவர்கள் நயமாகக் கூறி அவனைத் திருத்த முயன்றனர் என்பதை,

இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையகம நனைப்ப விம்மி
குழல் இனைவதுபோல் அழுதனள் பெரிதே[54]

என்ற கபிலரின் வரியால் அறிய முடிகிறது. இதில் பேகனுக்குக் கண்ணகி நிலையை நெஞ்சம் உருகக் கூறித் திருத்தம் விரும்பினார். காந்தள் விரலால் கண்ணீர் துடைத்துக் கண்ணகி கூறிய கூற்றையும் கூறி அருள் செய்யாதிருத்தல் கொடியது என உனரக்கின்றார். இதனை,

அருளாய் ஆகலோ கொடிதே[55]

என்ற பரணரின் வரியால் இடித்துரைப்பதைக் காண முடிகிறது.

மயிலின் நடுக்கத்தைக் களையப் போர்வை ஈந்த அருள் வள்ளல் தன் மனைவியின் நடுக்கத்தைத் தீர்க்க வேண்டாமா? எனக் குறிப்பாக வினவினார் பவணர்.

அறஞ்செய்தீமோ அருள்வெய் யோயென
இ∴து யாம் இரந்த பரிசில்: அ∴து இருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே[56]

என்ற வரிகள் உணர்த்துகின்றன. இதில் பேகன் தன் மனைவி கண்ணகியுடன் சேர்வதையே தம் பரிசிலாகக் கேட்டார்.

அரிசில்கிழார் பேகன் கொடுத்த பெரும் பொருளையும் மறுத்து, 'அன்னவாகநின் னருங்கல வெறுக்கை அவைபெறல் வேண்டேம் அடுபோர்ப் பேக' என மறுத்து விட்டார். நீ அருளாமையால் கண்டார் இரங்க மெலிந்து அருந்துயரத்தால் வருந்துகின்ற நின் அரிவையைக் காணச் செல்வாயாக; மயிலின் பீலியை ஒருங்கே குவித்தாற் போன்ற தழைத்த மெல்லிய கூந்தலில் மணங்கமழும் அகிற்புகையைக் காட்டி, மாலையைச்சூடி, விரைந்த வேகம் கொண்ட உயர்ந்த தேரை நின் குதிரைகள் பூண்பனவாக இதுவே யாம் வேண்டும் பரிசில் என்றார். இதனை,

அருந்துயர் உழக்கும் நின் திருந்து இழை அரிவை
கவி மயில் கலாவம் கால் குவித்தன்ன
ஒலிமென் கூந்தல் கமது புகை கொளீஇ
தண் கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்க[57]

என்ற வரிகளால் தெளிய முடிகிறது.

அரிசில் கிழார் பேகனிடம் மென்மையான சொல்லையும், அழகிய முத்தையும் உடைய மாட்சியமைப்பட்ட அணிகலன்களையுடைய நின் தேவி நின்னைக் காணும்படி ஒரு நாளில் நின்னுடைய நீண்ட தேர் பூண்பதாகுக என அறிவுறுத்துகிறார். இதனை,

மாண் இழை அரிவை காணிய, ஒரு நாள்
பூண்க மாஎ நின் புரவி நெடுந்தேர்![58]

என்பது புலவரின் அறிவுரையாகும்.

காதலன்புடைய மனைவியும் கணவனும் பிரிந்திருப்பின், இருவரையும் ஒன்றுபடுத்தி வாழ்வு இனிது நட க்குமாறுச் செய்தல் பண்டைத் தமிழ்ச் சான்றோராகிய புலவர்களின் இயல்பு. அச்செயலையே பேகன் கண்ணகியுடன் இணைவதைப் பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருகுன்றுார் கிழார் போன்ற புலவர்கள் நயம்பட எடுத்துக் கூறி அரசனை நல்வழிப்படுத்தினர்.

அகவாழ்வாயினும், புறவாழ்வாயினும் அரசன் நெறி தவறுகின்ற போது அவனை இடித்துரைத்து அறிவுரை கூறுவதில் புலவர்கள் வல்லர்களாக விளங்கினர். அரசனும் புலவர்களின் அறிவுரை ஏற்ற அதன்படி ஒழுகினர். புலவர்கள் தம் சொந்த நலனை மட்டும் பார்க்காமல், நாட்டு நலனினும் அக்கறை உடையவர்களாகத் திகழ்ந்தனர்.

பேகனே! கார்கால மழையின் துளி வீழ்கின்ற ஓசையைத் தமியளாகக் கேட்டு; ஒரு பக்கத்துத் தனிமை கொண்டு வருந்தினன் ஒருத்தி; செவ்வரி பரந்த, மதர்த்த குளிர்ச்சி பொருந்திய கண்ணினையும்; மாமை நிறத்தினையும் உடையவள்; அவ்வரிவையது நெய்யால் துறக்கப்பட்ட மை போன்ற கரிய மலரை, நீலமணியினும் அழுக்குப் போகக் கழுவிப் புதுமலர் சூட்டும்படி எம்மொடும் வருவையானின் அதுவே எம் பரிசிலாகும் எனப் பெருங்குன்றூர், கிழார் கண்ணகியைக்காண அழைகிறார்.

கார் வான் இன் உறை தமியள் கேளா
நெருநல் ஒரு சிறைப் புலம்புகொண்டு உறையும்
அரி மதர் மழைக் கண், அம்மா அரிவை
நெய்யோடு துறந்த மை இருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசு அற மண்ணி
புது மலர் கஞல இன்று பெயரின்
அதுமன் எம் பரிசில் - ஆவியர் கோவே[59]

என்ற பாடல் வரியின் மூலம் அறியலாம்.

புலவர்கள் மன்னனின் பொருளை விரும்பியிருந்தால் அவன் பொருள் கொடுத்தவுடன் வாழ்த்திச் சென்றிருப்பர். புலவர்கள் ஒரு பெண் அழுவதை

*விரும்பாத: பொறுக்காத மனித நேயம் மிக்கவர்கள். இதனால் தான் பேகன் கொடுத்த பரிசிலையும் மறுத்துவிட்டு அவன் கண்ணகியுடன் சேர்வதையே பரிசிலாக வேண்டினர் என! பெருங்குன்றூர் கிழ ார் கூறுவதன் மூலம் வேந்தர்கள் மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமென எண்ணினர் என்பதும் பெறலாகிறது.*

*வேந்தரின் வீரத்தையும் அவர்தம் போர் வெற்றியையும் சிறக்கப் பாடிய* பழந்தமிழ்ப் புலவர்கள் போரைத் தடுத்தும் அமைதி ஏற்படுத்தியுள்ளனர். போரின் கொடுமையையும் *அறத்தின் அடிப்படையில்* விளங்கும் *மறப்பண்பையும்* விளக்கியுள்ளனர்.

*சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். சேரமான்* இமயவரம்பன் *நெடுஞ்சேரலாதனுடன் பகைக்கொண்டு, சேரனின் கருவூர்க் கோட்டையை முற்றுகையிட்டனர். சோழனை* எதிர்க்கும் அளவிற்குத் தன்னிடம் படைவலிமை இல்லையென்பதை அறிந்த சேரன், கோட்டைக்குள்ளேயே அடங்கியிருந்தான்.

*சோழர் படைக் கருவூர்க் கோட்டையைச் கற்றியுள்ள காவற்காட்டை அழித்து* ஒழித்தது. *தன் காவல் மரம் வெட்டப்படும்* ஓசைகேட்டும் வெளிவராது கோட்டைக்குள்ளேயே *அடைந்திருந்தான் சேரன். போர்* நடைபெறாது *காலம் நீட்டித்தலால்* இரு பெரும் *படைகளும் மக்களும்* துன்புறுவதைக் கண்டார் *புலவர் ஆலத்தூர் கிழார்.*

*கிள்ளிவளவனிடம்* சென்று *வேந்தரின் மறப் பண்பைக்* களத்திப் போரைத் *தவிர்க்க விழைந்தார் புலவர். நின்படை* கோட்டையில் பலகால் முற்றுகையிட்டிருந்தும், அவன் காவல் மரங்களை வெட்டி வீழ்த்திய ஓசை கேட்டும் வெளிவராது இருக்கும் சேரன் *வீரனல்லன். வீரர் தம்மை நிகர்த்த வீரரோடே போரிடுவர்.* பெரு *வீரனாள் நீ வீரனல்லாத சேரனுடன் போரிடுவது* பெருமை தருவதன்று என்ற கூறிப் போரினைத் தடுக்க முயன்றதை,

கடி மரம் தடியும் ஓசை தன் ஊர்
நெடு மதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு ஈங்கு நின்

சிலைத் தார் முரசம் கறங்க

மலைந்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே[60]

என்று ஆலத்தூர் கிழாரின் வரிகளால் இதனை அறியலாம். இவ்வாறாகச் சோழனுக்கு வீரத்தின் தன்மையை உணர்த்திப் போரைத் தடுத்து நிறுத்தக் கருதிய புலவரின் பணி குறிப்பிடத்தக்கது.

### 3.7. வேந்தர் புலவர்களைப் போற்றிய முறை

வேந்தர், புலவர்பால் கொண்டிருந்த மதிப்பு குறிப்பிடத்தக்கதாக இருந்தது. புலவர்களைப் பெரும் புலமையாளராகவும், சான்றோராகவும் கருதிப் போற்றினார். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உரைத்த வஞ்சினம், பழந்தமிழ்ப் புலவர் பெருமக்களின் சிறப்பான வாழ்வை உணர்த்துகிறது.

சிறந்த தலைமையும், மேம்பட்ட புலமையும் உடைய மாங்குடி மருதன் முதல்வனாக; உலகத்தில் வாழும் நிலையுடையோர் பலராலும்; பாராட்டப்பட்ட சிறப்பினையுடைய புலவர் பலரும் என் நில எல்லையைப் பாடாது நீங்குக என்னால் காக்கப்படும் கற்றத்தார் துன்பமடைந்து இரந்து கேட்கும்போது அவர்க்குத்தர இயலாது வருந்தும் வறுமைநிலையை நான் அடைவேனாக! எனக் குறிப்பிடும் செழியனின் கூற்று கருத்ததக்கது.

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி எனப் புலவரின் புலமைத் திறத்தைக் குறிப்பிட்டு, அப்புலவரால் தன் நாடும் தானும் பாராட்டுப் பெறுவதை உயர்வாக மதித்து வேந்தனின் தமிழ் நெஞ்சம். பழந்தமிழகத்தில் புலவர்கள் பெற்றிருந்த செல்வாக்கையும், வேந்தர் அவர்களைப் போற்றிய திறத்தைப் புறப்பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் பெற்றிருந்த செல்வாக்கு புகழத்தக்கது. தம்மை நாடி வந்த புலவர் பெருமக்களை அன்புடன் வரவேற்று வேண்டியன நல்கிப் போற்றினர் வேந்தர். தம்மை விட்டுப் பிரியும்போது ஏழடி புலவரின் பின்சென்ற வழியனுப்பும் பண்பாட்டையும் பெற்றிருந்தனர். இதனை,

காலின் ஏழடிப் பின்சென்ற கோலின்[61]

என்ற முடத்தாமக் கண்ணியாரின் வரியால் தெரிய முடிகிறது.

வேந்தர்களைப் புலவர்கள் விரும்பிய நேரத்தில் காணவும்; கண்டு பேசவும் உரிமை பெற்றிருந்தனர். புலவர்களின் வரவைத் தடுக்காதவையாக வேந்தரின் வாயில்கள் விளங்கின.

உடையோர் போல இடையின்று குறுகி
செம்மல் நாள் அவை அண்ணாந்து புகுதல்
என் அன வாழ்க்கை இரவலர்க்கு எளிது[62]

என்னும் பாடலடிகள் இதனைக் காணலாம்.

புலவர்களுக்க அடைக்காத பெரும் வாயில்களாக, வேந்தரின் அரண்மனை வாயில்கள் திகழ்ந்தன. நாடாளும் வேந்தர்க்கு இணையாக மொழியை ஆளும் புலவர்கள் உரிமையும் செல்வாக்கும் பெற்று விளங்கியதை அறிய முடிகிறது. புலவரின் அரண்மனை நுழைவிற்கு, வேந்தனின் நுழைவை ஒப்புமைப்படுத்திக் கூறியிருப்பது கருதத்தக்கது. இதனால் புலவர் பெருமக்களுக்கு இருந்த மதிப்பும் செல்வாக்கும் புலனாகின்றன.

கன்றைப் பார்த்து இரங்கும் பகவைப்போல, புலவர்களின் வறுமை நிலைமைக் கண்டு வேந்தன் இரங்கினான். வேந்தன் கண்களில் புலவர்களின் துன்பங்களைப் போக்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. இதனை,

தொழுதுமுன் நிற்குவி ராயின் பழுதின்று
ஈற்றா விருப்பின் போற்றுபு நோக்கிதும்[63]

என்ற முடத்தாமக் கண்ணியாரின் வரிகள் உணர்த்துகின்றன. தக்கது.

வேந்தன், இரவலர்கள் வேர்வையினால் நனைத்த, ஈரும்; பேனும் உலவும் கந்தல் ஆடையை உடுத்திருந்தனன். அதனைக் களைந்து, அருமையான ஆடையை உடுக்க நல்கினான். அழகுடைய அரிவையர் புதுத்தேறலை மழையென வார்க்கும்படி செய்தான். தம் புலவர்கள் பசித்துன்பம் போகுமாறு தேறலை மாந்தி, அதனால் தம்

மனத்துன்பமும் நீங்கப் பெற்று வேந்தன் கோயிலிலேயே புலவர் துயின்றனர். துயில் நீங்கிய பின்னர் புலவர்கள் தாம் அளவிற்கு மிகுதியாகத் தேறலைப் பருகிவிட்டதை நினைத்து வியப்புற்றனர் என முடத்தாமக் கண்ணியார் கூறியுள்ளார்.

ஈரும் பேனும் இருந்துஇறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதா அர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
மாலை அன்னதோர் புன்மையும்[64]

இவ்வாறாக வறுமையில் வாடி நலிவுற்று வருவோரைப் புரக்கும் வேந்தனின் அருளுடைமையைச் சிறப்பாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

புலவர் வறியவர் என்னும் நிலையில் இருந்து ஏற்றம் பெற்றுச் சிறப்புற்றிருப்பதும், வேந்தன் தான் நாடாள்பவன் என்னும் நிலையினைக் கருதாது. வருவிருந்து பார்த்திருக்கும் நல்லறத்தானாக விளங்குவதும் குறிக்கத்தக்கன. இவ்வாறு புலவர்கள் வேந்தர்களிடம் சிறப்பு பெற்றிருந்தனர்.

தம்மைப் புரந்த மன்னன் போரில் உயிர் துறந்தபோது, அத்துன்பம் பொறாது புலவர் கலங்கிக் கூறியிருப்பது சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது. மன்னன் மார்பில் பட்ட வேல் அவன் மார்போடு நில்லாது பாணருடைய அகன்ற மண்டையைத் துளைத்தது; இரப்பவருடைய கையைத் துளைத்தது; மன்னால் புரக்கப்பட்ட சுற்றத்தினரின் புல்லிய கண்ணின் ஒளி மழுங்கத் துளைத்தது. அழகிய சொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்சியையுடைய அறிவுடையோராகிய புலவர் நாவில் சென்று வீழ்ந்தது. எனவே, இனிப் பாடுநரும் இல்லை. பாடுநருக்கு ஒன்று ஈகுநரும் இல்லை என ஔவையார் கலங்கிக் கையற்று உரைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

அருந்தலை இரும்பாணர் அகல் மண்டைத் துளை உரீஇ,
இரப்போர் கையுளும் போகி,
புரப்போர் புன்கண் பாவை சோர

அம்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்

சென்று வீழ்ந்தன்று[65]

வேந்தன் புலவரை அன்புடன் வரவேற்று அவருக்கு வேண்டுவன தந்து, அன்பொழுக, கனிவுடன் அவர்களைப் பார்ப்பான் என்றும், அவனது அருள் பார்வையில் புலவரின் உள்ளம் உருகுவதை விட எலும்புகளே மெழுகென உருகுவதாக முடத்தாம கண்ணியார் கூறுகிறார்.

ஒன்றியான் பெட்டா அளவையின் ஒன்றிய

கேளிர் போலக் கெள்கொளல் வேண்டி

வேளாண் வாயில் வேட்பக் கூறிக்

கண்ணிற் காண நண்ணுவழி இரீஇப்

பருகு அன்ன அருகா நோக்கமோடு

உருகு பவைபோல் என்பு குளிர்கொளீஇ[66]

இவ்வாறாக அன்றைய ஆட்சியாளர்கள் புலவர்களைப் போற்றிச் சிறப்பித்தார்கள் என்பதைச் சங்க இலக்கியப் பாக்களால் அறிய முடிகின்றது.

### 3.7.1. புரவலனைக் காத்த புலவர்கள்

வேந்தர் புலவர்க்குப் பரிசில் தந்து புரத்தல் இயல்பு. அவ்வாறு பரிசில் பெற்ற புலவர், தம்மைப் புரந்து வேந்தனுக்குத் துன்பம் நேர்ந்துழி அவனைக் காப்பாற்றும் கடமையினையும் மேற்கொண்டிருந்தனர். புரவலனைக் காப்பாற்றிய புலவராகப் பொய்கையார் விளங்குகிறார். சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் கோச்செங்கணானிடம் பொருது தோல்வியுற்று அவனிடம் சிறைப்பட்டான்.

வேந்தன் சிறைப்பட்ட செய்தியை அறிந்த பொய்கையார் அவனை மீட்கும் பொருட்டு, கோச்செங்கணாரின் வெற்றியைச் சிறப்பித்துக் களவழி நாற்பது என்னும் நூலைப் பாடினார். பாடலுக்குப் பரிசிலாகச் சேரமானின் விடுதலையைக் கேட்டுப் பெற்றார். பொய்கையார் சேரனைச் சிறை செய்த செய்தியனைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடவில்லை. பிற்கால இலக்கியங்களான கலிங்கத்துப் பரணியும், விக்கிரம சோழனுலாவும், பொய்கையார் சேரன் சிறை விடுதலை செய்த செய்தியினைக் குறிப்பிடுகின்றன.

களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய, உதியன்

கால்வழித் தளையை வெட்டி அரசிட்ட பரிசும்[67]

எனக் கலிங்கத்துப் பரணியும்,

இன்னருளின்

மேதக்க பொய்கை கவிக்கொண்டு வில்லவனைப்

பாதத் தளைவிட்ட பார்த்திபனும்[68]

என விக்கிரம சோழ உலாவும் இச்செய்தியைப் பாடுகின்றன.

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போரில் போரிட்டுத் தோற்று, குடவாயிற் கோட்டத்தில் சிறைப்பட்டுத் தண்ணீர் கேட்டு அது காலந்தாழ்த்தித் தரப்பெற்றதனால் உண்ணாது துஞ்சினான் எனப் புறநானூற்றுப் பாடலின் குறிப்பு குறிப்பிடுகிறது.[69]

சேரமானைச் சிறை மீட்ட பொய்கையாரின் செயலைப் பிற்கால இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வேந்தனுக்கு நேர்ந்த துன்பத்தைக் கண்டு பொறாது அவனைச் சிறைமீட்ட செய்கை வேந்தர் பால் புலவர்க்கு இருந்த நெருக்கத்தை விளக்கும்.

சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி என்பான், சேரன் அந்துவஞ்சேரல் இரும்பொறையுடன் பகைகொண்டு, சேரனின் கருவூரை முற்றுகையிட்டான். முற்றுகையிட்டிருந்த நேரத்தில் ஒரு நாள் இவன் ஊர்ந்து சென்ற களிறு மதம் கொண்டது. மதம் கொண்ட களிறு, பாகர் அடக்கம் அடங்காது, இவன் பாசறையின் நீங்கப் பகைவரின் பாசறையிடத்தே சென்று விட்டான். இக்காட்சியினைக் கண்டார் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

எதிர்பாராமல் தனிமைப்பட்டுவிட்ட சோழனைச் சேரப்படைவீரர் சூழ்ந்து அழித்துவிடலாம். அதனால் தனித்து வந்தவனை அழித்த பழி சேரனுக்கு நேர்ந்துவிடும். எனவே சோழன் உயிர் பிழைத்துச் செல்லவும் சேரனுக்கும் பழி ஏற்படாமல் இருக்கவும் புலவர் முயன்றார். சேரனுக்கு நிலைமையை விளக்கிப் பழி நேராமல் காத்தார். இதனை,

மரீஇயோர் அறியாது, மைந்து பட்டன்றே

நோய் இலன் ஆகிப் பெயர்கதில் அம்ம![70]

எனப் புலவர் இரங்கியுரைக்கும் கூற்றில் அவரது அருளுள்ளம் புலப்படுகிறது.

போர்க்களப் பாசறையில் வேந்தனுடன் புலவர் இருப்பர். படைவீரர்களுக்கு ஊக்கமளிக்க அரசவைப் புலவர்களையும் போர்க் களத்திற்கு அழைத்துப்போவது அன்றைய வழக்கம்[71]

எனக் கூறும் குஞ்ஞன் பிள்ளையின் கருத்தும் இதனை உறுதிசெய்கிறது.

### 3.7.2. புலவோரின் துணிவுள்ளம்

சங்கப் புலவருட் சிலர் அஞ்சாமை மிக்க நெஞ்சினராய் விளக்கியுள்ளார். மந்திரச் சுற்றம் வாய்மூடிந்தபோது மன்னர்களை நெருங்கி அறிவு தீ மூட்டி அவர்தம் தவறுகளைத் திருத்த முயன்றுள்ளனர்.

பாண்டியன் அறிவுடை நம்பிக்கு நெறியறிந்து வரி வாங்குமாறு வற்புறுத்திய பிசிராந்தையார். அறிவுடைய அரசன் தாம் கொள்ளும் அரசதிறையைக் கொள்ளும் நெறியறிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தால் அவன் நாடு கோடிப் பொருளினை ஈட்டிக் கொடுத்துச் செழிப்படையும். வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடோறும் வரிசை அறியாத ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடி குடிகளின் அன்புக் கெடக் கொள்ளும் பொருள் தொகுதியை விரும்பின் உலகமே கெடும் என பிசிராந்தையார் வேந்தன் முன்பு எடுத்துரைக்கும் ஆற்றல் புலவோரின் துணிவுள்ளத்தை எடுத்தியம்புகிறது.

அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே

கோடி யாத்து நாடு பெரிதும் நந்தும்;

மெல்லியன் கிழவன் ஆகி, வைகலும்

வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு

பரிவு தப எடுக்கும் பிண்டம் நச்சின்

யானை புக்க புலம் போல

தானும் உண்ணான் உலகமும் கெடுமே[72]

புலவர்க்கும் மன்னர்க்கும் இடையே நிலவிய உறவு பற்றிக் கருத்துக் கூறும் கோ.கேசவன்,

> அரசுக்கு அறிவுரை கூறியோரிற் பெரும்பாலோர் பணக்காரப் புலவராகிய கிழார்களே என்றும், பிற புலவரைவிடக் கிழார்ப் புலவர்கள் மன்னர்களோடு நெருங்கி இருந்தாரென்றும், அவர்களுடைய செல்வமே உறவின் நெருக்கத்திற்குக் காரணம்[73]

என்றும் கருத்துத் தெரிவித்துள்ளார்.

> புலவர், குடி முதலிய எல்லைகளைக் கடந்தும் நோக்க வல்லவர். யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற பெருநோக்கு அவரது புலமைக்கு உரிமையானதே. அந்நோக்கு என் நாடு, உன் நாடு என மாறு கொள்ளும் அரசர்க்கு எட்டாது. ஆதலின் அரசர் பெரிதெனப் போற்றியுணர்ந்த குடிப்பற்றுக் கொண்டே அவர்க்கு அறிவுறுத்தலானார். அக்காலத்து அரசர் குடிப்பற்று மிக்கவர்! குடியின் புகழுக்கும் சிறப்புக்கும் அறிகுறியாகக் கொண்ட குடிப் பூவினைத் தம் உயிரெனப் போற்றியவர்.
>
> சோழர் ஆத்திப் பூவினைக் குடிப்பூவாகக் கொண்டவர். ஆதலின் சோழன் எவனும் ஆத்தியைப் பழிக்கப் பொறுத்திரான். இவ்வாறு உள்ள அரசரின் மனநிலை உணர்ந்த புலவர்.அவர் போற்றுவன கொண்டே அவர்க்கு அறிவுறுத்தலானார். அவரது நோக்கமோ, போரை நிறுத்த வேண்டும் என்பதே அஃது அறம் பற்றிய நோக்கமாகும்[74]

எனப் புலவர் நோக்கம் பற்றி மு.வ.வரதராசனார் வழங்கும் கருத்துரை பொருத்தமுடையது.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனிடம் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பரிசில் வேண்டி நின்றார். யாதோ காரணத்தினால் சோழன் புலவரை உடனே அழைத்துப் பரிசில் தராது காலம் நீட்டித்தான். தம்மை மதியாது காலந்தாழ்த்திய வேந்தனின் புறக்கணிப்பை உணர்ந்த புலவர் அஞ்சாது எடுத்துரைத்த பாடல் வரிகள் எண்ணத்தக்கன.

நாற்படை வளமும் செல்வமும் மிகுந்த வேந்தரே எனினும் எம்மை மதியாதவரை யாரும் மதிப்பதில்லை. வரகுச் சோறு தந்து ஊட்டும் சிற்றூர் மன்னராயினும், அவர் எம்மிடத்துச் செய்யும் முறைமையை அறிந்து நடக்கும் பண்புமுடையவராயின் அவரையே யாம் பாராட்டுவோம். அறிவிலார் செல்வம்

இரவலர்க்குப் பயன்படாது. ஆதலால் எவ்வளவு வறுமையுற்றாலும் அதனை நினையோம். எனவே நல்லறிவுடையோர் வறுமையுறின் அவரையே பெரிதாக எண்ணி அவர் வாழ யாமும் வாழ்த்துவோம் என்று கூறுகிறார். இதனை,

சீறூர் மன்னர் ஆயினும், எம் வயின்
பாடு அறிந்து ஒழுகும் பண்பினாரே;
மிகப் பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்
நல் அறிவு உடையோர் நல்குரவு
உள்ளுதும், பெரும! யாம், உவந்து நனி பெரிதே[75]

என்ற மதுரைக்குமரனாரின் வரியால் அறிய முடிகின்றன.

பழந்தமிழ்ப் புலவர் தாம் பெறும் பரிசிலின் மதிப்பை விடத் தம்மை மதித்து நடத்தும் மாண்பையே பெரிதும் விரும்பினர் என்பதை அறிய முடிகிறது. தம்மைப் புறக்கணித்தவர் வேந்தராயினும் அது பொறுக்காது, வேந்தரின் வலிமையைக் கண்டும் அஞ்சாது தம் உள்ளம் உணர்ந்த கருத்தினைப் புலவர்கள் துணிவுள்ளத்தோடு வெளிப்படுத்தினர் என்பது பெற முடிகிறது.

### 3.7.3. புலவரின் இரக்கம்

புலவர் பெருங்குன்றூர் கிழார், சேரமான் இளஞ்சேரன் இரும்பொறையின் நண்பர். இவர் பரிசில் வேண்டி இரும்பொறையை நாடி வந்தார். விரைந்து பரிசில் தந்தால், புலவர் தன்னைப் பிரிந்து சென்று விடுவாரே என நினைத்துப் பரிசில் தராமல் காலம் நீட்டித்தான் இரும்பொறை. இதனை பிறழ் உணர்ந்த புலவர் பின்வருமாறு உரைக்கலானார். வேந்தே, நீ வள்ளன்மைப் பண்பும் வாய்க்கப் பெற்றேனாதலால் புலவருக்குப் பரிசில் மறுத்து பழியுடையோர் செயலை நின்பால் உரைத்தேன். கொடுப்போன் போல் காட்டி ஏமாற்றிவிட்டாய்.

பாடிய புலவன் வறுமையால் வாடுகின்றனனே என்ற நாணம் உனக்கு உண்டாகவில்லை. நீ நாணுமாறு பலமுறை பாராட்டினேன். என் பாடல் கேட்டு மகிழ்ந்த நீ பரிசில் தந்து என்னை மகிழ்விக்கவில்லை. உன்னை வணங்கி விடைபெறும் முன் ஒன்று கூறுகிறேன் கேட்பாயாக!

வாயில் வந்த நிற்கும்போது, புகழ்பாடி வருவோர்க்கும் வாரி வழங்கும் வள்ளல்கள் இருப்பதனாலேயே இரவலரும் புலவரும் இறவாது வாழ்கின்றனர். வேந்தரிடம் இவ்வருட்பண்பு இல்லாது போயின், இரவலர் இல்லாது அழிவர். இரப்பார்க்கு ஒன்று ஈவதைக் கடப்பாடாகக் கொள்வது வேந்தர்க்கு அழகு. உன் போல் வேந்ரெல்லாம் ஈயாது போனால் எம்மைப் போன்ற புலவர்கள் இனிமேல் பிறவாது ஒழிவாராக என்ற பொருளமைந்த பாடலைப் பாடினார்.

மன்பதை காக்கும் நின் புரைமை நோக்காது
அன்பு கண் மாறிய அறன்இல் காட்சியொடு
நும்மனோரும் மற்று இனையர் ஆயின்
எம்மனோர் இவண் பிறவலர் மாதோ[76]

என்றும்,

இவ்வாறு அமைந்த புலவரின் பாட்டில் அவரது வறுமையும் வேந்தனிடம் அவர் கொண்டிருந்த உரிமையும் புலப்படுகின்றன.

பரிசில் வேண்டி வந்த புலவர்க்கு வரையாது கொடுக்கும் பண்பினைப் பெற்றிருந்தனர் பழந்தமிழ் வேந்தர். பொன்னும் பொருளும் மட்டுமல்லாது தன் ஆட்சியையே கொடையாகக் கொடுத்த வேந்தனைக் காண முடிகின்றது.[77]

இவ்வாறு பெரும் வள்ளல்களாக வாழ்ந்த வேந்தர்களுள் புலவர்களைப் புறக்கணித்தோரையும் காணமுடிகின்றது.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடம் பரிசில் கருதி வந்த புலவர் வடம வண்ணக்கன் பேரிசாத்தனாருக்குப் பரிசில் கொடாது போயினான். புலவர் இவன் மக்களை வாழ்த்துவது போல் இவனது ஈயாத் தன்மையினை இகழ்ந்து கூறுகிறார்.

வேந்தன் தன்னைப் புறக்கணித்தும், பரிசில் நல்கா விட்டாலும் நெடுங்காலம் வாழ்க என வாழ்த்துதல் புலவர்களுக்கு இயல்புகளாம்.

அருவி தாழ்ந்த பெரு வரை போல
ஆரமொடு பொலிந்த மார்பில் தண்டா
கடவுள் சான்ற கற்பின் . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

புகன்ற செல்வமோடு புகழ் இனிது விளங்கி

நீடு வாழிய! நெடுந்தகை[78]

என்ற பாடல் வரிகள் குறிப்பிடத்தக்கது.

வடமவண்ணக்கன் பேரிசாத்தனாரைப் போலவே புலவர் ஆவூர் மூலங்கிழாரும் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடம் பரிசில் வேண்டி நின்றார். புலவர் பேரிசாத்தானருக்குப் பரிசு கொடாததைப் போலவே ஆவூர் மூலங்கிழாருக்கும் பரிசு கொடாது போயினான். இதனால் வெறுப்புற்ற ஆலங்கிழார்.

வேந்தே இயல்வதனை இயலுமெனச் சொல்லி ஈதலும், இயலாததனைச் சொல்லி தாளாண்மை உடையார்க்குரிய நற்செயல்களாம். இயலாததை இயலுமென்றலும், இயல்வதனை இயலாதென்றலும் ஆகிய இவ்விரண்டும் இரப்போரை மெலிவித்தன்றி, ஈவோார் புகழ் குறைப்படும் செயலாகும். இக்குறைப்படும் செயல்கள் புலவர்பால் உளவாதலை யாம் இதுவரை கண்டதில்லை. இப்போது கண்டேன், வேந்தே நின் வாழ்நாள் சிறக்க; நின் புதல்வர் நோயிலராகுக என வாழ்த்தினார்.

ஒல்லுவது ஒல்லும் என்றலும், யாவர்க்கும்

ஒல்லாது இல் என மறுத்தலும், இரண்டும்

ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

நாண் அலது இல்லாக் கற்பின் வாள் நுதல்

மெல் இயல் குறுமகள் உள்ளிச்

செல்வல் அத்தை சிறக்க நின் நாளே[79]

என்பது உணரத்தக்கது. இவ்வாறாக இரங்கி ஆவூர் மூலங்கிழார் கூறுகிறார்.

ஆவூர் மூலங்கிழாரும், வடமவண்ணக்கன் பேரிசாத்தானரும், பெருங்குன்றூர்கிழாரும் பரிசில் கொடாத வேந்தரின் செயலை இகழ்ந்து பாடினர். வேந்தனின் அருளற்ற செயலைக் கடிந்தாலும் தம் வறுமை நிலையினை எண்ணி

இரங்கினாலும், இறுதியல் வேந்தனை வாழ்த்திவிட்டுச் செல்லும் புலவரின் பண்புடைமை போற்றத்தக்கது.

### 3.8. வாழ்த்திய தன்மை

வேந்தனைப் பாடிப் பரிசில் பெறும் புலவன், தமக்கு பரிசில் நல்கியவனை வாழ்த்துதல் இயல்பு. பாடாண்திணை அமைந்த பாடல்கள் அனைத்தும் புலவலனை வாழ்த்தும் நோக்கில் பாடப்பட்டவையாகும். வாழ்த்தும்போது இயற்கை பொருள்களை உவமை கூறி வாழத்துதல் புலவர் மரபு. இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள் தமிழர். பழந்தமிழ்ப் பாடல்களில் இயற்கையின் செல்வாக்கு மிகுதி. இவ்வியற்கையின் வாயிலாக வேந்தரை வாழ்த்திய தன்மையினைப் புறப்பாடல்கள் வழியாக அறிய முடிகிறது.

### 3.8.1. மணலினும் பலவே வாழ்க

கடற்கரை மணலை எண்ணி விட முடியாது. அதுபோல மன்னனின் வாழ்நாளை குறிப்பிட்டு எண்ணிக் கூற இயலாது எனப் புலவர் வாழ்த்துவதைக் காணமுடிகிறது.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் வாழ்த்துகிறார். நெடுந்தகையே! இரவலர்கள் இல்லாமற் போகுமாறு நெடுங்காலம் வாழ்வாயாக! ஆழமான நீர்ப்பரப்பையும்; வெண்மையான மேற்பரப்பையுடைய அலைகள் திரியும் செந்திலம்பதியில் நெடியோனாகிய முருகவேள் நிலைப்பெற்ற அழகிய அகன்ற துறை; அத்துறையில் பெருங்காற்று திரட்டுவதால் குவிந்ததும், சுவடுகள் பதிவதுமான மணல் மேட்டிலுள்ள மணலின் எண்ணிக்கையினும் பல காலம் வாழ்வாயாக! எனப் புவலர் வாழ்த்தி உரைத்தார்.

நீ நீடு வாழிய - நெடுந்தகை! - தாழ்நீர்
வெண் தலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை
கடு வளி தொகுப்ப ஈண்டிய
வடு ஆழ் எக்கர் மணலினும் பலவே[80]

என்னும் பாடல் வரிகள் இதனைச் சுட்டுகின்றன.

வேந்தனின் வாழ்நாள் சிறக்க வாழ்த்தும் புலவரின் எண்ணம் எண்ணத்தக்கது.

அரசனை வாழ்த்துகையில் அவன் நாட்டு எல்லைக்கு உட்பட்ட ஆற்றின் மணலினும் பலவாகிய நாள்கள் வாழ்க எனல் மரபு. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் வாழ்த்துகிறார். முந்நீராகிய கடலின் தெய்வத்திற்கு விழா எடுத்தவனாகிய நெடியோனால் உண்டாக்கப் பெற்றது பஃறுளியாறு. நல்ல நீரையுடைய அந்தப் பஃறுளியாற்று மணலினும் பலகாலும் எம் மன்னன் வாழ்வானாக என வாழ்த்தியுள்ளார்.

முந்நீர் விழவின் நெடியோன்
நல்நீர்ப் ப.்றுளி மணலினும் பலவே[81]

என்னும் வரிகளில் மூலம் இதனை அறியலாம்.

### 3.8.2. விண்மீன் போன்று வாழ்க

வானத்தின்கண் தோன்றும் விண்மீன்களை எண்ணி விடமுடியாது. அதுபோல, வேந்தனின் வாழ்நாளை எண்ணி விடாத அளவிற்கு விண்மீன்கள் போல வாழ வேண்டும் என் புலவர்கள் வாழ்த்துவது இயல்பு.

சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கு இருந்தாரை கண்டு மகிழ்ச்சி அடைந்தார் புலவர் வானத்தின்கண் தோன்றுகின்ற விண்மீன்களிலும் மேம்பட்டு நும்முடைய வாழ் நாட்கள் விளங்குவனவாக என ஔவையார் வாழ்த்துகிறார்.

வேந்தனின் வாழ்நாள் நீடிக்க மக்களின் வாழ்க்கைச் சிறக்கும் என்பதால் புலவர்கள் விண்மீன்கள் போன்று வாழ்க என் வாழ்த்திய நெஞ்சம் எண்ணத்தக்கது.

. . . . . . . . . . . . . . . . . . . . . . வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும்[82]

என்ற வரிகள் உரைத்தக்கது.

### 3.8.3. மழைப் போன்று வாழ்க

மழை நீரானது பொழியும் போது இப்பூமியில் நல்லோர், தீயோர் எனப் பாகுப்படுத்திப் பாராமல் எல்லோரும் பயன்பெறும் வகையில் பொழியும் தன்மையுடையது. அதுபோல வாழ்க என வாழ்த்தும் இயல்பினர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி ஆலத்தூர் கிழார் வளவனை வாழ்த்துகிறார் புலவர் யானோ எளியவன்; இந்த உலகத்தில் நல்லோர் செய்த நல்வினை உண்டாயின்; இமய மலையில் திரண்டு இனிய ஓசையைச் செய்து கீழைக்காற்றால் உந்தப்பட்டு வரும் பெரிய மேகம் பொழிந்த நுண்ணிய பல நீர்த்திவலைகளிலும் பல காலம் வாழ்க என வாழ்த்தினார்.

சான்றோர் செய்த நன்று உண்டாயின்
இமயத்து ஈண்டி, இன் குரல் பயிற்றி
கொண்டல் மாமழை பொழிந்த
நுண் பல் துளியினும் வாழிப பலவே[83]

என்ற பாடல் வரிகளில் தெரிய வருகின்றது. இவ்வாறாக நாடாளும் வேந்தனைப் புலவர்கள் வான்மழைப் போல் வாழ்க என் வாழ்த்தும் பண்பினை அறியமுடிகிறது.

### 3.8.4. சந்திரன், சூரியன் போன்று வாழ்க

வேந்தர்களை என்றும் நிலைத்து நிற்கக்கூடிய இயற்கைப் பொருள்களைச் கட்டி, இவை போல் நீ நிலைத்த வாழ்வினைப் பெற்ற நெடிது வாழ்க எனப் புலவர்கள் வாழ்த்துதல் இயல்பு.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் புலவர் வாழ்த்துகிறார். அழகிய இடமுடைய விண்ணில் செறிந்த இருளகற்றும் வெம்மையான் கதிர்களையுடைய ஞாயிற்றுக்கடவுள் போலவும், மேற்கில் தோன்றும் குளிர்ந்த கதிர்களை உடைய நிலவினைப் போலவும் உலகுடன் நின்று நிலைபெற்று வாழ்க என மதுரைக் கணக்காயனாரின் மகனார் நக்கீரனார் வாழ்த்துகிறார்.

அம்கண் விசும்பின் ஆர் இருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும், குடதிசைத்

தண் கதிர் மதியம் போலவும்

நின்று நிலைஇயர் உலகமொடு உடனே![84]

என்ற பாடல் வரிகளில் புலவர் இதனைப் புலப்படுத்துகின்றார்.

பெருங்குன்றூர்கிழார் சேரனை வாழ்த்திய போது பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் நடுவேயுள்ள இடம் ஒளியுடையும்படி பெரிய ஆகாயத்தில் உயர்ந்து செல்லும் சூரியனைப் போலப் பல காலம் விளங்குவாயாக என வாழ்த்துகின்றார். இதனை, சூரியன் காலையில் தோன்றி மாலையில் மறையும்; சந்திரன் இரவில் தோன்றி காலையில் மறையும்.

மாகம் சுடர மா விசும்பு உகக்கும்

ஞாயிறு போல விளங்குதி, பல நாள்[85]

என்ற பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

### 3.8.5. எண்ணிக்கையால் வாழ்த்துதல்

பழந்தமிழர்கள் பயன்படுத்திய எண்ணிக்கை அளவினைச் சுட்டி அவ்வெண்ணிக்கை அளவை விட மிகுதியான நாள்கள் வேந்தன் வாழ்க எனப் புலவர்கள் வாழ்த்துதல் இயல்பு.

செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழ்த்துகின்றார். அதில் ஆயிரத்தால் பெருக்கிய வெள்ளம் என்னும் எண்ணும் ஆகிய எண்களின் அளவுள்ள பல ஊழிகள் வாழ்வாயாக என நவில்கின்றார். இதனை,

ஆயிர வெள்ள ஊழி

வாழி ஆத! வாழிய பலவே![86]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றார்.

ஒன்றைப் பத்தின் மடங்குகளா அடுக்கிய, கோடியைக் கடை எண்ணாக இருத்த பேரெண்ணிக்கையை நின் வாழ்நாள் கொண்ட பெருமையை அடையட்டும் என்று பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் வாழ்த்துகிறார். இதனை,

ஒரு தாம் ஆகிய உரவோர் உம்பல்!

ஒன்று பத்து அடுக்கிய கோடி கடை இரீஇய

பெருமைத்தாக, நின் ஆயுள்தானே[87]

*என்ற பாடல் வரியால் தெரிய முடிகிறது.*

*ஒரு திங்களின் கால அளவு நின் வாழ்நாளின் ஒரு நாள் அளவாகுக. நின் வாழ்நாள் ஒரு திங்களின் அளவு ஓர் ஆண்டின் கால அளவிற்காக ஆண்டின் அளவு ஊழியளவாகுக. ஊழி வெள்ள வரம்பினதாகுக. வாழ்நாளின் ஊழிக் கால எல்லை வெள்ளமென்னும் கால எல்லையின் அளவிற்றாகுக எனக் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர் கிழார் வாழ்த்துகிறார். இதனை,*

நின் நாள் திங்கள் அனைய ஆக! திங்கள்

யாண்டு ஓரனைய ஆக! யாண்டே

ஊழி அனைய ஆக! ஊழி

வெள்ள வரம்பின் ஆக![88]

*என்ற வரிகளால் அறிய முடிகின்றது.*

### 3.8.6. முன்னோர்கள் போல் வாழ்க!

*வேந்தர்களைக் குலத்துதித்த முன்னோர்களைச் சுட்டிக்காட்டி அவர்கள் போல் வாழ்க எனப் புலவர்கள் வாழ்த்துதல் மரபாகும். கடல் சூழ்ந்த நிலவுலகமான இத்தமிழகத்தை ஆண்ட நின் குலத்து முன்னோர்களைப் போல நிலை பெற இருந்து, இவ்வுலகத்தின்கண் அழியாத நல்ல புகழை நிறுவி அதனானே நீ மெலிவின்றி வாழ்க என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை புலவர் குமட்டூர் கண்ணனானர் வாழ்த்துகிறார்.*

கடலக வரைப்பின் இப்பொழில் முழுது ஆண்ட நின்

முன்திணை முதல்வர் போல நின்று நீ

கெடாஅ நல்இசை நிலைஇத்

தவாஅலியரோ இவ் உலகமொடு உடனே[89]

*என்ற வரிகளால் தெரிய முடிகிறது.*

**3.8.7. நலம் காத்தவன் வாழ்க!**

நாடு செழிக்க வேந்தன் நலமுடன் வாழ வேண்டும் என்னும் கருத்துடையவர் புலவர். எனவே உலகத்தவர்களுக்காக அவர்கள் நலம் காப்பாற்றப்படுவதற்காக நீ வாழ வேண்டும் என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை குமட்டூர் கண்ணனார் வாழ்த்துகின்றார். இதனை,

நீ வாழியர், இவ்உலகத்தோர்க்கு என[90]

என்ற வரியால் உணர முடிகின்றது.

**3.8.8. குணம் கூறி வாழ்த்துதல்**

மக்களில் சிலர் நும்வேந்தன் யார் என வினவியதாகக் கொண்டு புலவர்கள் அவர்களுக்கு மறுமொழி கூறும் போக்கில் தம் வேந்தனின் பெருமைகளை எடுத்துச் சொல்லி இறுதியில் அவனை வாழ்த்துவர். இதனை ஓர் உத்தியாகக் கொண்டிருந்தனர் பழந்தமிழ்ப் புலவர்கள்.

உம்முடைய தலைவன் யாரெனக் கேட்டால், எம்முடைய தலைவன் கடல் இடையே உள்ள தீவினுள் வாழும் பகைவரைக் கடல் மேற்சென்று கொன்று அப்பகை மன்னரது காவல் மரமாகிய கடம்ப மரத்தினை வெட்டிய வலிமை உடையவன் நெடுஞ்சேரலாதன் ஆவான். இதனை,

நும்கோ யார்? என வினவின் எம்கோ
இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச் சென்று
கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின் முன்பின்
நெடுஞ்சேரலாதன் வாழ்க[91]

என்ற குமட்டூர் கண்ணனாரின் வரியால் காண முடிகின்றது

மக்களுள் சிலர் அரசன் யாரென வினவின் என்பதற்கு அவன் கோபெருஞ்சோழன் பசிப்பகைஞன் பொத்தியின் நண்பன் என்றார். பெத்தியாரோடு நட்புப் பூண்டமையின் நாள்தோறும் மகிழ்நகை பூண்டான் என்றார். உழவர்கள் ஆமைச் சூடு தின்றும் கள் அருந்தியும் களிப்பதைப் போல் சோழன் புலவர் தம்

செய்யுள் பதம் அருந்தி மகிழ்ச்சி பூண்பன் என்பதைப் பிசிராந்தையார் உணர்த்தினார். இதனை,

நும்கோ யார்? என வினவின் எம்கோக்
களமர்க்கு அரித்த விளையல் வெங் கள்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . பாணர்
பைதல் சுற்றத்துப் பசிப் பகை ஆகி
கோழியோனே கோப்பெருஞ்சோழன்
பொத்து இல் நண்பின் பொத்தியொடு கெழீஇ
வாய் ஆர்பெரு நகை வைகலும் நக்கே[92]

என்ற பிசிராந்தையாரின் வரியால் அறிய முடிகின்றது. இவ்வாறாக வேந்தனின் குணங்களையும், பண்புகளையும் கூறி நீண்ட நெடிய நாட்கள் வாழ புலவர்கள் வாழ்த்தலேயாகும்.

### 3.8.9. வள்ளல்தன்மைக் கூறி வாழ்த்துதல்

வேந்தர்களை வாழ்த்த நினைத்த புலவர்கள் இப்படிப்பட்ட வள்ளலைப் பெற்ற வயிறு வாழ்க என வாழ்த்துதல் மரபு.

பல ஆண்டுகள் மழை பெய்யாது பொய்த்த காலத்தில், தன்னை நாடி வந்தோரது பசியைப் போக்கிய வேந்தனைப் பெற்ற தாயின் வயிறு குற்றம் இன்றி விளங்கட்டும் எனப் புலவர் குமட்டூர் கண்ணனார் வாழ்த்துவர். இதனை,

வயிறு பசி கூர ஈயலன்
வயிறு மாசு இலீயர், அவன் ஈன்ற தாயே[93]

என்ற வரியால் காண முடிகின்றது.

தங்களின் வயிற்றிப்பசியினைப் போக்கிய வேந்தனின் வயிறு குளிர்வதாக என வாழ்த்தாமல், இத்தகைய வள்ளலைச் சுமந்திருந்த வயிறு குற்றமின்றி விளங்குவதாக என வாழ்த்தும் புலவரின் திறம் போற்றுதற்குரியதாகும்.

தம் வயிற்றில் பிறந்த மக்களால் நல்லன நடந்துழி தம் வயிற்றைப் போற்றுதலும், தகாதன நடந்துழி தம் வயிற்றை நொந்து கொள்ளுதலும் பழந்தமிழ்த் தாய்மார்களின் இயல்பு ஆகும்.

மக்களுள் சிலர் சிறிய வீட்டில் உள்ள நல்ல தூணைப் பற்றிய வண்ணம் உன் மகன் எங்கு உள்ளானோ? என வினவுகிறார். என் மகன் எங்கிருந்தாலும் நானறியேன். புலி இருந்து பின் பெயர்ந்து சென்ற கற்குகை போல அவனைப் பெற்ற வயிறு இதுவேயாகும்.

இவ்வாறாக வள்ளல் தன்மை உடைய வேந்தர்களை வாழ்த்துவதோடு மட்டுமில்லாமல் அவ்வள்ளலை ஈன்றெடுத்த தாயின் வயிற்றையும் வாழ்த்திப் போற்றியுள்ளார்கள் புலமை வாய்ந்த புலவர்கள்.

### 3.8.10. பண்ணனை வேந்தன் வாழ்த்துதல்

இயற்கைப் பொருள்களையும், எண்களின் தொகுதிகளையும் குறிப்பிட்டு புலவர்கள் வேந்தர்களை வாழ்த்தினர். வேந்தர்கள் புலவர்களை வாழ்த்தும்போது தம் வாழ்நாளையும் சேர்த்து வாழ வேண்டும்என வாழ்த்தும் முறையும் காணப்படுகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் தன் நாட்டில் வாழும் சிறுகுடி கிழான் பண்ணனை யான் வாழும் நாளையும் சேர்த்து வாழ வாழ்த்தினான். என்பதை,

யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய[94]

என்ற பாடல் வரியால் அறிய முடிகிறது.

புலவர்கள் வேந்தர்களை வாழ்த்துதல் மரபு. நாடாளும் பெருவேந்தன் தன் நாட்டில் வாழும் சிறுகுடி கிழான் பண்ணனை வாழ்த்துகிறார். நாடாளும் தம் வாழ்நாளை விடப் பண்ணனின் வாழ்நாள் பெருகிச் சிறக்க வேண்டும் என விரும்பும் வேந்தனின் மன நிலை போற்றுதற்குரியது.

### 3.8.11. மகிழ்வோடு வாழ வாழ்த்துதல்

வேந்தர்களின் வாழ்நாளைப் பல்வேறு இயற்கை பொருள்களை உவமைக் காட்டி வாழ்த்தும் முறையிலிருந்து மாறுபட்டு, அவரவர்களுக்கு வரையறுக்கப்பட்ட வாழ்வின் கால எல்லையளவு வரை மகிழ்ச்சியோடு வாழ்தலே போதும் என்று புலவர்கள் உண்மையோடு பொருந்த வாழ்த்தும் முறையும் காணப்படுகிறது. இதனை,

நினக்கென வரைந்த ஆண்டுகளெல்லாம்

மனக்கினி தாக வாழிய வேந்தே[95]

என்ற பாடல் வரியால் அறிய முடிகிறது. இவ்வாறு வாழ்த்தப்படும் வாழ்த்தில் பொதிந்துள்ள உண்மை ஆழ்ந்து உணரத்தக்கது.

ஊழில் நம்பிக்கையுடையவர் தமிழர் ஊழின் அடிப்படையில் அவரவர்க்கென்று வரையறுக்கப்பட்ட கால எல்லையை மகிழ்ச்சியோடு வாழ்ந்து முடித்துச் சென்று விடுதலை வாழ்வின் பயன் என்ற கருத்து தெளியத்தக்கது.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாழ்த்தும் மாங்குடி மருதனார் வாழ்வின் உண்மைகளையும், இன்மைகளையும் தெளிய உணர்ந்து வாழ்த்தியுள்ளார். நிலையாமையையே நிலைவேறுடையதாக உடையது இவ்வுலகம் . இவ்வுண்மையை உணர்ந்து ஊழினால் பெற்ற செல்வத்தையும் இன்பத்தையும் சுற்றத்தாரோடு துய்த்து மகிழ்ந்து வாழ்க எனப் புலவர் வாழ்த்தினார்.

பொற்விளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த

இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய

மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்

மகிழ்ந்தினி துறைமதி பெரும

வரைந்துநீ பெற்ற நல்லூ ழியையே[96]

என்ற பாடல் வரியில் காண முடிகிறது. இவ்வாறு வாழ்த்தும்போதும் வாழ்வின் உண்மைகளை உணர்த்தி வாழ்த்துவது தமிழ்ப் புலவரிடம் காணப்படும் சிறப்புகளுள் ஒன்று.

வேந்தரை வாழத்துதல் மரபாக இருந்தாலும் புலவரின் உள்ள உணர்விற்கு ஏற்ப வாழ்த்தும் முறையும் பலவாறு அமைந்திருப்பதைக் காண முடிகிறது. வாழ்த்தும் முறை பலவாறு அமைந்திருப்பினும் வாழ்த்திற்குரியோர் நலம் பல பெற்று வளத்தோடு வாழ்வாங்கு வாழ வேண்டும் என்ற புலவரின் அடிப்படை உணர்வில் மிகுதல் குறைதல் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### 3.8.12. நன்றியறிதல்

*புலவர் பெருமக்களிடம் அமைந்திருந்த பண்புகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது நன்றியறிதல் என்னும் பண்பாகும். புலவரின் வாழ்க்கில் இப்பண்பு பொதிந்திருப்பதைக் காண முடிகிறது.*

> அவர்களிடமிருந்து எல்லாக் குணங்களிலும் செய்ந்நன்றியறிதல் எனும் குணம் மிகச் சிறப்பாக விளங்கியது. இது அவர்களின் பாடல்களால் விளங்கும்[97]

*என்னும் உ.வே.சாமிநாதையரின் கூற்று ஈண்டு கருதத்தக்கது.*

### 3.8.13. உயர்ந்த உணர்வுகள்

*பழந்தமிழகத்தில் வேந்தர் புலவர் உறவு சிறப்பாக அமைந்திருப்பதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.*

> புலவர் நல்லுரைக் கேட்டு அரசர் பலர் உண்மை உணர்ந்து முற்றுகை விடுத்தனர்; போர் தவிர்த்தனர்; வெஞ்சினம் தவிர்த்தனர்; ஒறுத்தல் நிறுத்தினர்; புலவர் உறவே பேருறவாகக் கொண்டனர்; புலவரையே கண்போல் நட்பின் கேளிராகப் போற்றி ஒழுகினர்; அவர்தம் நட்பால் இன்களி மகிழ்நகையுற்றனர்; அவர் நாட்டைப் பாடி வாழ்வித்து விடுவர் என எதிர் பார்த்ததிலிருந்து வாழ்த்துப் பெற்ற மகிழ்ந்தனர்; அவர் கடுஞ்சொல் கொண்டு வேம்பும் கடுவும் போல்வன கூறிக் கடிந்த போதும் உண்மை உணர்ந்து உள்ளம் குளிர்ந்தனர்; அறம் உணர்த்திய அறிவுரைக்காக நன்றி பாராட்டினர்; தாமும் புலமையொளி பெற முயன்றனர். புலவராய்ப் பாடினர்[98]

*என்ற கருத்து கருதத்தக்கது.*

> தமிழையே தாய்மொழியாகக் கொண்ட தலைமையோரே அரசாராய் அக்காத்து விளங்கியதால், அரசவைகளில் தமிழ்ப் புலவர்கள் முதலிடம் பெற்றுப் பெருமையுடன் விளங்கினர்.[99]

*வேந்தருக்கும் புலவருக்கும் இடையே ஏற்பட்டிருந்த உறவு தவிர்க்க முடியாததாயும், காலத்தின் தேவையாயும் அமைந்திருந்தது. புலன் உழுது உண்ணும் புலவர்களின் அறிவுரை வேந்தர்க்கு வழிகாட்டியாய் அமைந்தது. படையேர் உழுவராக விளங்கித் தம் வலிமையால் வளமோடு வாழ்ந்த வேந்தரின் பொருள்*

புலவர்களின் வாழ்க்கைக்குப் பயன்பட்டது. ஆழ்ந்த புலமையும், தெளிந்த சிந்தனையும் உடைய புலவர்கள் சிறந்த மன உணர்வினைப் பெற்றிருந்தனர்.

சிறந்த மன உணர்வினைப் பெற்றிருந்தக் காரணத்தால் புலவர்களின் வாழ்க்கை உயர்ந்த உணர்வுகளில் திளைப்பது பெரும்பகுதியாகவும்; வாழக்கைத் தேவைகளைப் பற்றி நினைப்பது சிறு பகுதியாகவும் அமைந்துவிட்டது. அதனால் பரிசில் நல்கும் வள்ளல்களையோ, வேந்தரையோ நாடிச் செல்கின்ற நிலை புலவர்களுக்கு ஏற்பட்டது.

பழந்தமிழ் வேந்தரின் வாழ்க்கை பெரும் பகுதி போர்களிலும், எஞ்சிய சிறுபகுதி அடுத்து வரும் போரைப் பற்றிச் சிந்திப்பதிலுமே கழிந்தது. அதனால் இவர்களால் சிறந்த உணர்வினைப் புலவர்கள் போல் பெற முடியாது போயிற்று. இன்று இருப்பது போன்ற அச்சு வசதிகள் அக்காலத்தில் இல்லாத காரணத்தால், ஒவ்வொரு புலவரையும் நேரில் சந்தித்தே கருத்துக்களைக் கலந்து கொள்ள முடிகிறது. எனவே வேந்தரும் புலவரும் ஒருவரை ஒருவர் சார்ந்து, ஒருவரை ஒருவர் போற்றி வாழ்வது காலத்தின் தவிர்க்க இயலாத கட்டுப்பாடாயிற்று.

> மன்னருக்கும் புலவருக்குமிடையிலான தொடர்புக்குப் புலவருடைய பொருளாதார நிலை ஒன்றே காரணம் என நிறுவ முடியாது. வேறு சில காரணங்களும் காட்டலாம். பூர்வீகச் சமுதாயத்தில் புலவர்களே அறிஞர்களாகவும் விளங்குவதால் புலவர்களுக்கும் அவர்கள் வாக்குக்கும் மன்னர்களிடையிலும், மக்களிடையிலும் செல்வாக்குக் காணப்படுவது உண்டு. சங்க காலப் புலவர்களை மன்னரும் மக்களும் மதித்தற்கு இதுவும் ஒரு காரணமாகலாம். செயற்கரிய செய்த மன்னர் சிலரைப் புலவர் சிலர் பாடியிருப்பர். புகழை விரும்பிய மன்னர் அப் புலவரை ஆதரிப்பர். இவ்வகையிலும் மன்னர், புலவர் தொடர்பு ஏற்பட்டிருக்கும்.[100]

வேந்தர், புலவர் இவர்களுடையே உள்ள தொடர்பில் குறிப்பிடத்தக்கதாய் இருப்பது புலவர் கூறிய அறிவுரை ஆகும். வேந்தரின் புறவாழ்விற்கான அறிவுரை கூறும்போது ஒவ்வொரு புலவரும் ஒவ்வொரு கருத்தைக் கூறியுள்ளார். ஆனால் வேந்தனின் அக வாழ்வில் தவறு கண்ட பொழுது புலவர் பலர் ஒன்று கூடிக் கடிந்துரைப்பதைக் காண முடிகிறது. ஆட்சிக்குரியவனின் புற வாழ்வைவிட அக வாழ்

செம்மையாக இருக்க வேண்டும் எனக் கருதினர். தமிழ்ப் புலவர்கள் என்பதை உணர முடிகின்றது.

## 3.9. தொகுப்புரை

வேந்தர்-புலவர் உறவு நிலை என்னும் இவ்வியலில் ஆராய்ந்த செய்திகளிலிருந்து கீழ்க் குறிப்பிடப்பெறும் செய்திகள் பெறப்படுகின்றன.

அன்பு மிகுதியால் புலவரும் வேந்தரும் ஒருவரை ஒருவர் மார்போடு மார்பு பொருந்தத் தழுவிக் கொள்ளும் வழக்கம் இருந்திருக்கின்றது.

அறிவுடையான் காட்டும் வழியில் செல்ல பண்டைய மன்னர்கள் தயங்கவில்லை என்பது தெரிகின்றது.

புலவர்கள் சமூகத்தில் பெரிதும் மதிக்கப்பட்டனர். அவர்கள் சொல்லுக்குப் பெரும் மதிப்பிருந்தது. மன்னர்கள் புலவர் பாராட்டிற்கு ஏங்கினர் என்பதை அறிய முடிகின்றது.

புலவர் பெருமக்கள் தலை மக்களின் பண்புச் சிறப்பு நோக்கியனரே அன்றி அவர்தம் செல்வத்தையும், செல்வாக்கையும் நோக்கினார் அல்லர் என்பது தெளிவாகின்றது.

மன்னர்களுக்கும், புலவர்களுக்கும் இடையே வியக்கத்தக்க அளவிற்கு ஆழமான நட்பு நிலவியுள்ளமையை அறிய முடிகின்றது.

வேந்தர்கள் பகைவரையும் பழிந்துரையாப் பண்பு உடையவர்களாக திகழ்ந்துள்ளார்கள்.

வேந்தர்கள் தவறு செய்ய நேர்த்தபொழுது உரிய நேரத்தில் அவர்களது தவறினை உணர்த்தி அதனால் அவர்களுக்கு ஏற்பட இருந்த பழியிலிருந்து புலவர்கள் காத்துள்ளனர்.

கோப்பெருஞ் சோழனுக்கு எதிராக அவன் பெற்ற மக்களே போருக்கு எழுந்த புன்மை நிலையினை அறிவுரைக் கூறி தடுத்து நிறுத்தியதும் காண முடிகின்றது.

மன்னர்களின் பொது வாழ்வினும், ஆன்மிக வாழ்விலும் பங்கேற்று நின்றவாறே அவர்தம் தனி வாழ்வாம் குடும்ப வாழ்விலும் பங்கேற்று உரிய பணிகளையாற்றினார் புலவர்கள் என்பது பெற முடிகின்றது.

வேந்தர்களிடத்தில் போரின் கொடுமையையும் அறத்தின் அடிப்படையில் விளங்கும் மறப்பண்பையும் விளக்கிப் போரைத் தடுத்துள்ளனர் என்பது தெரியவருகின்றது.

வேந்தர்கள் புலவர்களைப் பெரும் புலமையாளராகவும், சான்றோராகவும் கருதிப் போற்றியமைக் காண முடிகின்றது.

சங்கப் புலவர்கள் மனித உளவியலை நன்கு உணர்ந்தோராய் விளங்கினர். மன்னர்களின் மனப் போக்கறிந்து அவர்களின் ஆற்றலையும், ஈகைப் பண்பையும், குடிச்சிறப்பையும், பகைவரின் இழிவையும், பகை நாடுகளின் அழிவையும் பலவாறு பாடியுள்ளார்கள் என்பது தெளிவாகின்றது.

வேந்தர்கள் புலவரை அன்புடன் பேணுதல், புலவரின் கிழிந்த ஆடையைக் களைந்து விட்டுப் புது ஆடையினையும், பழந்தேறலையும் கொடுத்தல், புலவரைக் கனிவுடன் நோக்கல், ஏழடி பின்சென்று புலவரை வழியனுப்புதல் முதலியவை பெற முடிகின்றது.

புலவர்கட்கு மன்னர்கள் கவரி வீசல் போன்ற அன்புச் செயல்களைச் செய்ததோடு பெரும் பொருளைப் பரிசாக அளித்தனர். புவலர்கள் அவர்களிடம் நன்றியோடு நடந்து கொண்டனர். தம் பாடல்களில் அவர்கள் பெயரை நிலைப்பெற செய்தனர் என்பதைக் காண முடிகின்றது.

## ப ள்றெண் விளக்கம்

1. *புறம்., 14:1-11.*
2. *மேலது., 19:5-7.*
3. *மேலது., 151:4-9.*
4. *மேலது.,183:7.*
5. *மேலது., 50:14-15.*
6. *மேலது., 126:12-13.*
7. *மேலது., 53:11-12.*
8. *மேலது., 174:10.*
9. *மேலது., 158:12-13.*
10. *மேலது., 235:13.*
11. *மேலது., 202:12.*
12. *மேலது., 125:14-20.*
13. *மேலது., 53:3-13.*
14. *மேலது., 43.*
15. *மேலது., 197:16.*
16. *மேலது., 148:5-7.*
17. *மேலது., 122:1-2.*
18. *மேலது., 140.*
19. *மேலது., 367:15-19.*
20. *இரா.தண்டாயுதம், சங்க இலக்கியம், ப.1450.*
21. *புறம்., 66:4-8.*
22. *மேலது., 65:9-12.*
23. *பதிற்., 78:8-9.*
24. *புறம்., 230:1-11.*
25. *மேலது., 217.*
26. *இலக்கியம் காட்டும் இணையற்ற நண்பர்கள், ப.63.*

27. புறம்., 201:5-6.

28. பதிற்., 7ம் பதிகம்.

29. புறம்., 236:10-12.

30. மண்ணும் மனித உறவுகளும், ப.80.

31. புறம்., 221:8-10.

32. மேலது., 222:1-4.

33. மேலது., 223:3-6.

34. தமிழர் சால்பு, பக்.57-58.

35. மேலது., 58:24-28.

36. மேலது., 109:2.

37. மேலது., 110:1.

38. மேலது., 116:18.

39. மேலது., 115:5.

40. மேலது., 46: 1-8.

41. மு.வரதராசனார், புலவர் கண்ணீர், ப.80.

42. புறம்., 213:15-19.

43. மேலது., 47.

44. மேலது., 171:12-13.

45. மேலது., 175: 1-2.

46. மேலது., 5:5-9.

47. பதிற்., பதிகம்.6.

48. மேலது., 29: 25-26.

49. மேலது., 34:5-7.

50. புறம்., 367:10-11.

51. மேலது., 195:6-7.

52. மேலது., 194:6-7.

53. மேலது., 29:11-12.

54. மேலது., 143:13-15.

55. புறம்., 144:1.

56. மேலது., 145:7-10.

57. மேலது., 146:7-11.

58. பதிற்., 81:31-32.

59. புறம்., 147:2-8.

60. மேலது., 36:9-13.

61. பொருந., 166.

62. புறம்., 54:2-4.

63. பொருந., 150-151.

64. மேலது., 79-96.

65. மேலது., 235:10-14.

66. மேலது., 73-78.

67. கலிங்கத்துப் பரணி, 196.

68. விக்கிரம சோழனுலா, 13-14.

69. உ.வே.சா., புறநானூறு மூலமும் உரையும், ப.177.

70. புறம்., 13:8-9.

71. இளங்குளம், குஞ்ஞன் பிள்ளை, பண்டைய கேரளம், ப.44.

72. புறம்., 184:5-11.

73. கோ.கேசவன், மு.நூ., ப.51.

74. மு.வரதராசனார், தமிழ் நெஞ்சம், ப.26.

75. புறம்., 197:13-18.

76. மேலது., 210:1-4.

77. பதிற். எட்டாம் பத்து. பதிகம்.

78. புறம்., 198:1-23.

79. மேலது., 196:1-15.

80. மேலது., 55:17-21.

81. மேலது., 9:10-11.

82. மேலது., 367:15-16.

83. புறம்., 34:20-23.

84. மேலது., 56:21-24.

85. பதிற்., 88:37-38.

86. மேலது., 63:20-21.

87. புறம்., 18:4-6.

88. பதிற்., 90:51-54.

89. மேலது., 14:19-22.

90. மேலது., 15:24.

91. மேலது., 20:1-5.

92. புறம்., 212:1-10.

93. பதிற்., 20:26-27.

94. புறம்., 173:1.

95. மணி., 20:17-18.

96. மதுரை. 778-782.

97. உ.வே.சா., சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப.17.

98. மு.வரதராசனார், தமிழ் நெஞ்சம், பக்.41-42.

99. ஜி.சுப்பிரமணியப்பிள்ளை, தமிழ் உள்ளம், ப.67.

100. ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.30.

## இயல் 4

# சங்கப் புரவலர் – புலவரின் மாண்புகள்

### 4.0. முன்னுரை

சங்க காலத் தமிழகம் பரந்துபட்ட நிலப்பரப்பைத் தன்னகத்தே கொண்டதாக விளங்கியது. அங்கே பண்டைய மன்னர்களும், புலவர்களும் பெரு மதிப்புப் பெற்று மாண்பாளராகத் திகழ்ந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன.

புலவர்களின் புலமைத் திறத்தினை வியந்து சிறப்பளித்துப் போற்றியவர்களாக வேந்தர்கள் விளங்கினர். சங்க காலத் தமிழகத்தில் வாழ்ந்த கற்றுத்துறைபோகிய அறிஞர்கள் புலமையாளர்கள் அல்லது புலவர் என்று அழைக்கப்பட்டனர்.

புலவர்கள் தங்களின் அறிவாற்றலை, நாடாளும் வேந்தர்களின் வாயிலாக மக்களின் நலனுக்கும் உயர்வுக்கும் பயன்படுத்தினர். தங்களின் கூர்ந்த அறிவாற்றலினாலும்; வருவது உரைக்கும் திறத்தினாலும்; உயரிய சிந்தனையினாலும் வேந்தர்களிடம் பெருமதிப்புப் பெற்றிருந்தனர். வேந்தர்களும் புலவர்களும் தங்களது ஒழுக்கத்தினாலும் சான்றாண்மைக் குணத்தினாலும் மக்களிடம் மிகுந்த நன்மதிப்புப் பெற்று மாண்பாளராகத் திகழ்ந்தமையை இவ்வியல் ஆராய்கிறது.

### 4.1. மாண்பு சொல் விளக்கம்

மாண்பு என்ற சொல் உன்னதத் தன்மை, சிறப்பு, பெருமை, மதிப்பு, சீர்மை (Dignity and honour) என்ற பொருள்களைச் சுட்டுகிறது. மாட்சிமை - என்பதன் அடிப்படையிலான மாண் - என்ற வேர்ச்சொல்லில் இருந்து மாண்பு - என்ற சொல் வந்துள்ளது.

இல்லவள் மாண்பானால்[1]

என்ற குறளில் மாட்சிமை, மேன்மை என்ற பொருளில் மாண்பு என்ற சொல் வந்துள்ளதைக் காணமுடிகின்றது.

அரன் மிடற்றின் மாண்பதென்றே[2]

என்பது திருக்கோயிலூர் புராணத்தில் அழகும் செம்மையும் என்ற பொருளில் மாண்பு என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

மானம் என்பது உயிரினும் மேலான பண்பாகிய தலைமையைக் குறிப்பது; ஒருவரது மானம் அவரது நாணயம், நேர்மை, நம்பிக்கை, உறுதி, சொன்ன சொல் காக்கும் தன்மை, ஒழுக்கத்திலிருந்து பிறழா உறுதி, குலத்திற்கு உரியதாகக்கூறப்படும் தன்மையைக் கட்டிக் காத்தல் போன்றவை சார்ந்ததாகும்.

மானம் கெட வருவது எத்தகு உயர்வாக இருந்தாலும் அது தனக்கும், தன் குடும்பத்திற்கும், தான் சார்ந்த குலத்திற்கும் ஒட்பம் தருவதாகாது என்று விலக்கித் துன்பமே ஆயினும் வலியத் தழுவ விழைவதும், மனச் சாந்தி பெறுவதும் மானத்தின் பாற்பட்டதாகும்.

தமிழர் மானம் என்று இனமானம் பேசுவதும் இவ்வினத்திற்குரிய சீர்மை கெடாமல் போற்றுவதையே குறிக்கும். மாண்பு என்பதோ மாட்சியமைப் பண்பை, பெருமிதத்தை, நன்மையை, சீர்மையை, மேன்மையை, உயர்வை, உன்னதத்தை, பெருமையைக் குறிப்பதாகும். இதனால் மாண்பு என்ற சொல்லுக்கு இணை, நிகர் மாண்பு என்ற சொல்தான் என்று சுருக்கமாகக் கூறிவிட முடியும்.

**4.2. புரவலர்**

பண்டையக் கால வேந்தர்கள் புரவலராகவும், புலமை மிக்கவராகவும் திகழ்ந்துள்ளனர். கொடையளிப்பதில் புரவலராகவும், மொழிப் பற்றினை உலகறியச் செய்யும் ஆற்றல் கொண்டவராகவும் விளங்கினர்.

கொடைத் தன்மையும், மொழிப் பற்றும் வேந்தர்களின் மாண்பு நிலையினை விளக்குவதில் முதலிடம் பெற்றிருந்தன என்பதை அறியலாகிறது.

பண்டைத் தமிழரசர் தம்மை நாட்டை ஆளும் தலைவர் எனக் கருதாது, குடிகளைக் காக்கும் தந்தையர் போன்றே கருதினர். அதனால் காவலர் என்றும் புரவலர் என்றும் பெயர் பெற்றனர்.

*அரசனாலும், அரசியல் அலுவலர்களாலும், பகைவராலும், கள்வர், கொள்ளைக்காரராலும், காட்டு விலங்குகளாலும் நேரக்கூடிய ஐவகைத் துன்பத்திலிருந்து குடிகளைக் காத்து. இன்பமாகிய நிழலைத் தருபவன் என்னும் கருத்திலேயே வெண்கொற்றக் குடை அரசச் சின்னங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டது.*

ஞாயிறு சுமந்த கோடு திரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவு நின்றாங்கு
கண் பொர விளங்கு நின் விண்பொரு வியன்குடை
வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய
குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ![3]

*என்பது வெள்ளைக்குடி நாகனாரின் கருத்தாகும்.*

*மழை பொய்ப்பினும் வருவாய் குன்றினும் இயற்கை செயல்கள் நிகழினும் மக்கள் அரசனையே பழித்தனர் என்பதை,*

மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக்கண் அகல் ஞாலம்[4]

*என்ற வெள்ளைக்குடி நாகனாரின் வரிகள் உணர்த்துகின்றன. அரசன் தங்களை இயற்கையில் நிகழும் துன்பத்திலிருந்தும், வறுமை முதலிய துன்பத்திலுந்தும் பாதுகாக்க வேண்டும் என மக்கள் எண்ணினர். 'குட்டியைப் பாதுகாக்கும் புலி போல' அரசன் மக்களைக் காத்தான் என்பதை,*

புலி புறங்காக்கும் குருளை போல
மெலிவுஇல் செங்கோல் நீ புறங்காப்ப[5]

*என்ற இடைக்காடனாரின் வரிகள் நமக்கு உணர்த்துகின்றன.*

*மக்கள், அரசர் இருவரும் ஒருவரையொருவர் சார்ந்து விளங்கினர். அரசனது குணங்களான வீரம், கொடை, காதல் மூன்றும் பழந்தமிழ் இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றன. அரசர்தம் கல்வியும், கலை ஆர்வமும் பெரியோரின் துணையால் ஏற்படுத்தப்பட்டன. இறைமை, கோன்மை போன்ற சொற்கள் அரசனது இயல்பை உணர்த்துகின்றன.*

செங்கோலனே அரசனாகக் கருதப்பட்டான். நிர்வாகத்தில் அரசனே தலையாய இடம் வகித்தான். அரசுப் பொறுப்பினைத் தன் தோற்களில் அரசன் சுமக்கிறான் என்று நம்பப்பட்டது.

தன் வீரத்தினால் உட்பகை வெளிப்பகைகளை ஒடுக்குபவனாக, கொடையால் புலவர்களுக்குப் புரவலனாக, அன்பினால் மக்களை ஆள்பவனாக அரசன் திகழ்கிறான்.

மக்கள் எல்லா நல்ல செயல்களுக்கும், தீய செயல்களுக்கும் அரசனே காரணமானவன் என்று நம்பினர். சங்க காலத்தில் இயற்கை நிகழ்வுகளுக்குக் கூட அரசனைப் புகழ்வதும், பழிப்பதும் என்ற இவ்விரு செயலும் மக்களிடையே காணமுடிகின்றது.

**4.3. வேந்தர்களின் தமிழ்ப்பற்று**

பழந்தமிழ் வேந்தர் தமிழ் உணர்வு மிக்கோராக விளங்கினர். இத்தமிழ்ப் பற்றே இவர்களைத் தமிழ்ப் புலவர்பால் பெரும் மதிப்பு கொள்ளச் செய்தது.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையினைக் காணப் புலவர் மோசிகீரனார் சென்றார். வழிநடைக் களைப்பின் காரணமாக அங்கிருந்த முரசு கட்டிலில், அரசு முரசு கட்டிலென அறியாது துயின்றார். முரசு கட்டிலில் துயில் கொண்டிருந்த புலவரைக் கண்ணுற்றான் பெருஞ்சேரல் இரும்பொறை.

வேந்தனின் போர் முரசு, வெண்கொற்றக்குடை, காவல் மரம் முதலியவை வழிபடுவதற்குரிய மதிப்பைப் பெறுவன. முரசு கட்டிலில் உறங்குபவர் தமிழ்ப்புலவர் மோசிகீரனார் என அறிந்ததும், இரும்பொறையின் சினம் மாறியது.

புலவர் மேலும் உறங்கும் பொருட்டுக் கவரி கொண்டு அரசன் வீசி நின்றான். விழித்தெழுந்த புலவர் வேந்தனின் செயலைக் கண்டார். அறியாது செய்த தவறினை உணர்ந்தார். தவறு செய்த தம்மை வாள் கொண்டு வெட்டத் துணியாது, கவரி கொண்டு வீசிய காவலனின் செயலை நினைந்தார். வேந்தனால் செய்யப்பட்ட சிறப்பு தமக்கு செய்யப்பட்டது என்பதை விட தாம் கற்ற தமிழுக்குச் செய்யப்பட்டது

என்பதையும் உணர்ந்தார். தமிழுக்குள்ள பெருமையை உணர்ந்தார். அத்தமிழின்பால் வேந்தன் கொண்டிருந்த அளப்பரிய பற்றை நினைந்து,

மண்ணி வாரா அளவை, எண்ணெய்
நுரை முகந்தன்ன மென் பூஞ்சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுதர
இருபாற்படுக்கும் நின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும். நல் தமிழ் முழுது அறிதல்
அதனோடும் அமையாது அணுகவந்து நின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சி தண்ணென
வீசியோயே . . .[6]

என்று மோசிகீரனார் மன்னனை வாழ்த்தினார்.

`தமிழ் முழுமையும் அறிந்து உணர்ந்து, மனம் பண்பட்டு, உணர்வு பெற்றமையாலே வாள் கொண்டு எம்மை ஒறுக்காது, கவரி கொண்டு வீசிய நின் செயலும் சாலும்' எனப் புலவர் குறிப்பிடுவது இங்கு உணரத்தக்கது.

அரசன் புலவர்க்கு ஆற்றிய அருந்தொண்டும்; புலவர் அரசர்பால் கொண்ட கெழுதகை அன்பும்; தனி நட்பைப் பற்றியன அல்ல என்பது மறுத்தல் ஆகாது. புலவரை வாளுக்கு இரையாக்காது, அரசன் கவரி வீசியது தன் நண்பர் என்பது அல்ல: அவர் தமிழறிந்த புலவர் என்பது என்பதாலேயே! அவ்வாறே அரசனைப் பாராட்டியதும் தம் நண்பன் என்னும் உரிமை பற்றி அன்று; அவனது தமிழ் விரும்பும் தண்ணிய நெஞ்சம் பற்றியதாகும். இருவர்க்கும் இடையே நெஞ்சம் பிணிக்கும் தொடர்பை ஆக்கியது நல்தமிழ் என்ற ஒன்றேயாகும். இருவரும் அந்த நற்றமிழைப் போற்றிய காரணம் ஏதோ மூடநம்பிக்கை அன்று. ஈன்று புறந்தந்த அன்னையைப் போற்றும் அறிவுடை மக்களைப் போல புலவரும் அரசரும் அறிவைப் புறந்தந்து வாழ்வைப் பீடுற உயர்த்திய தமிழன்னையைப் போற்றினர்[7]

என மு.வரதராசனாரின் கருத்து இதனைக் குறிப்பிடுகிறது.

தமிழர்கள் மொழியுணர்வு மிக்கிருந்தமையை இலக்கியங்கள் காட்டுகின்றன. மூவேந்தரைக் குறிப்பிடும் பொழுது அவர்களைத் தமிழாகவே குறிப்பிடுகின்றன.

தமிழர் வாழ்வு அவர்தம் மொழியோடு பின்னிப் பிணைந்திருந்தது. மூவேந்தரும் போரிட்ட நிலையினை,

தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து[8]

என்று குடபுலவியனார் கூறிச் செல்கிறார்.

### 4.3.1. தமிழாய்ந்த தலைமக்கள்

தமிழாய்ந்த தலைமக்களாக ஆட்சிக்குரியோர் விளங்கியதையும், அவ்வாறே ஆட்சிப் பொறுப்பில் இருப்போர் விளங்க வேண்டும் எனப் புலவர் பெருமக்கள் விரும்பியதையும் சங்க கால மாண்பாக அறியமுடிகிறது.

மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவர்[9]

என்னும் பாடலடிகள் தமிழ்மொழிக்கும் தமிழ்நாட்டை ஆண்டோர்க்கும் உள்ள உறவை உணர்த்துகின்றன.

தமிழுலகம் பலர்க்கு உரிமையுடையதாகிய போதும், அது இம்மூவர்க்கு மட்டுமே உரிமையுடையது என்று கூறும் வழக்கம் அக்கால மக்களிடையே பரவி இருந்ததை,

பொதுமை சுட்டிய மூவருலகம்[10]
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு[11]
தமிழ்கெழு மூவர் காக்கும்[12]

என்னும் இலக்கிய வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றன.

> பழந்தமிழ்க் கிளை இனங்களைக் குறிப்பிட்டு, அவற்றில் சிறந்த விளங்கிய மாரான்மர், திரையர், வானவர் ஆகிய மூன்று தமிழ் மரபினரும் பாண்டிய சோழ, சேர அரசுகளென்று பின்னாட்களில் வழங்கிய அரசுகளை நிறுவினர்.[13]

இவ்வாறு தோன்றிய மூவேந்தர் அரசுகளின் முதல் வேந்தர் யார் என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. தொல்காப்பியனார் காலத்தில் வாழ்ந்த மூவேந்தரைப் பற்றி ஆராய்ந்த இராகவையங்கார்,

> தொல்காப்பியனார் காலத்தில் ஆட்சிபுரிந்த பாண்டியன் முடத்திருமாறன் எனவும், சேரன் செங்குட்டுவன் எனவும் சோழன் இவனெனத் துணிய முடியவில்லை எனவும் கூறுவர்.[14]

### 4.3.2. தமிழ்ச் சங்கம்

*சேர, சோழ வேந்தர்களைக் காட்டிலும் பாண்டியர் பற்றித் தொன்மையான இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாகவுள்ள பாண்டிய வேந்தர் எண்பத்தொன்பதின்பர், கடல் கொள்ளப்பட்ட தென் மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்து, முதற்சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், வெண்தேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாகவுள்ள ஐம்பத்தொன்பதின்மர், கபாடபுரத்திலிருந்து ஆட்சிபுரிந்து இரண்டாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி ஈறாகவுள்ள நாற்பத்தொன்பதின்மர் இப்பொழுதுள்ள மதுரையில் இருந்து ஆட்சி புரிந்து மூன்றாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், இத்தமிழ்ச் சங்கங்களில் பாண்டிய வேந்தர் முறையே எழுவர், ஐவர், மூவர் எனக் கவியரங்கேறினர் என்றும் இறையனார் அகப்பொருள் உரை இயம்புகின்றது.*

> சங்கம் இருந்து நிலைபெற்றதையும், பின்னர்க் கடல்கோளால் தென்மதுரை அழிவுற்றதையும், கடல்கோளில் அழிவுற்ற தமிழ் நாட்டுப் பகுதிகளையும் ஆய்வாளர்கள் உரைத்துள்ளனர்.[15]

*பாண்டியர் நிலப்பரப்பு அழிவுற்றதை,*

> ப·றுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள[16]

*எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.*

> சங்கம் என்ற அமைப்பு இல்லையென்றும் அவ்வாறு உரைப்பது உண்மைக்குப் புறம்பானது என்றும் சிலர் உரைத்தனர்.[17]

*அவ்வாறே,*

> புலவர் பலர் கூடி, ஆராயும் சங்கம் என்றோர் அமைப்பு இருந்தது என்றும் அறிஞர் கருத்துரைத்துள்ளனர்.[18]

> ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
> மாங்குடி மருதன் தலைவ னாக
> உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
> புலவர் பாடாது வரைகவென் னிலவரை[19]

*என்ற தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பாடல் வரிகளால் இதனை அறியமுடிகின்றது.*

*பாண்டியன் நெடுஞ்செழியன் பாடுடைத் தலைவனாகக் கொண்டு, மதுரைக் காஞ்சி பாடிய மாங்குடி மருதனார் தம் பாடல் வரிகளால் சங்கம் இருந்ததைக் கூறிச் செல்கிறார்.*

தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவி னெடியோன்[20]

*என்ற பாடல் வரிகளால் இக்கருத்து உணர்த்தப்படுகிறது. இதனைச் சங்கம் இருந்ததை வலியுறுத்தும் ஒரு சான்றாகக் கொள்வர்.*

*தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனாரும்,*

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசான்[21]

*என உரைத்திருப்பதிலிருந்தும் பாண்டியர் அவையில் புலவர் கூடியிருந்து தமிழாராய்ந்தனர் என்றும், நூல்கள் அரங்கேற்றப் பெற்றன என்றும் அறியமுடிகின்றது.*

*சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தச் சிறப்புக் கருதியே பழந்தமிழ்ப் புலவர்கள் தமிழ் வளர்த்த பாண்டியரையும், அவர்தம் தலைநகரமாகவும், தமிழ் நூல்களின் தகுதியினை ஆராயும் நகரமாகவும் விளங்கிய மதுரையைக் குறிப்பிடும்பொழுது தமிழோடு இணைத்தே வழங்குகின்றனர் எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் புலப்படுத்துவதை,*

தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே[22]

தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரை[23]

தமிழ் வையைத் தண்ணம் புனல்[24]

புலவர் செந்நாப் பொருந்திய நிலப்பிற

பொதியிற் றென்றல் போலா தீங்கு

மதுரைத் தென்றல் வந்தது காணீர்[25]

எனப் பகர்வதிலிருந்து சேரருக்கும் சோழருக்கும் இல்லாத தமிழ் வளர்த்த பெருமை பாண்டியருக்கு உண்டு என்பதை அறியமுடிகிறது.

### 4.4. புரவலர் மாண்புகள்

சங்க கால புரவலராகிய மன்னர்கள் மக்களைக் காப்பது மட்டுமே தான் கடமை என்று எண்ணாமல், அவர்களின் துயரினைத் துடைத்தும், கொடை அளித்தும் இன்ன பிற மாண்புகளால் சிறந்து விளங்கினர்.

#### 4.4.1. மன்னனும் மக்களும்

சங்ககாலத் தமிழகம் கோனாட்சியைத் தவிரப் பிறவகை ஆட்சியை அறிந்திருக்கவில்லை. சமூகத்தின் தலைவனாக மன்னனையே சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. இதனை,

மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்[26]

என்ற மோசிகீரனாரின் வரியால் காணலாம். இது மன்னனின் தலைமையின்றிச் சமுதாயம் சீராக இயங்க முடியாது எனக் கண்டு கொண்டதன் விளைவாகத் தோன்றிய கூற்றாகும்.

சமூகத்தின் நிலைபேறு பெரிதும் மன்னனையே சார்ந்திருந்த தன்மையை மன்னன் உயிராகவும், சமூகம் உடலாகவும் உருவகம் செய்யப்பட்டமை கொண்டு அறியலாம். மன்னன் இல்லாத நாடு குழப்பமும் துன்பமும் மிகுந்ததாகவே விளங்கியது என நல்லந்துவனார் கூறியதை,

குடைநிழ லாண்டாற்கும் ஆளிய வருவாற்கும்

இடைநின்ற காலம்போல் இறுத்தந்த மருண்மாலை[27]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

மன்னனுக்கும் மக்களுக்கும் உள்ள உறவைத் தந்தை தாயார்க்கும் பிள்ளைகளுக்கும் உள்ள உறவாகக் கூறுவதுண்டு. புலவரும் மறக்குடிப் பெண்டிரும் மன்னனை எந்தை எனக் குறிப்பிடுகின்றனர்.

எந்தையோடு கிடந்தோர்: எம்புன் தலைப் புதல்வர்[28]

எனக் குடபுலவியனாரின் வரி உரைக்கின்றது.

அரசனை இழந்த நாடு அல்லல் உறுவதற்குத் 'தாயை இழந்த குழந்தை' அல்லல் உறுவதை உவமையாகக் கூறும் நிலை அக்காலத்தில் காணப்பட்டது எனப் பரணர்,

தாய்இல் தூவாக் குழவி போல

ஓவாது கூஉம் . . . . .[29]

இப்பாடலில் சுட்டுகிறார்.

நாட்டைப் பேணிக் காத்தற்குக் குழந்தையைப் பேணி வளர்த்தலை,

குழவி கொள்பவரின் ஓம்புமதி[30]

என்று நரிவெரூஉத் தலையார் உவமை கூறியுள்ளார். இது போன்ற இலக்கியச் சான்றுகளால் மன்னனைத் தாயாகவும், தந்தையாவும் கருதி பண்டையத் தமிழ் மக்கள் வாழ்ந்தனர் என்பது அறியலாகிறது.

**4.4.2. முடிசூடியாளும் நிலை**

சேர சோழ பாண்டியர் ஆகிய மூவர் மட்டுமே முடி சூடியாளும் நிலையெய்தினர். வேந்தர் என்னும் பெயர் இவர்க்கு மட்டுமே உரித்தானது என ஆவூர்கிழார் குறிப்பிடுவதை,

தண்பணை ஆளும் வேந்தர்[31]

என்னும் பாடல் வரியால் அறியமுடிகிறது.

புலவர் பெருமக்கள் ஆட்சியாளரை மன்னன், இறை, இறைவன், அரசு, அரசன், வேந்து, வேந்தன், கோ, கோன், காவலன், புரவலன், கிழவன், பொருநன் எனப் பல பெயர்களால் குறிப்பிடுகின்றனர்.

மறத்தகை மன்னன்[32]

என்ற வரியால் மன்னன் என்று அழைக்கப்பட்டது புலனாகிறது.

தான் வேண்டியாங்குத் தன் இறை உவப்ப[33]

என்ற காரிகண்ணனாரின் வரியால் இறை எனக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

இறைவன் தாட்கு உதவாதே[34]

என்ற குடபுலவியனாரின் வரியால் இறைவன் என மன்னனை அழைப்பதை அறியமுடிகின்றது.

வடபுலத்து அரசே[35]

என்ற கோவூர் கிழாரின் வரியால் அரசு எனக் குறிக்கப்பெறுவதைச் சுட்டலாம்.

அரசன் வேந்து எனக் குறிக்கப்படுகூதை,

மல்லல் மூதூர் வய வேந்தே![36]

என்ற குடபுலவியனாரின் வரியால் தெளியமுடிகிறது.

பாடல் சான்ற விறல் வேந்தனும்மே[37]

என்ற இளவெயினி வரியால் வேந்தன் என ஆட்சியாளன் குறிக்கப் பெறுவதைக் காணமுடிகிறது.

'கோ' என்ற சொல் தலைமைப் பண்பினை விளங்கும் பொருட்டு அழைக்கப்பட்டதை,

வரையா ஈகைக் குடவர் கோவே![38]

என்னும் குறுங்கோழியாரின் வரியால் உய்த்துணர முடிகிறது.

மன்னன் முதலாக வேந்தன் வரை சொல்லப்படுபவை அனைத்து சொற்களும் சேர சோழ பாண்டியர் என்னும் மூவர்க்கும் மட்டுமே சிறப்பாக உரியவையாகும்.

### 4.4.3. மரபுவழி உரிமை

பண்டைத் தமிழ் மன்னன் மரபுவழி உரிமையால் அரசு பெற்றான். அது ஊழின் உதவியால் கிடைப்பதாகக் கருதப்பட்டது. இதனை,

பால்தரவ ந்த பழவிறல் தாயம்[39]

என்ற நலங்கிள்ளியின் வரிகள் உணர்த்துகின்றன. எந்த தகுதிபாடு இருந்தாலும், இல்லாவிட்டாலும் மன்னர் குடியிற் பிறந்த தகுதியொன்று மட்டுமே கொண்டு ஒருவன் நாட்டுக்குத் தலைவனாகும் நிலை இருந்தது.

இவரைத்தான் தலைவனாக்க வேண்டுமெனக் குடிகள் வற்புறுத்த உரிமை இல்லை. தவறாக ஆள்பவனை யாரும் பதவியிறக்கம் செய்ய முடியாது. ஒருவன் தான் இறக்கும் காலம் வரை யாருடைய குறுக்கீடுமின்றி ஆளப் பண்டைய கோனாட்சி இடமளித்தது. ஆனால் மன்னன் தவறாக ஆண்ட போது மக்கள் பழி தூற்றினர் என்பதனை,

கொடியன் எம் இறை எனக் கண்ணீர் பரப்பி
குடிப ழி தூற்றும் கோலேன் ஆகுக[40]

என்ற நெடுஞ்செழியனின் வரிகள் உணர்த்துகின்றன.

மன்னனின் கொடுங்கோல் ஆட்சியைப் பொறுக்காது மக்கள் கண்ணீர் விடுவதை,

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை[41]

என்று வள்ளுவர் தம் குறட்பாவில் குறிப்பிடுகிறார். இவ்வாறு பழி தூற்றவும், கண்ணீர் விடவும் முடிந்ததே தவிர மன்னனை விலக்க அக்காலத்தில் இடமில்லாதிருந்தது.

மன்னனுக்கிருந்த மேலாண்மையின் மிகுதியையும், குடிகளின் செயலற்ற தன்மையையும் மேற்காணும் சான்றுகள் விளக்குகின்றன. மன்னனின் செயலைக் கட்டுப்படுத்தும் உரிமை யாருக்கும் இல்லை என்பதை,

மருந்தின்று மன்னவன் சீறில்[42]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றன.

'ஆறு போவதே கிழக்கு அரசன் செய்வதே வழக்கு' என்னும் பழமொழி மன்னவன் முடிவே இறுதியானது என்பதனைக் காட்ட எழுந்ததேயாகும்.

### 4.4.4. காத்தலே முதன்மைப் பணி

மக்களின் உயிரையும் உடைமைகளையும் பிற நலன்களையும் காத்தலே மன்னனின் தலைமையான கடனாகக் கருதப்பட்டது. காத்தற் கடமைக்கு இருந்த

சிறப்பைக் காவலன், புரவலன் என்னும் பெயர்கள் காட்டுகின்றன. குட புலம் காவலர், குணபுலம் காவலர் என்றவாறு மன்னர் பாராட்டப்பட்டனர். காவலுக்குரிய நாடும் காவலெனப்பட்டது. நாடாளும் செயல் "சாகாடு உகைத்தல்" எனச் சிறப்பிக்கப்பட்டது. இதனை,

கால் பார் கோத்து, ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு கைப்போன் மாணின்[43]

என்னும் இளந்திரையனின் வரியால் தெளியமுடிகின்றது.

திருவள்ளுவரும் தம் இறை மாட்சி அதிகாரத்தின் முதல் குறளில் முறை செய்து காப்பாற்றும் மன்னவன் எனக் காத்தல் தொழிலுக்கு முதன்மை அளித்தார். இதனை,

படைகுடி கூழ் அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு[44]

என்னும் வள்ளுவரின் குறட்பாவால் உய்த்துணர முடிகின்றன. இடைக்காலத்து அரசியலறிஞரும் புலவருமான சேக்கிழாரும் மன்னனைக் காவலனாகவே சித்திரித்துக் காட்டியுள்ளார்.

மாநிலம்கா வலனாவான் மன்னுயிர் காக்குங் காலைத்
தாதைனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்கள் தம்மால்
ஆபையம் ஐந்தும்தீர்த் தறங்காப்பான் அல்லனோ[45]

என்ற சேக்கிழரின் வரிகள் இக்கருத்தை மெய்ப்பிக்கின்றன.

வெளிநாட்டவரின் படையெடுப்பினின்றும் மக்களைக் காத்தல், உள்நாட்டில் சமூகத்திற்கு தீங்கினை விளைவிக்கும் மனிதர்களால் நேரும் இடையூறுகளை நீக்கி அமைதி காத்தல் என்னும் இரு பணிகள் மன்னரின் பணிகளாகும்.

### 4.4.5. போராட்டமே வாழ்வு

பண்டைத் தமிழகத்தில் இடையறாத போர்களுக்கு இடையே மக்கள் வாழ வேண்டியிருந்தது. படையெடுத்துச் சென்றவர் பகைவர் நாட்டில் புரியும் மறச்செயல்கள் பலவாக இருந்தன. ஊர்களையழித்தல், நீர்நிலைகளைப் பாழாக்குதல்,

விளை வயல்களைச் சிதைத்தல், மன்றங்களை அழித்தல் ஆகிய செயல்கள் இவற்றில் சிலவாகும்.

திருமாவளவன் தன் பகைவர் தேயங்களிற் செய்தனவாக அறியப்படும் மறச் செயல்கள் அக்கால நிலைமையை அறியப்பெருந்துணை செய்வனவாகும். முதலைகள் வாழுமளவுக்கு ஆழமான பொய்கைகள் பாழாயின; வயல்களும் குளங்களும் தன் நிலையில் மாறின. அவை மான்கள் உகளும் காடுகளாயின. வம்பலர் தங்கும் இடங்கள் எல்லாம் யானைகள் உறையும் இடங்களாயின. கோடியர் ஆடிப்பாடி மகிழ்வித்த ஊர் மன்றங்கள் பேய்களும், நரிகளும், கோட்டான்களும், ஆண்டலையும் உலவும் இடங்களாயின என்று போராட்ட வாழ்வின் நிலையினைப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

முனைகெடச் சென்று முன்சமம் முருக்கித்
தலைதவச் சென்று தன்பணை எடுப்பி
. . . . . . . . . . . . . . . . . . .
வளைவாய்க் கூகை நண்பகல் குழறவும்
அடுங்கடி வரைப்பின் ஊர்கவின் அழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான் மருங்குற[46]

மக்கள் குடியெர்ந் தோடத் தக்க நிலையும் இருந்தது. பகைமுகத்து ஊர்கள் கண்ணுறக்கமின்றி வாட நேர்ந்தது எனப் புலவர்கள் கூறுவதை,

பகை முக வூரிற் றுஞ்சா தோவே[47]

என்னும் பாடல் வரியால் அறியமுடிகின்றன.

இத்தகைய அழிவுச் செயல்கள் நடந்த அக்காலத்தில் புறப்பகை கடிதற்கு முதன்மை அளித்தமை இயல்பேயாகும். மன்னரின் செங்கோல் மாட்சியைப் பாராட்டும் புலவர் பெருமக்கள் அவர்தம் பகைவரை வென்று அவர் நாடுகளில் செய்த மறச் செயல்களைப் பாராட்டி, அத்தகைய செயல்கள் தம் நாடுகளில் நடவாது காத்த திறத்தினைப் புகழ்ந்து பேசுகின்றனர்.

செங்குட்டுவன் கோதையின் நாட 'புலி துஞ்சும் வியன்புலம் போலப்' பகைவரால் நெருங்க முடியாதது எனப் புலவர் பாராட்டியுள்ளனர் என மதுரைக் குமரன் புலப்படுத்துவதை,

நெடுமொழி மன்னர் நினைக்கும் காலை
பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி
மாசு உண் உடுக்கை. மடிவாய். இடையன்
சிறு தலை ஆயமொடு குறுகல் செல்லாப்
புலி துஞ்சு வியன் புலத்தற்றே
வலி துஞ்சு தடக்கை அவனுடை நாடே[48]

என்னும் வரிகளில் காணமுடிகிறது.

யானைக் கட்சேய் மாந்தரஞ்சேலிரும் பொறை மக்கள் சோறுபடுக்கும் தீயையும், ஞாயிற்றின் தேறலையும் தவிரப் பிற தீயையும் தேறலையும் அறியாரென்றும், திருவில் அல்லது கொலை வில்லையும் நாஞ்சிலல்லது படையையும் அறியாரென்றும், கருக்கொண்ட பெண்கள் விரும்பி உண்பதல்லது அவன் மண்ணைப் பகைவர் உள்ள இயலாதென்றும் குறுங்கோழியார் கிழார் பாராட்டியுள்ளார்.

சோறு படுக்கும் தீயொடு
செஞ் ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிது தெறல் அறியார், நின் நிழல் வாழ்வோரே;
திருவில் அல்லது கொலை வில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்;
திறன்அறி வயவரொடு தெவ்வர் தேய, அப்
பிறர் மண் உண்ணும் செம்மல்! நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது
பகைவர் உண்ணா அரு மண்ணினையே[49]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகின்றது.

மன்னர்தம் நாட்டைக் காக்கப் பல ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். அவற்றுள் முதன்மையானது படையைப் பெருக்குதலேயாகும். பேரரசரிடம் நால்வகைப் படைகளும் இருந்தன என இளநாகனார் உரைப்பதை,

கடுஞ் சினத்த கொல்களிறும்; கதழ் பரிய கலி மாவும்
நெடுங் கொடிய நிமிர்தேரும், நெஞ்சு உடைய புகன்மறவரும், என

நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட

அறநெறி முதற்றே அரசின் கொற்றம்[50]

என்னும் பாடல் வரியால் காணமுடிகின்றன. சில மன்னர்களிடம் கடற்படையும் இருந்தது என்று வெண்ணிக் குயத்தினார் சுட்டுவதை,

நளி இரு முந்நீர் நாவாய் ஒட்டி

வளி தொழில் ஆண்ட உரவோன் மருக![51]

என்னும் பாடல் வரியால் அறியமுடிகின்றன. இதனால் படைக்கு இருந்த சிறப்பும் தேவையும் அதனைப் புலவர் பெருமக்கள் பாராட்டும் பாங்கினைக் கொண்டே உணரமுடிகிறது.

### 4.4.6. நீதி வழங்கும் முறை

பண்டை மன்னர் நீதி வழங்கற்கு உதவியாகச் சான்றோரைக் கொண்டிருந்தாரெனத் தெரிகின்றது. மன்னன்தன் அவையில் அறிவறிந்த சான்றோரை அமர்த்திக் கொள்வது மரபு எனப் பூதப்பாண்டியன் வஞ்சின கூற்றில் கூறியுள்ளதை,

அறம்நிலை திரியா அன்பின் அவையத்துத்

திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து

மெலிகோல் செய்தே னாகுக[52]

என்னும் பாடல் அடிகளால் காணமுடிகிறது.

உறையூரில் இருந்த அவை, முறைமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கிற்றெனப் புலவர் பாராட்டியுள்ளனர். இதனை,

மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து

அறங்கெட அறியா தாங்கு[53]

என்னும் பாடல் வரிகளால் தெளியலாம்.

முறைவேண்டுவோரும் குறை வேண்டுவோரும் மன்னனைக் காண்பதற்கு எவ்வகை இடையூறும் இருத்தலாகாது என்று வற்புறுத்தினர். இதனை,

முறை வேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்

வேண்டுப வேண்டுப வேண்டினார்க்க கருளி[54]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது. இந்நிலையையே எண்பதம் என்றும், காட்சிக்கெளிமை என்றும் குறித்தனர்.

காட்சிக்கு எளியனாயும், கடுஞ்சொல் தவிர்த்தவனாயும் மன்னன் இருப்பின் அவன் நிலம் பிறர் நிலத்தினும் சிறந்ததாகப் போற்றப்படும் என்பார் திருவள்ளுவர். இதனை,

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறும் மன்ன நிலம்[55]

என்னும் குறளின் வரியால் உணரமுடிகிறது.

முறைவேண்டி வருவோர்க்கு எளிதில் காட்சி வழங்கும் மன்னன் தான் வேண்டும் என்றும், அப்போது தான் உரிய காலத்தில் மழை பொழியும் என்பது அக்கால மக்களின் நம்பிக்கையாகும் என வெள்ளைக்குடி நாகனார் குறிப்பிட்டுள்ளார்.

முறைவேண்டு பொழுதிற் பதனெறியோ ரீண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற்றோரே[56]

என்னும் பாடல் வரிகள் இதனைச் சுட்டுகின்றன.

அரசின் சிறப்புமிக்க கடன் மக்களுக்குப் பாதுகாப்பளித்தல் என்றும் அத்துடன் அதன் கடமை முடிந்து விடுவதில்லை; மக்களின் பொருளாதார நலன், அறிவு நலன், ஆன்மீக நலன் ஆகியவற்றையும் கருத்திற்கொள்வது நல்லரசின் பண்பாகும் என இலக்கியங்கள் மூலம் தெளிய முடிகிறது.

### 4.4.7. அரசியல் கோட்பாடு

சங்க இலக்கியங்களில் காணப்படும் அரசியல் கோட்பாடு ஏட்டளவில் மட்டும் நின்றனவல்ல; இயன்ற வரையில் நடைமுறையிலும் பின்பற்றி வாழ்ந்தனர் என்பதற்கு மன்னர்களே புலவர்களாய் இருந்து பாடிய பாடல்கள் சான்றுகளாகும்.

மக்கள் இன்னலின்றி வாழுமாறு செங்கோலனாக வாழ விரும்பிய முறை திறம்பாத ஆட்சியைக் கலங்காச் செங்கோல் எனச் சான்றோர் பாராட்டினர் என அரிசில்கிழார் கூறுவதை,

விலங்கு பகை கடிந்த கலங்காச் செங்கோல்[57]

என்னும் வரியால் தெளிய முடிகின்றன. அரசாட்சி என்பது ஊழால் வரக்கூடியதொரு செல்வம் என்றும், அதனைத் தகுதி சிறிதும் இல்லாதவனும் பெறுதற்கு வாய்ப்பு உண்டென்றும் நலங்கிள்ளி கூறுகின்றான். தன் தகுதியால் அன்றி ஊழின் துணையால்

ஆட்சி பெற்ற ஒருவன் அஃதொன்றே கொண்டு இறுமாப்புடையவனாகிக் குடிகள்பால் இறைப்பொருள் பெற்றுத் துய்ப்பது ஆகாது என்றும், அத்தகைய சிறியோன் அரசு பெறின் அவ்வரசு அவனுக்குப் பொறுக்கலாகாப் பெரும் சுமையாகும் என நலங்கிள்ளி குறிப்பிடுவதை,

மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தென
பால்தரவ ந்த பழவிறல் தாயம்
. . . . . . . . . . . . . . . . . . .
விசும்புற ஓங்கிய வெண்குடை
முரசு கெழு வேந்தர் அரசுகெழு திருவே[58]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

மன்னன் குடிகள் தரும் இறைப்பொருள் ஒன்றையே நம்பி வாழாது தன் வலிய முயற்சியால் அரசின் வருவாயைப் பெருக்க வேண்டும் என்பது நலங்கிள்ளி கருத்தாகும்.

இளந்திரையன் மன்னர்களின் ஆட்சியை ஒரு வண்டியாக உருவகித்து அதனை உய்ப்போன் அறிவும் திறனும் உடையவனாக அமையாது எனின் நாளும் பகைக் கூழாகிய சேற்றில் பட்டு எண்ணற்ற துன்பங்களுக்கு ஆளாக நேரும் என்கின்றான்.

ஊறு இன்றாகி ஆறுஇனிது படுமே
உய்த்தல் தேற்றான் ஆயின் வைகலும்
பகைக் கூழ் அள்ளற் பட்டு
மிகப் பல தீநோய் தலைத்தலைத் தருமே[59]

என்னும் பாடல் வரிகளால் இதனைக் காணமுடிகிறது.

### 4.4.8. தனி வாழ்வில் ஒழுக்கம்

பொதுவாழ்வில் பொறுப்போடு நடந்து கொண்டவாறே தம் தனி வாழ்விலும் மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கினர் தமிழரசர். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் தம் மனையாளைப் பிரியாமையையும்; நலங்கிள்ளி பரத்தையர் தோள் தோயாமையையும் ஒழுக்கமாகக் கொண்டமை புறநானூற்றுப் பாடல் வழி அறியமுடிகிறது.

தீது இல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்

பல் இருங்கூந்தல் மகளிர்

ஒல்லா முயக்கிடைக் குழைக என் தாரே![60]

என்பது சோழன் நலங்கிள்ளியின் வரிகளாகும்.

அறியாமையின் சிறு பிழை செய்த கோசர் குடிப்பெண்ணை நன்னன் என்பான் அறம் சிறிதுமின்றிக் கொன்றான். அவனைத் தமிழுலகம் பல தலைமுறைகள் நினைத்திருந்தது. அவன் மீண்டு வரவியலாத கொடுமையான நகரத்தில் வீழ்ந்திருப்பான் என்று மக்கள் நம்பினர். வன்பரணர் தலைவி ஒருத்தியின் கூற்றில் வைத்து இதனை நினைவு கூர்ந்துள்ளார்.

. . . . . . . . . . . பொலந்தேர்

நன்னன் மருகன் அன்றியும், நீயும் முயற்கற்கு

ஒத்தனை மன்னே வயங்கு மொழிப்

பாடுநர்க்கு அடைத்த கதவின் ஆடு மழை

அணங்கு சால் அடுக்கம் பொழியும் நும்

மணம் கமழ் மால் வரை வரைந்தனர் எமரே[61]

என்பது அப்பாட்டாகும். இதனால் நன்னன் மரபினரைப் பாடுவதில்லை எனப் புலவர்கள் முடிவு செய்திருந்தனர்.

### 4.4.9. குடிப்பற்று

மன்னர் அன்று குடிபற்று கொண்டு விளங்கினர். தத்தம் குடியின் பெருமையைச் சிதைக்காது நடந்து கொள்ள வேண்டுமென அவர்கள் விரும்பினர். இதனாற்றான் சான்றோர் அவர்களுக்கு அறிவுரை கூறுகையில் குடிப்பெருமையை முன் வைத்துப் பேசினர் எனத் தெரிகின்றது.

ஆர்புனை தெரியல்நும் முன்னோ ரெல்லாம்

பார்ப்பார் நோவன செய்யலர்[62]

என்னும் தாமப்பல் கண்ணனாரின் வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றது.

குடிப்பொரு ளன்று நும் செய்தி[63]

நீயே புறவின் அல்ல லன்றியும் பிறவும்

இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை[64]

என்ற பாடல் வரிகள் இதனைக் காட்டுகின்றன.

### 4.4.10. சான்றோரின் கூட்டுறவு

சான்றோரின் கூட்டுறவு மன்னர்களை நன்னெறிக்கண் செலுத்துவதில் பேரிடம் வகித்தது என்பது நன்கு விளங்குகின்றது. மன்னனுடைய சுற்றத்தின் சிறப்புப் பற்றிச் சில சான்றுகள் கிடைத்துள்ளன.

பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேத நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு முழுது சேண்விளங்கி[65]

என்பது முடிநாகராயரின் வரிகள், மன்னனை நன்னெறிக்கண் செலுத்தும் சுற்றமிருந்தமையை உணர்த்துகின்றன. இவர்களின் கடமை பற்றி மதுரைக்காஞ்சி கூறுவதும் எண்ணத்தக்கதாகும்.

நன்றும் தீதும் கண்டாய்த் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்.[66]

இங்குக் கூறப்பட்டன யாவும் அரசன் நல்வழியிற் செல்ல உறுதுணை புரிந்தன என்று கருதினாலும், இவை அரசனால் புறக்கணிக்க முடியாதனவல்ல. இவை நிறுவன அடிப்படையிலான தடைகளல்ல. மரபுரிமையை அடிப்படையாகக் கொண்ட முடியரசனாதலின் அவன் சட்ட ரீதியாக யாருக்கும் கட்டுப்பட்டவனல்லன். தவறு செய்த போது குடிகள் அலவுற்றுக் கூவவும், கண்ணீர் பரப்பவும் முடியுமே அன்றி மன்னனை அப்புறப்படுத்த அவர்கட்கு உரிமை இல்லாத நிலை அன்று இருந்தது. இத்தகைய காலத்திலும் மனச்சான்றுக்கும் உலக நடைமுறைக்கும் மதிப்பளிக்கும் யாரும் அளவுக்கு மீறிக் கொடியோராக வாழ்ந்திருக்க இல்லை என்பதை இவண் காணமுடிகின்றது.

### 4.5. புலவரின் மாண்புகள்

சங்கத் தமிழ் வளர்த்த சான்றோர்களாகத் திகழும் புலவர்கள் பரிசில் வாழ்க்கை மேற்கொண்ட போதும், தங்களுடைய கொள்கைகளான மாண்புகளில் சிறந்து விளங்கினர்.

### 4.5.1. வறுமையிலும் செம்மை

*பெருஞ்சித்திரனார் என்றொரு புலவர் மிகுந்த வறுமையுடன் வாழ்ந்தார். "கூரிய வேலையுடைய குமணா! வெற்றிப்புகழுடைய, பழி இல்லாத சிறந்த குடியில் பிறந்த இசை மேம்பட்ட அண்ணலே! என் தாய், தனக்குச் சென்ற ஆண்டுகள் பலவாதலின் எனது உயிர் இன்னும் போகாமல் இருக்கின்றதே என்று சொல்லி, வாழும் நாளோடு பலவாக வெறுத்துப் பேசுகிறாள். தான் கையில் பிடித்த கோல் தடியைக் காலாகக் கொண்டு சிறுக அடியிட்டு நடக்கிறாள். நூலை விரித்தாற் போன்ற நரைத்த மயிரினை உடையவள். கண் பார்வை மறைந்து முற்றத்தே இருந்துப் புறப்பட மாட்டாத மூப்பையுடையவள் எனத் தன் குடும்ப வறுமையை,*

வாழும் நாளோடு யாண்டு பல உண்மையின்
தீர்தல் செல்லாது என் உயிர் எனப் பல புலந்து
கோல் காலாகக் குறும் பல ஒதுங்கி
நூல் விரித்தன்ன கதுப்பினள். கண்துயின்று
முன்றில் போகா முதிர்வினள் யாயும்[67]

*என்னும் பாடலால் அவர் விளக்குகிறார்.*

*புலவர் தன் மனைவியின் வறுமைக் கோலத்தைச் சித்திரிக்கிறார். என்னை விரும்பியோளின் மனைவி, பசப்புற்ற உடம்புடன் நினைவு வருந்தி, இடையில் வைத்த பல சிறுபிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் உலர்ந்த முலையினையுடையவள். மிகவும் வருந்தி குப்பையில் விளைந்த கீரையின் முற்றாத இளந்தளிரைப் பறித்து வந்து, உப்பின்றி நீரை உலையாக ஏற்றிக் காய்ச்சி, மோரின்றிச் சோறாகிய உணவை மறந்து, பசிய இலையைத் தின்று வாழ்கிறாள். அழுக்கேறிய இழிந்த உடையினை உடையவள். தன்னுடைய இத்தகைய நிலைக்கு அறக்கடவுளைப் பழிப்பவள் என்று பெருஞ்சித்திரனார் தம் வறுமை நிலையினை கீழ்கண்ட பாடலால் விளக்குகிறார்.*

பசந்த மேனியோடு படர்அட வருந்தி
மருங்கில் கொண்ட பல் குறுமாக்கள்
பிசைந்து தின வாடிய முலையள் பெரிது அழிந்து
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த

முற்றா இளந்தளிர் கொய்துகொண்டு உப்பு இன்று
நீர் உலையாக ஏற்றி மோர் இன்று
அவிழ்ப் பதம் மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த உடுக்கையள் அறம் பழியா
துவ்வாளாகிய என் வெய்யோளும்.[68]

வறுமையால் வாடிய இரவலர்க்குப் பரிசில் தந்த நின் புகழை வாழ்த்தி வந்தேன். உயர்ந்த கொம்பையுடைய கொல்யானையைப் பெற்றாலும் முகம் மாறித் தரும் பரிசிலை யான் ஏற்க மாட்டேன். என் தாய், மனைவி ஆகிய இருவருடைய நெஞ்சமும் விருப்பமுறும்படி, பசி தின்பதால் வருத்தமுற்ற என் சுற்றமும் மகிழும்படி மலர்ந்த முகத்துடன் நீ யான் இன்புற விரைவில் பரிசில் தந்து விடுவையாயின் சிறிதாகிய குன்றி என்னும் அளவையுடைய பொருளாயினும் அதனைக் கொள்வேன் என வறுமையிலும் செம்மைப் போற்றிய பெருஞ்சித்திரனாரின் பண்பினை,

உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும்
தவிர்ந்து விடு பரிசில் கொள்ளலேன் உவந்து நீ
இன்புற விடுதி ஆயின் சிறிது
குன்றியும் கொள்வல்[69]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகிறது.

### 4.5.2. புகழ் வாழ்க்கை

மனித வாழ்க்கையின் சிறப்பே ஈதலும், புகழோடு வாழ்தலும் தான் என்பார் திருவள்ளுவர். அந்நிலையில் வாழ்ந்தோம் நம் முன்னோர். அதையும் கடந்து மேன்மையான வாழ்க்கைக் கொள்கையுடையோராய்ச் சங்க கால மக்கள் இருந்தனர் எனக் கழைதின் யானையார் சுட்டுவதை,

ஈஎன இரத்தல் இழிந்தன்று அதன் எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதன் எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று[70]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. உலக நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை இவற்றை உணர்ந்தோராக அக்கால மக்கள் வாழ்ந்தனர் எனப் பெருஞ்சித்திரனார் கூறுவதை,

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்

தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே[71]

என்னும் பாடல் வரியால் காணமுடிகிறது.

### 4.5.3. சொல்லும் செயலும்

இன்றைய உலகில் சொல்லுக்கும் செயலுக்கும் தொடர்பில்லை. 'உள்ளத்திற்கும் உதட்டிற்கும் தொடர்பு இல்லாதது போன்று', 'உள்ளொன்று வைத்துப் புறம்பு ஒன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று வேண்டுகிறார் இராமலிங்க சுவாமிகள். பண்டைய கால மக்கள் பொய் அறியாது உண்மை பேசி உயர்வு அடைந்தவர்களாக விளங்கினர் என்பதை,

பொய் அறியா, வாய்மொழியால்

புகழ்நிறைந்த நல் மாந்தர்[72]

என்று பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

இப்பூமி தன் நிலையிலிருந்து மாறிப் போனாலும் தன் தலைவன் சொல் நிலை மாறாது என்று தலைவி நம்பினாள்.

நிலம்புடை பெயர்வதாயினும் கூறிய

சொல் புடைபெயர்தலோ இலரே[73]

என்ற பாடல் வரிகள் தலைவனைப் பற்றி தலைவியின் நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றன.

இயற்கையே பொய்த்தால் கூட சேரலாதன் பொய்பேச மாட்டான் என்கிறார் ஒரு புலவர்.

மாரி பொய்க்குவது ஆயினும்

சேரலாதன் பொய்யலன் நசையே[74]

நிலம்திறம் பெயரும் காலை ஆயினும்

கிளந்த சொல் நீ பெயர்ப்பு அறியலையே[75]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகின்றன.

நகையினும் பொய்யா வாய்மை[76]

என்று கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனின் வாய்மை பற்றிப் பேசுகிறார்.

நேர்மைக்கும் நடுவுநிலைமைக்கும் ஞாயிற்றை உவமை கூறுதல் மரபு. ஞாயிற்றைக் காட்டினும் வாய்மை சான்றவன் தலைவன் என மதுரை மருத இளநாகனார்,

முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏமுற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்ற நின்சொல் நயந்தோர்க்கே[77]

இவ்வாறு மன்னனும், மக்களும், புலமை வாய்ந்த நற்சான்றோர்களும் சொல்லில் நின்றனர் என்பது தெரிகின்றது.

#### 4.5.4. புலவரின் புரட்சி

தன்னை நாடி வரும் பரிசிலருக்கு, அவரவர் தகுதியறிந்து பரிசில் நல்க வேண்டும். தன்னிடம் வருவோரின் தகுதியறியாத வேந்தனால் புகழ்பெற்றுச் சிறக்க முடியாது. பரிசிலரை நேரில் காண மறுத்து பொருள் வழங்காது வேந்தனை ஏற்காத அளவிற்குப் புலவர்கள் நெஞ்சுரம் மிக்கவராய் விளங்கினர் எனப் பெருஞ்சித்திரனார் லப்படுத்துவதை,

காணாது ஈத்த இப்பொருட்கு யான்ஓர்
வாணிகப் பரிசிலன் அல்லென்[78]

ம் பாடல் வரியால் காணமுடிகின்றன.

இதே காலத்தில் வாழ்ந்த புலவர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் ளிக்குப் பரிசில் நல்கும் முறையை எடுத்துக் கூறியுள்ளார். நின்பால் வருவார் தகுதியின்மைகளை நோக்கி அளிப்பதும், மறுப்பதும் செய்யாது அவ்வாறு கம் வாடி வதங்கிய வயிறு ஒன்றையே நோக்கி எல்லோர்க்கும் வழங்க தக எனும் பொருளில் பாடியுள்ளார்.

வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி[79]

ல் வரிகள்.

கூறும் புலவரின் கருத்து ஆழ்ந்து நோக்கத்தக்கது. தகுதி தகுதியற்றவர்க்கும் வயிறு ஒன்றுதான். எனவே பசித்த வயிறு

நோக்கிப் பரிசில் கொடு எனப் புலவர் உரைக்கும் அ
புரட்சியானது என உரைக்கலாம் என்பது பெறமுடிகின்றன.

### 4.5.5. போரும் புலவரும்

பண்டைத் தமிழ் வேந்தர்க்கு வீர உணர்ச்சியினை ஊட்ட செய்தனர் புலவர். போரில் புலவராற்றிய பணி குறிப்பிடத்தக்கது. வேந்தன் வெற்றி பெறும் பொருட்டு அவன் சிறப்பியல்புகளைச் சிறப்பித்துக் கூறுவர். பகைவர் நாடு அழியும் பான்மையினை எடுத்துக் கூறி வேந்தனுக்கு வீர உணர்ச்சியினை ஊட்டுவர். சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியினைப் பாராட்டும் பரணர், அவனைப் பகைத்தவர் நாடு 'தாயிழந்து உணவின்றிக் கூப்பிடும் குழவி போல' ஓயாது அலறிப் பாழாகும் என்பதை,

தாய்இல் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம், நின் உடற்றியோர் நாடே[80]

என்னும் பரணரின் வரியால் காணமுடிகின்றன.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடவந்த காரிக்கிழார். "உன் தலையில் உள்ள மாலை நீ பகைவர் நாட்டைச் சுடுகின்ற தீயினால் வாடுவதாக" எனக் கூறி அவனது வீர உணர்ச்சியினைத் தூண்டுகின்றார்.

வாடுக இறைவ! நின் கண்ணி - ஒன்னார்
நாடு சுடு கமழ் புகை எறித்தலானே![81]

என்பது அப்பாடல் வரிகள்.

வேந்தர் புலவர்க்கு உயரிய இடம்தந்து போற்றினர். அதனால் ஆட்சித் துறையில் புலவர் வேந்தர்க்கு உறுதுணையாய் நின்று உதவினர். தூது சென்று பகை தவிர்க்க முனைந்தனர். தூது சென்ற புலவர் தம் தூது பயனற்றுப் போர் மூண்ட பொழுது இரு வேந்தரையும் ஒற்றுமைப்படுத்தும் முயற்சியினையும் மேற்கொண்டனர்.

தம்மோடு ஒப்பாரிடம் மட்டுமே வீரர் போர் மேற்கொள்வர். தம் வலிமை கண்டு அஞ்சி, போருடற்றத் துணியாத வேந்தரிடம் போரிடார். அவ்வாறு போரிடத் துணிந்தாலும் அது அறனன்று என எடுத்துக்கூறிப் போரைத் தவிர்த்தனர் புலவர்.

தம்முள் மாறுபட்ட இரு வேந்தர் போரிடத் துணிந்து போர் முற்றியும், போர் புரியாமல் காலம் கடத்தினால் அதனால் மக்கள் துன்புறுவர். இவ்வேளைகளில் புலவர் அறிவுரை கூறி அமைதிக்கோ அல்லது அடுபோருடற்றவோ வழி செய்வர் எனக் கோவூர்கிழார் அறிவுறுத்துவதை,

அறவை ஆயின் நினது எனத் திறத்தல்
மறவை ஆயின் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் அல்லையாக
திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்
நீள் மதில் ஒரு சிறை ஒடுங்குதல்
நாணுத்தகவு உடைத்து இது காணுங்காலே[82]

என்னும் பாடல் வரியால் அறியமுடிகின்றன.

வேந்தன் தன் கடமை மறந்த வழி அவன் கடமையினை நினைவுறுத்தி அவனை வினை மேல் செலுத்துதலைப் புலவர் மேற்கொண்டனர். போர்மேற்சென்ற சேரமான் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் படைவீடு அமைத்துத் தங்கியிருக்கையில், விறலியர் பாட்டிசையில் இன்புறலானான். இதனை அறிந்த புலவர் வினையாற்ற விரும்பும் வேந்தர் இன்பங்களைப் பிறர் அறிாயமல் துய்க்க வேண்டும் எனப் புலவர் ஒருவர் அறிவுறுத்துவதை,

சுடர் நுதன் மடநோக்கின்
வாணகை யிலங்கெயிற்
தமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை உறைதலின்
வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென
உள்ளுவர் கொல்லோநின் னுணரா தோரே[83]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றது. இவ்அறநெறியான அறவுரையை,

. . . . . . . காவல் வேந்தன்
இலைப்பூங் கோதை இயல்பினள் வழாமை[84]

என்ற இளங்கோவடிகளின் வரிகளும் உணர்த்துகின்றன. இதனையே திருவள்ளுவரும்,

காதல் காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்[85]

என்று வலியுறுத்துகிறார்.

இதிலிருந்து போர்மேற்சென்ற வேந்தர் விறலியரையும் உடன் அழைத்துச் சென்றனர் என்றும், அவ்வாறு சென்ற விறலியர் பாசறையில் ஆடிப்பாடி வேந்தனுக்கும் வீரருக்கும் களிப்பூட்டினர் என்றும் அறியலாம்.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை போர் மேற்கொண்டு பாசறையிலேயே தம் வாழ்நாளைக் கழித்துக் கொண்டிருந்தான். வேந்தர்க்கு இல்லறத்தை நினைவுபடுத்திப் போரை விரைவில் முடிக்க பெருங்குன்றூர்கிழார் தூண்டியதை,

பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய பொருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்[86]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றது.

போரினைப் புலவர் நோடியாகக் கண்டு பாடினர். புறமுதுகு காட்டாமை, வீரமரண எய்துதல் இவையே வாழ்வின் கொள்கையென வீரரிடையே நிலைபெறச் செய்தனர். இதனை,

துடி எறியும் புலைய!
எறி கோல் கொள்ளும் இழிசின!
கால மாரியின் அம்பு தைப்பினும்
. . . . . . . . . . . . . . . . . . . .
வம்ப வேந்தன் தானை
இம்பர் நின்றும் காண்டிரோ, வரவே![87]

என்ற சாத்தந்தையாரின் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

போருக்கும் புலவருக்கும் உள்ள தொடர்பினைப் பற்றி அறிஞர் பலர் கருத்துரைத்துள்ளனர்.

> மன்னர் ஆயச்சுற்றத்தின் ஒரு பகுதியான பாணரும் புலவரும் அவர்களிடையே தம் வீரரிடையேயும் வீரப்புகழார்வத்தை உண்டு பண்ணவும் அதை வளர்க்கவும் மிகப் பெரிதும் உதவினர். அமைதிக் காலங்களில் அவர்கள் முன்னோர்களின் வீரச்செயல்கள் பற்றிய கதைகள் கூறி மகிழ்வித்தனர். போர்க்காலங்களில்

> அவர்கள் படையுடன் சென்று மூதாதையரின் வீரச்செயல்களைப் பின்பற்றும்படி தம் போர்ப் பாடல்களால் வீரர்களையும், தலைவர்களையும் ஊக்கினர்[68]

என வி.கனகசபை எடுத்துரைத்துள்ளார். புலவர்கள் வேந்தர்களாகிய ஆளுவோரின் நலம் பேணினர் என்பதை அறியமுடிகிறது.

### 4.6. புலவராகவும் விளங்கிய வேந்தர்கள்

சங்க கால வேந்தர்களில் சிலர் புலமையாளராகத் திகழ்ந்தனர். பல பாட்டுக்களை இயற்றினர். வேந்தர் ஆட்சித்துறைக்கு வேண்டிய அறிவைப் பெற்றதோடு, இலக்கிய இலக்கணங்களிலும் தேர்ந்த புலமை பெற்றிருந்தனர்.

#### 4.6.1. சேரர்

> முப்பது சேர வேந்தருள் பதின்மர். அதாவது மூன்றில் ஒரு பகுதி புலவராக விளங்கியுள்ளனர். சேர வேந்தருள் மிகுதியாக 68 பாடல்களைப் பாடியவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ. குறைந்த பாடல் பாடியவர் இளங்கடுங்கோ. இவர் பாடியது ஒரு பாடல் மட்டுமே[69]

என்பது அறியலாகிறது.

##### 4.6.1.1. கணைக்கால் இரும்பொறை

இரும்பொறை மரபில் வந்த வேந்தன் கணைக்கால் இரும்பொறை. இவன் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது. மனிதருக்கு இருக்க வேண்டிய மானப் பண்பை இவன் தன் பாடலில் விளக்கியுள்ளான்.

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் கோச்செங்கணானுடன் கழுமலம் என்ற நகரை அடுத்துள்ள திருப்போர்ப்புறம் என்னுமிடத்தில் போரிட்டான். இப்போரில் இரும்பொறை தோல்வியுற்றுச் சிறைப்பட்டான். வென்ற சோழன், தோற்ற சேரனைக் குடவாயிற் கோட்டத்தில் சிறை வைத்தான்.

சிறையில் சேரமான் கேட்ட குடிநீரைச் சிறைக் காவலர் காலந்தாழ்த்தித் தந்தனர். அதனால் அந்நீரைப் பருக அவனுடைய மான உணர்ச்சி இடம்தரவில்லை.

மானமிழந்த வாழ்வைவிட மாள்வதே மேல் எனக் கருதிய சேரமான் தன் உள்ளத்து உணர்ச்சியை ஒரு பாட்டாக்கினான்.

குழந்தை இழந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் அது துறக்கம் புக வேண்டி, அதனை வாளால் வெட்டிப் புதைப்பர். போரில் கைதியாகி பகைவரின் பட்டப்பட்டு நாய்போல் நான் துன்புறுத்தப்படுகிறேன். இந்நிலையிலுள்ள என் நீர் வேட்கை அடக்காது, சிறைக்காவலரை இரந்து வேண்டுமளவிற்கு உறுதியற்றவன் ஆனேன் எனத் தன் நிலைக்கு இரங்கினான்.

குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்
ஆள் அன்று என்று வாளின் தப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத் தீத் தணிய
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ் உலகத்தானே?[90]

என்ற பாடல் வரிகளால் உணரலாம். இப்பாடலைப் பாடிவிட்டு உயிர் துறந்தான்.

மானமிழந்து வாழ்வது இழிவு; தனி மனித மானம் போற்றப்படும் தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் வேந்தரின் மானம், நாட்டின் மானமாகக் கருதப்பட்டது. தமிழ்வேந்தர் எல்லா வளங்களுடன் ஆட்சிப் பொறுப்பில் இருப்பதைவிட மானத்துடன் வாழ்வதைத்தான் மக்கள் விரும்பினர், உயர்வாகக் கருதினர் என்பதை உணரமுடிகின்றது.

#### 4.6.1.2. கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

சேரமான் தன் முன்னோர்களைப் போற்றும் பண்புடையவனாகவும், தன் மனைவியின்பால் மிகுந்த அன்புடையவனாகவும் காணப்படுகிறான். இவன் பாடிய இரண்டு பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் இடம்பெற்று உள்ளன.

மலைச்சாரலில் யானைக்கன்றை உறங்க வைக்கும் அருவியொலியைக் குறிப்பிடுங்கால் அது தன் குடி முன்னோனாய பெருஞ்சோற்றுதியன் சேரலாதன்

என்பான் அளிக்கும் சோற்றுப் பரிசிலை உண்ண வருவார் செய்யும் பேரொலி போல் உள்ளது என உவமை கூறித் தன் குடிப்பற்றைப் பறைசாற்றினான். இதனை,

கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சி
னுதிய னட்டில் போல வொலியெழுந்
தருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பின்[91]

என்ற பாடல் வரிகளால் விளக்குகின்றன.

தன் முன்னோர்பால் அன்பு காட்டியதைப் போன்றே, தன் மனைவியிடத்திலும் பேரன்பு கொண்டவன். இறந்த மனைவியோடு தானும் உயிர்விடவில்லையே என இரங்கி இவன் பாடிய பாடல் உள்ளத்து உணர்வை வெளிப்படுத்துகின்றது.

யாங்குப் பெரிது ஆயினும், நோய் அளவு எனைத்தே
உயிர் செகுக்கல்லா மதுகைத்து அன்மையின்?
கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளிடைப் பொத்திய விளை விறகு ஈமத்து
ஒள் அழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தள் மடந்தை
இன்னும் வாழ்வல்; என் இதன் பண்பே![92]

என்ற பாடல் வரிகளால் இதனை உணரலாம். இவ்வாறு தன் துயரத்தை வெளிப்படுத்தும் உணர்ச்சி மிக உயர்வானது. "என் துயரம் எவ்வளவு பெரியதாக இருந்தாலும், என் உயிரையும் போக்கி அவளுடன் சேர்க்கும் வலிமையற்றதாகத் தானே உள்ளது. பெரிதாகிய என் துயரத்தினால் பயனென்ன?" என இரங்கிக் கூறும் மாக்கோதையின் மனநிலை உணரத்தக்கது.

## 4.6.2. சோழர்

இருபத்து நான்கு சோழ வேந்தரில் ஐவர் புலவராக விளங்குகின்றனர். இது மொத்த எண்ணிக்கையில் 21 விழுக்காடு ஆகும். சேர, பாண்டியமன்னரை விட எண்ணிக்கையில் குறைவாகவே சோழ மன்னர் சங்க காலத்தில் காணப்படுகின்றனர். அவ்வாறே புலவராக விளங்கும் சோழ வேந்தரும் குறைவாகவே உள்ளனர். சங்க இலக்கியத்தில் சேரரையும், பாண்டியரையும் விட சோழர்களைப் பற்றிய செய்திகள் குறைவாகவே கிடைக்கின்றன[93]

என்பது பெறலாகிறது.

### 4.6.2.1. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

உறையூரை ஆண்ட சோழ வேந்தருள் சிறக்க வாழ்ந்தவன் கிள்ளிவளவன். அவன் வீரனாகவும், வள்ளலாகவும் நன்னெஞ்சம் கொண்ட வேந்தனாகவும் விளங்கினான். புரவலரைப் புலவர் வாழ்த்துவதே மரபு. ஆனால் புரவலனை வாழ்த்தும் புரவலாகக் கிள்ளிவளவன் விளங்குகின்றான். இவன் பாடிய பாடல் ஒன்றே. பாடாண் திணை அமைந்த அப்புறநானூற்றுப் பாடல் ஒரு பாணனின் வள்ளமையைப் பகர்கின்றது.

காவிரிக் கரையில் சிறுகுடில் என்னும் ஊரில் பாணன் என்னும் வள்ளல் வாழ்ந்து வந்தான். இப்பாணனின் வள்ளல் தன்மையைக் கிள்ளிவளவன் பாராட்டுகிறான்.

யாணர்ப் பழுமரம் புள் இமிழ்ந்தன்ன
ஊண் ஒலி அரவம் தானும் கேட்கும்
பொய்யா எழிசி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வன் புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில் ஒழுக்கு ஏய்ப்ப,
சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்
இருங் கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும், தெற்றென;
பசிப்பிணி மருத்துவன் இல்லம்.[94]

பழமரத்திலே பறவை இனம் ஒலித்தாற்போல ஊன் உண்பார் ஆரவாரம் கேட்கின்றது. எறும்புகள் முட்டைகளைக் கொண்டு மேட்டு நிலத்தை நோக்கிச் செல்வது போல, பெரிய சுற்றத்தோடும் கூடிய பிள்ளைகள் கையில் சோறு பெற்றுக் கொண்டு போகிறார்கள். இவ்வாறு எளியவருக்கும் வறியவருக்கும் வாரி வழங்கும் பாணனைப் `பசிப்பிணி மருத்துவன் இல்லம்` எனப் புகழும் அவனது பண்புடைமை போற்றத்தக்கது.

தன் ஆட்சியின்கீழ் அமைந்த சிறுகுடியைச் சார்ந்த பண்ணனை வாழ்த்தும் கிள்ளியின் பண்பு கருதத்தக்கது. தன்னைப் பல புலவர்கள் வாழ்த்தும் சிறப்பினைப்

பெற்றிருந்த சோழன், வேறு ஒரு புரவலனைப் புகழ்ந்து வாழ்த்தும் சால்புடைமை குறிக்கத்தகும். மூவேந்தருள் புரவலனைப் புகழும் ஒரே புரவலனாகக் கிள்ளிவளவன் விளங்குவதை அறிய முடிகிறது.

**4.6.2.2. நல்லுருத்திரன்**

கலித்தொகையில் முல்லைக்கலியைப் பாடிய பெரும்புலவன் இவ்வேந்தன் ஆவான். முல்லைக் கலிப்பாக்கள் பதினேழும், ஒரு புறப்பாட்டும் இவன் பாடியவை. முல்லை நிலச் சிறப்புகளையும், பழக்க வழக்கங்களையும் இப்பாடல்களில் விளக்கியுள்ளான்.

இவ்வேந்தன் இந்து சமயக்கடவுளர் பலரையும் அறிந்தவன்; பாரதக் கதையினை நன்கு கற்றவன் என்பதற்கு முல்லைக் கலிப்பாக்கள் சான்றளிக்கின்றன. மறப்பண்பை விளக்கும் மாண்புடையவன் என்பதை இவன் பாடிய முல்லைக் கலி விளங்குகிறது.

ஏறுதழுவல் விழாக்காலத்தே தன்னைக் கைப்பற்றத் தவறி தன்முன் விழுந்த ஆயர் இளைஞன் ஒருவனை முட்டித் தாக்க முனையாது மீளுகிறது காளை. போர்க்களத்தே வாள் பெற்றிருந்தும் தன் கையிலகப்பட்ட வீரனை அவனது மறமின்மை காரணமாகக் கொல்லாது உய்ந்து போகவிடும் மறவனைக் காளைக்கு உவமை கூறியுள்ளான். இதனை,

கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான் மேற்செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம்[95]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது. இது அக்கால வீரரின் பெருமிதத்தை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

ஆயர்குல மகளிரின் கற்பு மேம்பாட்டைக் குறிப்பிட்டு முல்லை நில மக்களின் அகவொழுக்கத்தினை இவர் புலப்படுத்தியுள்ளார்.

விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
திருமணங் கூடுத லில்லியல் பன்றே[96]

என்ற பாடல் வரிகளால் இதனை அறியலாம்.

முற்றிய விளை வயலைக் கண்ணுற்றதும், பிறர் உழைப்பில் விளைந்த நெற்கதிர்களைத் திருடிச் சென்று தன் வளையுள் சேர்க்கும் இயல்புடையது எலி. இவ்வாறு பிறர் செல்வத்தையும் தமக்கென இறுகப்பற்றிச் சேமித்துப் பதுக்கி வைத்து வாழும் இயல்புடையோர் பலர்கொடிய காட்டுப் பன்றி தன் இடப்பக்கத்தே தானே இறந்து வீழ்ந்து கிடப்பினும், அதனை உண்ணாது பெரிய களிறு வலப்பக்கத்தே வீழுமாறு அதனை வீழ்த்திக் கொன்றுண்ணும் இயல்புடைய புலிபோல் குறிக்கோள் மனம் கொண்டோர் பலர் உலகில் உள்ளனர்.

அவர்கள் உறுதியான உள்ளமும், கொள்கை உரமும் கொண்டவர்கள். கொண்ட கொள்கையிலிருந்து மாறுபட்டு நடப்பதால் வரும் பொருள் எப்படிப்பட்டதாக இருப்பினும் அதனை அவர்கள் விரும்ப மாட்டார்கள். அப்படிப்பட்ட மன வலிமையும் கொள்கை உரமும் கொண்டவர்களின் பழக்கமே அனைவர்க்கும் வேண்டும் என்பதனை,

கடுங் கண் கேழல் இடம்பட வீழ்ந்தென
அன்று அவண் உண்ணாதாகி, வழிநாள்
பெரு மலை விடரகம் புலம்ப. வேட்டுஎழுந்து
இருங் களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்
புலி பசித்தன்ன மெலிவுஇல் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உள ஆகியரோ[97]

என்னும் பாடல் வரிகளால் நமக்கு அவ்வேந்தன் அறிவுறுத்துகிறான். இவ்வரிகளில் நல்லுருத்திரனின் குறிக்கோள் உள்ளம் கருதத்தக்கது.

வேந்தனாக இருந்து ஆட்சி செய்தமையினால் தன்னைச் சுற்றியிருப்போரின் மன இயல்புகளை நன்றாக உணர்ந்தவன். எலி போன்ற மனம் படைத்தவரையும், புலி போன்ற மனம் படைத்தவரையும் ஆராய்ந்து கண்டனர்.

எலி போன்ற மனம் படைத்திருப்பவர் வீட்டுக்கும் நாட்டுக்கும் கேடு சூழ்வர். எனவே, புலி மனம் படைத்தவர் நட்பு தனக்கு வேண்டும் எனக் குறிப்பிடுகிறார்.

கோப்பெருஞ்சோன், நலங்கிள்ளி, மாவளத்தான் போன்றவர்கள் புலவராக விளங்கிய சோழர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்.

### 4.6.3. பாண்டியர்

> இருபத்து நான்கு பாண்டிய வேந்தரில் பதின்மூன்று பேர் கவியரசர்களாக விளங்குகின்றனர். இஃது இவரின் மொத்த எண்ணிக்கையில் 54 விழுக்காடு ஆகும். புலவராக விளங்குவதில் சேர, சோழரை விடப் பாண்டிய வேந்தரே மிகுதியாக உள்ளனர்[98]

என்பது அறியலாகின்றது.

> பாண்டி யவேந்தருள் சரிபாதிக்கு மேல் புலவராக விளங்குவது குறிப்பிடத்தக்கது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மரபினராதலால் இப்பாண்டி யவேந்தர் பலர் கவியரங்கேறினர்[99]

எனலாம்.

#### 4.6.3.1. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. சிலப்பதிகாரம் தவிர ஏனைய பழந்தமிழ் நூல்களில் இவனைப் பற்றிய குறிப்புகள் இல்லை. இவன் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

புறநானூற்றில் நெடுஞ்செழியன் என்ற பெயரில் மூவர் இடம்பெற்றுள்ளனர். இவனது ஆரியப் படையெடுப்பைச் சிறப்பித்து ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் எனக் குறிப்பிட்டனர். இவன் சங்ககாலப் பாண்டிய வேந்தருள் காலத்தால் பிற்பட்டவன்' கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்தவன். அன்னை, அரசன் முதலிய அனைவராலும் பாராட்டப்படும் சிறப்னபக் கல்வியினால் மட்டுமே பெற முடியும். எனவே, இச்சிறப்புக்குரிய கல்வியை எப்பாடுபட்டேனும் கற்க வேண்டும் என்பதனை,

உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்
'மூத்தோன் வருக' என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே[100]

என்னும் பாடல் வரிகளால் உணர்த்துகின்றன. இப்பாட்டில் மக்களின் கல்விக்கண்ணைத் திறக்க இவன் முயல்கிறான். தன் நாட்டு மக்களும் பிற மக்கள் சமுதாயமும் அறிவுடையவர்களாக விளங்க வேண்டும் என்று விரும்பும் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் உள்ள வேட்கை இங்குப் புலனாகிறது.

## 4.6.3.2. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

பூதப்பாண்டியன் அறிவும், ஆற்றலும், ஒழுக்கமும் நிரம்பியவன். நண்பர்களைப் போற்றும் பண்பினன். மாவன், ஆந்தை, அத்துவஞ்சாத்தன், ஆதன் ஆழிசி, இயக்கன் ஆகியோரை நண்பராகப் பெற்றவன்.

மனைவி கோப்பெரும் பெண்டின்பால் பேரன்பினன். இவனும் இவன் மனைவியும் தேர்ந்த புலமையாளராக விளங்கினான். ஒழுக்கத்தை உயிரினும் மேலாகக் கருதுபவன் என்பதை இவன் கூறிய வஞ்சினத்திலிருந்து அறியமுடிகிறது. இவன் பாடிய இரண்டு பாடல்கள் தொகை நூலில் இடம்பெற்றுள்ளன. இவன் திதியன் என்பானுடன் கொண்டிருந்த நட்பினைப் பாராட்டிப் பாடியுள்ளதை,

. . . . . . . . . . . . . பொருநர்
செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் பொலந்தோந் திதியன்[101]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

பாண்டியர் குடியில் பிறந்ததைப் பெருமையாகக் கருதுபவன் தன்னைஎதிர்த்து வந்த பகைவரை 'வெல்லாவிடின்' என வஞ்சினம் உரைக்கிறான். இதனை,

மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇ பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே[102]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. வேந்தர் குடிகளைப் புலவர்கள் வாழ்த்துதல் மரபு. தன் குடியின் பெருமையினைத் தானே எடுத்துக் கூறி இத்தகு சிறப்புமிகு குடியில் மீண்டும் பிறக்க விரும்பும் இவன் வேட்கை குறிக்கத்தக்கது.

அண்டர்மகன் குறுவழுதியார் அறிவுடை நம்பி, கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி, கானப்பேர் எயில்கடந்த உக்கிரப் பெருவழுதி, குறுவழுதியார், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், நல்வழுதி, மதிவாணன், மாலை மாறன், மாறன் வழுதி, முடித்திருமாறன் போன்றோர் பாண்டிய வேந்தர்களில் புலவராக விளங்கியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

புலவராக விளங்குவதில் சேர, சோழரைவிட பாண்டியர் எண்ணிக்கையில் முதன்மை பெற்று விளங்குகின்றனர். பாண்டிய வேந்தருள் சரிபாதி பேர் புலவர்களாக விளங்குவது குறிப்பிட த்தக்கது. இவர்தம் பாடல்கள் உலகியல் கல்வியின் சிறப்பு, சான்றோர் இயல்பு, மக்களின் அன்றாட வாழ்க்கை முதலியவற்றை எடுத்தியம்புவன.

## 4.7. ஆட்சியாளரின் ஆற்றல்

பழந்தமிழ் வேந்தர் ஆட்சிப்பொறுப்பை மட்டும் ஆற்றியோர் அல்லர். நாட்டு மக்களிடமும், சான்றோரிடமும் கலந்து பழகினர். அவர்களின் அன்றாட வாழ்க்கையில் ஏற்பட்ட சிக்கல்களையும் போராட்டங்களையும் அறிந்து அதற்கான காரணத்தைச் சிந்தித்தனர். சிந்தித்து உலகின் இயல்போடு ஒத்துப் பார்த்து உணர்ந்து செயலாற்றினர். தாம் தெளிந்தவற்றைப் பாட்டாகப் பாடும் புலமைப் பேறு பெற்றனர்.

வேந்தராகவும், புலவராகவும் ஒருசேர விளங்கிய இவர்கள் பெற்றிருந்த சிறப்புக்குரிய இலக்கியப் பயிற்சி இவர்களின் மனத்தைப் பண்படுத்தி

மென்மையாக்கியது எனலாம். மென்மையான உள்ளத்திலிருந்து வன்மை பிறப்பது அரிது. ஓயாத போர்களுக்கிடையே பழந்தமிழகத்தில் இலக்கியங்கள் பல தோன்றி இன்றுவரை நிலைத்து நிற்பதற்குக் காரணம், இலக்கிய நுகர்ச்சி பெற்று மென்மையான உள்ளம் கொண்ட வேந்தர் சிலர் இருந்தமையே!

தமிழோடு தமிழ் வேந்தரையும் இணைத்தே இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. போரைக் குறிப்பிடும் பொழுதும் `தமிழ் தலை மயங்கிய தலையாலங்கானம்' என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ஆளுவோரும் ஆட்சி மொழியும் ஒன்றாக இருந்த காலமாதலால் இன்றுவரை நிலைத்து நிற்கக் கூடிய இலக்கியங்கள் தோன்றவும், தோன்றிய இலக்கியங்களைப் போற்றி வைத்திருக்கவும் நம்மால் முடிந்தது எனலாம்.

தமிழ் மொழியைக் கற்றுத் தேர்ந்து புலவராகச் சிறந்து விளங்கி பாடல்கள் புனைந்து புலவரைப் போற்றி அவர் புனைந்த பாடல்களையும் போற்றிச் சிறக்க வாழ்ந்த பழந்தமிழ் வேந்தரின் பெருவாழ்வு போற்றுதற்குரியதாகும்.

### 4.8. புலவர் குறிக்கோள்

கடந்த காலத்தின் மேன்மையினையும், எதிர்காலத்தில் சிறப்பினையும் நம் நிகழ்கால வாழ்க்கையுடன் இயைத்து நோக்கித் தம்மைச் சார்ந்தவர்களைக் கல்வித் துறைகளிலும், தொழிற்துறைகளிலும் உயர்த்தவல்ல பேரறிவு வாய்ந்தவர்கள் புலவர்கள் எனப் போற்றப் பெறுபவராவர்.

அறிவும் முயற்சியும் உடையவர் தம்மில் ஒருங்குகூடித் தம் அறிவின் திறத்தையும், செயல் திறத்தையும் தம்முள் ஒருவருக்கொருவர் தெரிவித்து எல்லா மக்களையும் அறிவிலும் முயற்சியிலும் முன்னேறுதற்குரிய அறிவுரைகளை வழங்கி நல்வழிப்படுத்த முனைந்தனர்.

தமிழ் மக்களுடைய கல்வி, வீரம், புகழ், கொடை என்னும் பெருமிதப் பண்பாடுகள் யாவும் புலமைக் கருவூலமாய் அவர்களால் போற்றப்படும் தமிழ் மொழியுடன் ஒன்றுபட்டு வளர்வனவாயின.

கல்வியிலே கருத்து உடையவராய்ப் பொருளைப் பேணாது வாழ்தல் புலவர்களின் மனவியல்பாகும். எனவே, வறுமையுறுதலும் அவர்தம் இயல்பாயிற்று. இப்பெருமக்கள் வறுமை நிலையில் வருத்தமுற்ற நிலையில் இவர்தம் மதிநலமுணர்ந்த மன்னர்களும், வரிசையறிந்து பரிசில் தந்து பாராட்டினர். தமது வறுமை நீங்க நிறைந்த பெரும் பொருளைப் பெற்று இன்புறுதல் வேண்டுமென்ற கருத்தால் பெருமையில்லாத மக்களை உயர்த்திக் கூறும் பழக்கம் பண்டைப் புலவர்களிடத்தில் இருந்ததில்லை.

பழந்தமிழ்ப் புலவர் தம் கற்ற பெருங்கல்வியைத் தமிழ் மக்களுக்குப் பயன்படுத்தினர். தம் அறிவுரைகளை மகிழ்ந்து கேட்பாரை மதித்தனர். தாம் கூறும் அறிவுரைகளைக் கேட்டுணரும் அறிவைப் பெறாதார் மன்னராயினும் அவரை மதியாது இகழ்ந்தனர்.

தம் வாழ்க்கைக்கு வேண்டும் பொருளை ஈட்டி இனிது வாழும் வசதி பெறாத புலவர், ஈகையிற் சிறந்த வள்ளல்கள் முதலியவர்களை நாடிச் சென்று அவர்கள் மதித்தளித்த பரிசில் பொருளைக் கொண்டு வாழ்க்கை நிகழ்த்த வேண்டிய நிலையில் வாழ்ந்தனர்.

சங்க காலத்தில் மன்னர் முதல் தொழிலாளர் ஈறாக ஆடவர், பெண்டிர் இருபாலாரும் தமிழறிவு நிரம்பப் பெற்றவராய்த் தாம் உலகியலில் கண்டு உணர்ந்த உண்மைகளை எல்லார்க்கும் அறிவுறுத்தும் நல்லிசைப் புலவராய் விளங்கினர். குடிப்பிறப்பு, செல்வநிலை முதலிய உயர்வு தாழ்வுகளை உள்ளத்தில் கொள்ளாது. கற்றறிவு உடைய புலவர் பெருமக்கள் கருதிய வழியே தமிழ் வேந்தர்களும் தங்கள் ஆட்சி முறையினை அமைத்துக் கொண்டார்கள்.

நாடாளும் மன்னர்கள் வெகுளியால் மனந்திரிந்து பழியுடைய செயல்களைச் செய்யத் துணிதலும் உண்டு. அந்நிலையில் புலவர் பெருமக்கள் மன்னர்களின் வெகுளியைத் தணித்துத் தங்கள் அறவுரைகளால் அவர்களை நல்வழிப்படுத்தினார்கள்.

தமிழ் வல்ல பெரும்புலவர்களைப் பழைய தமிழ் வேந்தர்கள் தங்களோடு ஒப்ப வைத்து நண்பு செய்தும், தம்மினும் உயர்நிலையில் வைத்து வழிபட்டுப் போற்றியும் ஆதரித்த செய்திகள் புறநானூற்றுச் செய்யுள்களில் ஆங்காங்கே குறித்துப் பாராட்டப் பெறுகின்றன.

விருப்பு வெறுப்பின்றி எல்லா மக்களையும் ஒப்பக் கருதி அறிவுரை வழங்குதல் புலவர்களின் இயல்பாகும். தமிழ் வேந்தர்கள் தங்களுக்குள் பகைமை கொண்ட பொழுது அவர்களுள் ஒரு திறத்தார் பால்சாராது இரு திறத்தாரையும் பகை தீர்த்து ஒற்றுமைப்படுத்தும் கடமை தமிழ்ப் புலவர்களுக்கு உரியதாயிற்று என்பதைத் தெளிய முடிகின்றது.

வாழ்க்கையில் நுகர்தற்குரிய எல்லா நலன்களும் குறைவறப் பெற்ற அப்புலவர்களால் பாடப்பெற்ற செய்யுட்கள் யாவும் வையத்துள் வாழ்வாங்கு வாழும் நல்வாழ்க்கை முறையினைத் திறம் பெற விளக்கும் திட்டம் உடையவனாய்த் திகழ்கின்றன.

### 4.9. நுண்ணறிவாளர்

உலகியல் பொருள்களை நுண்ணுணர்வுடன் ஆராய்ந்து தாம் உணர்ந்த நற்பொருள்களைப் பாக்களாலும், உரைகளாலும் சுவை பெருக அமைத்துக் கேட்பார்க்கு அறிவுடன் இன்பத்தையும் வழங்க வல்லவர்களே நல்லிசைப் புலவர்கள் எனவும், அத்தகைய புலவர்களால் பாடப்பெறும் புகழுடையார் இவ்வுலகில் செய்யத்தக்க நல்வினைகள் முடித்து வானுலக இன்பத்தையும் பெற்று மகிழ்வர் எனவும் எண்ணிய பண்டைத் தமிழ் மக்கள் வாழ்க்கையில் காணப்படும் நலம் தீங்குகளைத் தெளியவுணர்ந்து தீதொரீஇ, நன்றின்பால் செலுத்தும் நல்லறிவுடைய புலவர் பெருமக்களைப் பெரிதும் மதித்துப் போற்றினார்கள்.

சங்கப் புலவர்கள் உயிரினங்களின் இயல்புகளைச் செவ்விதின் உணர்ந்திருந்தனர். ஆதலின் ஒரு பொருளைப் பற்றிப் பாடும்போது அதனுடன் ஒப்புமையுடைய பிறிதொரு பொருளை அப்படியே உவமையாக்கினர்.

*சிறுபாணாற்றுப் படையில் இயற்கை வருணனையில் தாழை, செருந்தி, முண்டகம் ஆகியன அழகாகப் பூத்தன என்று கூற வேண்டும். இதனை,*

அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்
தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும்
கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்
நெடுங்கற் புன்னை நித்திலம் வைப்பவும்[103]

*என்று நத்தத்தனார் உவமைகளோடு இணைத்துப் பாடுகிறார். இதுபோன்ற எண்ணற்ற உவமைகளாலும் எழில்மிக்க காட்சிகளாலும் புலவர் பெருமக்கள் நுண்ணறிவுடன் விளங்கினார்கள் என்பதை அறியமுடிகின்றது.*

## 4.10. பேராண்மை

*அறத்தை ஆராயும் செங்கோலையுடைய வேந்தனுக்கு மாற்சரியம் கெடுதல் இல்லா, நின்று நிலைத்தை பெரிய எண்ணத்தைச் செவியிற்படுமாறு சான்றோர் அறிவுறுத்துவது செவியறிவுறூஉ எனப்படும். இதன் இலக்கணத்தை,*

மறந்திரி வில்லா மன்பெருஞ் சூழ்ச்சி
அறந்தெரி கோலாற்(கு) அறிய உரைத்தன்று[104]

*என்ற நூற்பாவினால் இலக்கண நூல் கூறுகிறது.*

*படையாண்மை, கொடையாண்மை, சொல்லாண்மை ஆகிய மூன்றாலும் சிறப்புற்று விளங்கியவன் தான் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் எனினும் உலகத்தார்க்கு ஆணியாக விளஙகும் உழவர் பெருமக்கள் பால் அவர் நாட்டம் கொள்ளாதிருந்தான். இதனால் உள்ளம் நொந்த வெள்ளைக்குடி நாகனார் என்னும் ஒரு தமிழ்ப் புலவன் அவ்வேந்தன்பால் சென்று 'செவியறிவுறூஉ' துறையில் அமைந்த ஓர் இனிய பாடலைப் பாடினர்.*

அரசெனப் படுவது நினதே பெறும!![105]

நாடெனப் படுவது நினதே . . .
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே!
நிவை கூறுவல் எவை கேண்மதி![106]

'முறை வேண்டியார்க்கும், குறை வேண்டியார்க்கும் முதலில் காட்சிக்கு எளியனாய் இருத்தல் வேண்டும். வேந்தே! நீ கொண்ட வெண்கொற்றக்குடை வெயிலை மறைப்பதற்காக உரியதன்று! அது வருந்தி வரும் குடிமக்களின் வருத்தத்தைப் போக்கி அருள் செய்வதற்காக உரியது! போர்க்களத்திலே நின் படை வீரர் பெற்றுத் தந்தார்களே வெற்றி அஃது எங்ஙனம் கிடைத்தது?'

"கலப்பை கிழித்த விளை வயலின் சாலிடத்தே விளைந்த நெல்லின் பயனால்தான் என்பதை மறவாதே! மழை பெய்யாது போயினும், விளைவு குறைந்து போயினும், உலகம் உன்னையே பழிக்கும். இதனை நீ நன்கு உணர்ந்தவன் என்றால் யான் கூறுவதைக் கேள்! மாறுபட்டோரின் பொதுமொழியை மனத்தில் கொள்ளாதே! உழவர் பெருங்குடியினரின் பொதுமொழியை மனத்தில் கொள்ளாதே! உழவர் பெருங்குடியினரை முதற்கண் பாதுகாத்து அதனால் ஏனைக் குடிமக்களையும் பசியின்றிப் பாதுகாப்பாயாக! இவ்வாறு செய்வாயானால் நின் ஆணைக்கு அடங்காதவர் கூட நின் அடியினைப் பணிந்து நின்னைப் போற்றுவர்!" என்றார்.

காவலர்ப் பழிக்கும் இக்கண் அகல் ஞாலம்
அ துநற்கு அறிந்தனை ஆயின் நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி
குடி புறந்தருகுவை ஆயின் நின்
அடி புறந்தருகுவர் அடங்காதோரே[107]

என்னும் பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றது.

தவறு செய்வோர் நாடாளும் வேந்தரேயாயினும் அதனைச்சுட்டிக் காட்டி நல்வழியில் செலுத்தும் பேராண்மை கொண்ட புலவர் பெருமக்களும் அன்றிருந்தனர். செவி கைப்படச் சொல்லும் அத்தகு புலவர்கள் மீது சீற்றங் கொள்ளாது பண்புடன் பொறுத்து நல்லன செய்யும் வேந்தர்களும் அன்றிருந்தனர் என்பதை இதனால் அறியமுடிகின்றது.

### 4.11. பரிசில் வாழ்க்கை

*சங்க காலப் புலவர்களின் வாழ்க்கையை நோக்குங்கால் அவர்களுள் பலர் மன்னர்களையும் வள்ளல்களையும் நாடிச் சென்று பரிசில் பெற்று வந்து தம் குடும்பத்தைக் காப்பாற்றிய செய்திகளை அறியமுடிகின்றது.*

*வாழ்க்கையை நடத்த அவர்கள் இத்தகைய பரிசில் ஒன்றனையே நம்பி இருந்தார்களா? இல்லை, வருவாய் தேடத் தமக்கென ஒரு தொழிலை வைத்திருந்தார்களா? என்பதை ஆராயும் பொழுது பலருடைய பெயர்களை வைத்துப் பார்த்தால் அவர்கள் தமக்கென்றும் தம் குடியை ஓம்பவும் ஒரு தொழிலைக் கொண்டிருந்தார்கள் என்பது தெரியமுடிகின்றது.*

1. *அரிசில் கிழார், ஆவூர் கிழார் - வேளாண் தொழில் செய்தோர் (கிழார் என்ற பின்னொட்டுப் பெயருடைய பலர் உள்ளனர்)*
2. *சாத்தனார் - வாணிகம் (சாத்தனார் என்ற பெயருடன் பலர் உள்ளனர்)*
3. *கணக்காயர் - ஆசிரியர்*
4. *மதுரை அறுவை வாணிகன், இளவேட்டனார் - அறுவை வாணிகர்.*
5. *கணியன் பூங்குன்றன் - கணியர்*
6. *உறையூர் மருத்துவன், தாமோதரனார் - மருத்துவர்*
7. *தங்கால் பொற்கொல்லனார் - பொற்கொல்லர்*
8. *வெண்ணிக்குயத்தியார் - குயவர்*

*இவ்வாறாகப் புலவர் பலர் தமக்கென்றும் தம் குடும்பத்தை ஓம்புதற்காகவும் தொழில் ஒன்றை மேற்கொண்டோராயினும் வறுமை வந்துற்ற காலை, பழுமரந்தோறும் பறவை போல மன்னர்களையும், வள்ளல்களையும் நாடிச் சென்று பரிசில் பெற்று வருவது அந்நாளைய வழக்கமாக இருந்தது.*

*பரிசில் வழங்கும் போது புலவருடைய தகுதி அறிந்து வழங்க வேண்டும். கொடுப்பவரைத் தேடிப் பல திசைகளிலிருந்தும் பலரும் வருவார்கள். அவர்கள் எல்லோரையும் ஓரே தட்டில் வைத்து நிறுத்தல் கூடாது. 'பத்தோடு பதினொன்று'*

*என்ற அளவில் புலவரை எண்ணக் கூடாது. அவர்களுடைய வரிசை அறிந்து பரிசில் வழங்க வேண்டும். இப்படி மலையமான் திருமுடிக்காரிக்கு கபிலர் அருமையாக அறிவுறுத்துவதை,*

ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்!
வரிசை அறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்
அதுநற்கு அறிந்தனை ஆயின்
பொது நோக்கு ஒழிமதி புலவர் மாட்டே![108]

*என்ற பாடல் வரியால் அறியமுடிகின்றது.*

*பரிசில் பெறச்செல்லும் புலவர் பெருமக்கள் தம்மை மதித்துப் பரிசு வழங்கப்படவில்லை என்றால் அந்தப் பரிசை ஏற்றுக்கொள்ள அவர்கள் உடன்படார். கொடுப்பவர்கள் எப்பேர்ப்பட்ட அரசராயினும் வலிமைமிக்க பேரரசராயினும் தம்மை மதிக்கவில்லையாயின் புலவர்கள் விருப்பமில்லாது கொடுக்கும் பரிசிலை வேண்டா என்று வெறுத்து நீக்கி விடுவார்கள் என பெருஞ்சித்திரனார் சுட்டுவதை,*

முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின்று ஈதல் யாம்வேண் டலமே[109]

*என்னும் வரியால் தெளியமுடிகின்றது. இவ்வாறு பரிசில் வாழ்க்கை மேற்கொண்டாலும் பண்டைய புலவர்கள் மான உணர்விலும், பெருமித வாழ்விலும் சிறந்து விளங்கினார்கள் என்பதை அறியமுடிகின்றது.*

### 4.12. புரவலரை மகிழ்வித்தல்

*தம் புரவலர்களை மகிழ்விக்க விரும்பிய புலவர்கள் அவர்களின் பண்புகளைக் கூறிப் பாராட்டுவர். புலவர்கள் புகழ்வதை மட்டுமின்றி சில நேரங்களில் அவர்தம் பகைவர்களை இழித்துப் பேசுதலையும் கொண்டனர். இங்ஙனம் பிறர்பழி கூறலையே கருவியாகக் கொண்டு வாழ்ந்தோர் ஒரு சிலர். இதனை,*

பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே[110]

என்ற ஊன்பொதி பசுங்குடையாரின் வரி உணர்த்துகின்றது. புரவலர்களை மகிழ்வித்தலுக்காக அவர்களின் பகைவர் ஈகையின் பெருமை அடைதல் ஆகாது எனவும் குறிப்பிட்டனர்.

புரவலர்களின் மனதில் இடம்பிடிக்க பகைவர்களின் நாட்டில் வளமும், அமைதியும் இல்லாமல் அழிய வேண்டும் என்றும், பகைவர் நாட்டில் அறம் நிலைத்து நிற்கலாகாது எனவும் கூறியுள்ளதை,

நரைமூதாளர் நாய் இடக் குழிந்த
வல்லின்நல் அகம் நிறைய பல் பொறிக்
கான வாரணம் ஈனும்
காடுஆகி விளியும் நாடு உடையோரே![111]

என்னும் பாடல் வரியால் இதனை உணரமுடிகிறது.

அரசர்களை மட்டுமின்றி அவர்தம் தேவியர்களையும் பாராட்டிப் பேசுவது புலவர் மரபாகத் தெரிகின்றது. அவர்களின் உடலழகு, நாணம், சொல் இனிமை, கற்பு ஆகிய பண்புகள் விதந்து போற்றப்படுகின்றன.

வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும் வயங்கிழை கரந்த
வண்டுபடு கதுப்பின் ஒடுங்கீரோதிக் கொடுங்குழை[112]

என்ற வரிகளில் புரவலரது அரசியின் உடலழகினை ஒரு புலவர் வர்ணித்துள்ளதக் காணமுடிகின்றது.

நாணுமலி யாக்கை வாணுதல் அரிவை[113]

என்ற வரிகளில் அரசியின் நாணம் என்ற குணத்தை எடுத்தியம்புவதை உணரமுடிகின்றது.

திருந்திய வியன்மொழித் திருந்திழை[114]

என்ற வரிகளில் அரசியின் சொல் இனியமையினைத் தெளிய முடிகின்றது. விரும்பத்தக்க அருந்ததியை வென்ற கற்பினள் என்று ஒரு அரசியின் பண்பினை,

பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்
கற்பு இறை கொண்ட கமழும்[115]

என்ற பாடல் வரிகள் சுட்டுகின்றன. மகளிர் பற்றிய இப்பாராட்டுரைகள் பெரும்பாலும் பதிற்றுப்பத்திலேயே காணப்படுகின்றன.

புலவர் பாராட்டுக்குரியனவாக அமைந்தவற்றுள் நாட்டின் வளமும் அமைதியான வாழ்வும் அடங்கும் மன்னனுடைய நல்லாட்சியைப் பாராட்டலே இவ்வுத்தியாகும். மன்னனுடைய நல்லாட்சியையும், கொடுங்கோல் ஆட்சியையும் நிர்ணயிக்கின்ற நிலை புலவரின் பாடலில்தான் இருந்துள்ளது எனவும், புரவலர்களைப் புகழ்ந்துரைத்து மக்களின் எண்ணங்களையும், தன்னுடைய எண்ணங்களையும் புலவர் தெரிவித்தனர் என உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுவதை,

அத்தம் செல்வோர் அறைத் தாக்கிக்
கைப்பொருள் வெளவும் களவுஏர் வாழ்க்கைக்
கொடியோர் இன்று அவன் கடியுடை வியன்புலம்
உருமும் உரறாது அரவும் தப்பா
காட்டு மாவும் உறுகண் செய்யா வேட்டாங்கு[116]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது. புலவர்கள் வாயிலாக மன்னர்களின் புகழ் பரவிற்று என அரிசில்கிழார் சுட்டுவதை,

மதில்வாய்த் தோன்றலீயாது தம்பழி ஊக்குநர்
குண்டுகண் அகழிய குறுந்தாள் ஞாயில்
ஆர்எயில் தோட்டி வெளவினை ஏறோடு
கன்றுடை ஆயம்தரீஇப் புகல் சிறந்து[117]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

புலவர் மொழிகளால் மன்னரின் புகழ் புலவர்கள் மூலம் பரவியமை அறியப்படும். எனினும் திட்டமிட்டுப் புகழ் பரப்பும் பணியில் ஈடுபட்டதாகக் கொள்ள முடியாது. புரவலர்களை மகிழ்வித்து பரிசில் பெற வேண்டும் என்ற எண்ணம் கிடையாது. மக்கள் நலமாகவும் வளமாகவும் வாழ வழி செய்யும் வேந்தரின் செயல்களைப் பாராட்டி வாழ்த்துவதையே புலவர்கள் நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.

## 4.13. மக்களின் பிரதிநிதியாகப் புலவர்

மக்களுக்காகவே புலவர்கள் மன்னனிடம் வாதாடினர். மன்னனுக்காக மக்களிடம் பிரச்சாரம் செய்யும் தேவை அன்று இருந்தமைக்குச் சான்றில்லை. அரசு என்னும் நிறுவனம் மக்களால் வெறுக்கப் பட்டதென்றோ, மக்கள் விருப்பத்திற்கு மாறாகவும் மன்னர் கருத்திற்கு ஏற்பவும் புலவர்கள் செயல்பட்டனர் என்றோகூறச் சங்கச் செய்யுள்களில் இடமில்லை.

மகட்பாற் காஞ்சித் துறையைச் சார்ந்த பாடல்கள், பேரரசர்களையும் தமக்குத் தாழ்ந்தோராகக் கருதி அவர்கட்குப் பெண்கொடுக்க மறுத்து அவர்களொடு போரிட்டு மடியும் மறக்குடியினரின் மறமாண்பு பேசுவனவாகும்.

புலவர்களால் மன்னர்களின் புகழ் பரவியது உண்மையெனினும் அவர்கள் திட்டமிட்டு அப்பணியைச் செய்யவில்லையென்று உணரமுடிகின்றது.

மன்னர்கள், புலவர்களின் சொல்லுக்குக் கட்டுப்பட்டுத் தம் தவறுகளைத் திருத்திக் கொண்டனர். அவர்களைத் தம் நண்பர்களாக ஏற்றுக் கொண்டனர். சில போது மிகைச் செயல்களையும் பொறுத்துக் கொண்டனர்.

மக்களின் எண்ணங்களை வெளிப்படுத்துவதற்காகவே புலவர்கள் மன்னர்களை வாழ்த்திப் பாடல்கள் பாடினர். மக்கள் நலன் கருதி வரிகளைச் சிறிது சிறிதாக வாங்க வேண்டும் என்றும், வாழ்வின் நிலையாமை நிலையினை உணர்த்தியும் மன்னனின் செயல்களை நல்வழிப்படுத்தும் நோக்கத்தோடும் சங்கப் புலவர்கள் பாடல்கள் இயற்றினர்.

வேந்தர்தம்மை வாழ்த்தியும், பாராட்டியும் மகிழ்வித்தமையோடு, தம்புகழ் பரவிடக் காரணமாகவும் இருந்த புலவர்கட்கு மன்னர்கள் பல சிறப்புக்களைச் செய்தனர் என்பதனைச் சங்க இலக்கியம் நன்கு விளக்கிக் காட்டியுள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 4.14. பெருமை சேர்த்த பெண்பாற் புலவர்கள்

சங்ககாலப் புலவர்கள் தங்களது திறனால் ஒருவருக்கொருவர் போட்டிப் போட்டுக் கொண்டுச் செய்யுள்களைப் படைத்து சங்கத்தமிழ் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்துள்ளனர்.

பெண்பாற் புலவர்கள் பெரிதும் பங்களித்திருக்கிறார்கள். பெண்களில் புலவர்கள் என்றாலே ஔவையார் தாம் நினைவுக்கு வருவார். ஆனால் அவர் மட்டுமல்லாது பல பெண்பாற் புலவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அழியாக் காவியங்களைப் படைத்து சங்கத்தமிழ் வளர்ச்சிக்கு உறுதுணையாய் இருந்துள்ளார்கள்.

#### 4.14.1. ஔவையார்

சங்ககாலத்துப் பெண்பாற் புலவர்களில் ஔவையார் தலைசிறந்து விளங்கியுள்ளார். அதிலும் குறிப்பாகச் சங்க காலத்துப் பெருமை பெற்று விளங்கிய ஔவையாரே சிறப்பாகப் போற்றப்படுகிறார்.

> ஔவையார் என்ற பெயர் பொதுவாகக் கூறப்படினும் இவர் ஒருவரல்ல, பலராவர் என்று தெளிவாகின்றது. சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார் ஒருவராகவும், சமயக் குரவர்களில் ஒருவரான சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தில் வாழ்ந்த ஔவையார் பிறிதொருவராகவும், கம்பர் பெருமான் காலத்தில் வாழ்ந்த ஔவையார் மற்றொருவராகவும், அதன் பின்னரும் ஓர் ஔவையார் தோன்றிப் பல அரிய நூல்களைப் படைத்ததாகவும் அறிகிறோம்.[118]

இங்குக் குறிப்பிடும் ஔவையார் சங்ககால ஔவையார் அதாவது புறநானூற்று ஔவையாரின் புலமைத்திறத்தினைக் காணலாம்.

##### 4.14.1.1. அஞ்சா நெஞ்சம்

சங்ககாலப் புலவர்கள் பரிசில் பெறுவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டு பாடியவர்கள் அல்லர். தவறு காண நேரின் நயமுடன் இடித்துரைத்தலின் வல்லவர்களாகத் திகழ்ந்ததைப் புறநானூற்றுப் பாடல்கள் பல சான்றுகள் காட்டுகின்றன.

*வறுமையில் வாடினாலும் தன் மானம் கெட்டும், தம் புலமைக்குரிய மதிப்பு கிடைக்காத இடத்தும் வரும் பரிசிலை விரும்பா வீரமுடையவர்களாகப் பண்டைய புலவர் விளங்கினர். அதியமானை முதன்முதலில் காணச் சென்ற ஔவையார் அவர் பரிசில் வழங்காது காலம் தாழ்த்திய போது தம் புலமை மீது கொண்ட நம்பிக்கையில் கற்றவருக்கே உரிய திமிர்ந்த ஞானச் செருக்கில் வெகுண்டு தம் உடைமைகளைத் தூக்கியதோடு நில்லாது கற்றவருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பதனைப் புலப்படுத்தினார். இதனை,*

அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென

வறுந்தலை உலகமும் அன்றே! அதனால்

காவினெம் கலனே, சுருக்கினெம் கலப்பை[119]

எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே[120]

*என்ற வரிகளால் சாடுவதைக் காணமுடிகின்றன. தன்மான உணர்வு மிக்கவராய் அஞ்சா நெஞ்சம் கொண்டு ஔவையார் விளங்கியதைப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.*

**4.14.1.2. நெல்லிக்கனி பெற்ற நிலை**

*கிடைத்தற்கரிய நெல்லிக்கனி கிடைக்கப் பெற்றும் அதனைத் தான் உண்ணாது தமிழை வாழ வைக்கும் மூதாட்டியான ஔவை நீண்ட காலம் வாழ வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தில் கனியின் பெருமையைக் கூறாது ஔவைக்களித்தான் அதியன். நெல்லிக்கனியின் சிறப்பை, உண்டபின் அறிந்த ஔவை தமக்கென முயலாத் தன்மையாளனான அதியனைப் பாராட்டுகிறார். இதனை,*

சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது

ஆதல்நின் அகத்து அடக்கி

சாதல்நீங்க எமக்கு ஈத்தனையே![121]

*என்னும் பாடல் வரிகளால் தெளியலாகும். அதியனின் செயற்கரிய செயலைக் கண்டு, விடமுண்டு மக்களைக் காத்தருளிய அருளாளனான சிவனோடு ஒப்பிட்டு வாழ்த்துகின்றார் ஔவையார். இதனை,*

நீலமணி மிடற்று ஒருவன்போல

மன்னுக பெரும![122]

*என்ற பாடல் வரிகள் காட்டுகின்றன.*

ஔவையின் புலமைச் சிறப்பு போற்றப்பட்டது தெளிவாகின்றது. அரிய நெல்லிக்கனியைப் பெற்றது திறமையுள்ள பெண்ணுக்கு முதலிடம்-சிறப்பிடம் தரப்பட்டதையும், தமிழ்ப் புலவரிடம் அதியன் காட்டிய பேரன்பையும் உணர்த்துகின்றது.

### 4.14.1.3. சிறந்த அரசியல் தூதர்

தூது செல்பவருக்குரிய குணங்களைக் கொண்டு சொல்வன்மையுடன் தொண்டைமானுக்கும் அதியமானுக்கும் நடைபெறவிருந்த போரைத் தடுத்து நிறுத்திய பெருமைக்குரியவராகவும் இலங்குகின்றார் ஔவையார்.

தொண்டைமானின் படைக்கலன்கள் போரில் பயன்படுத்தாக் காரணத்தால் அலங்கரிக்கப்பட்டு அழகுடன் காட்சியளிப்பதையும், அதியனின் படைக்கலன்கள் அடிக்கடி போரில் பயன்படுத்திய காரணத்தால் கூர்முனை சிதைந்து கொல்லன் உலையிலே கூர்மைபடுத்தக் கிடக்கின்றன எனப் புகழ்வது போல பழித்தப் பாடிய திறம் அவரது நாவன்மையைக் காட்டுகின்றது.

இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டி
கண்திரள் நோன்காழ் திருத்தி, நெய் அணிந்து
கடியுடை வியல் நகரவ்வே, அவ்வே
பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து
கொல் துறைக் குற்றிலமாதோ[123]

என்ற பாடல் வரிகள் இச்சூழலைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

> ஔவைக்கு நிகரான ஒரு பெண்பாற்கவி உலக நாடுகளிலும் தோன்றியதில்லை என்பதற்கு அம்மூதாட்டியார் தொண்டைமானிடம் சென்ற தூது வெற்றி பெற்ற நிகழ்ச்சி ஒன்றே போதுமானதாகும்[124]

என ம.பொ.சிவஞானம் பாராட்டுகின்றார். அரசியலில் முதிர்ச்சி உடையவராய்த் தூது செல்வதில் திறமை படைத்தவராய் ஔவை மிளிர்ந்ததை இந்நிகழ்வு தெளிவாக்குகின்றது.

### 4.14.1.4. சொல்லாட்சித் திறன்

நாளும் அன்றாட வாழ்வில் காணும் சொற்கள் கூடக் கவிஞனின் கரம்பட்டதும் மந்திர சக்தி பெற்றவையாக மாறிவிடுகின்றன. அந்த வகையில் ஔவையின் பாடல்களில் சொற்கள் சொல்லோவியமாய்க் காட்சியளிப்பதைக் காணமுடிகின்றன.

தமிழர்களின் தலையாய பண்பாகிய விருந்தோம்பலில் அதியன் சிறந்திருக்கும் நிலையை ஒரு நாள், இருநாள், பல நாள், தலைநாள் என்ற எளிய சொற்கள் எடுத்துரைக்கின்றார்.

ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று, பலரொடு செல்லினும்
தலை நாள் போன்ற விரும்பினள் மாதோ.[125]

வறுமை நீங்க அதியனின் கொடைத்திறன் பயன்பட்ட திறத்தைப் பாடுகின்றார்.

உண்டாயின் பதம் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்[126]

உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்[127]

போன்ற வரிகளால் ஔவையாரின் சொல்லாட்சித் திறன் வெளிப்படுகிறது.

அதியனின் வீரச்சிறப்பைப் புலப்படுத்த வானில் சூரியன் எழும்போது இருளும் தோன்றுமா? எனவும், போர்க்களத்தில் நீ புகுந்தால் பகை வரும் எதிர் நிற்பார்களோ? எனவும் இயம்புவது ஔவையின் சொல்லாட்சித் திறனைப் பறைசாற்றுகின்றது. இதனை,

இருளும் உண்டோ, ஞாயிறு சினவின்[128]

பொருநரும் உளரோ, நீ களம் புகினே?[129]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

அதியன் யானை, குதிரை, வேல் ஆகியவற்றைச் செலுத்துவதில் மிகச் சிறந்த வீரன் என்பதை,

இனக் களிறு செலக் கண்டவர்[130]

இனநல்மாச் செலக் கண்டவர்[131]

தோல் செறிப்பின் நின்வேல் கண்டவர்[132]

என்னும் தொடர்களில் வியந்துக் கூறுவதைக் காணமுடிகின்றது. கண்டவர் என்ற சொல்லை அடுத்தடுத்து பாடலில் பயன்படுத்தி நம் கண்முன் அதியனின் வீரத்தையும், வல்லமையும் காட்சிப்படுத்துவதில் வல்லவராக ஔவை திகழ்கின்றார்.

`ஞெலிகோல்' என்ற சொல் வாயிலாக அதியனின் ஆற்றல் எப்படிப்பட்டது என்பதைத் தெரிவிக்கின்றார். இதனை,

இல்இறைச் செரீஇய ஞெலிகோல் போல[133]

என்ற வரியால் உய்த்துணர முடிகின்றது. புலவர்களின் வாழ்க்கை வறுமையுற்றது என்பதை,

வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை[134]

என்ற எளிய தொடரால் புலப்படுத்துகின்றார்.

மழலையின் மொழியினை விரும்பாதவர் உலகில் எவரும் இல்லை. அத்தகைய மழலையின் மொழியைப் போல் தம் வாய்ச் சொற்கள் இனிமையுடையவனாகக் கருதுவதால்தான் அதியன் அன்பு செலுத்துகின்றான் என்று கூறுவதன் வழி இருவருக்கும் இருந்த நட்பின் சிறப்பை எடுத்துரைக்கின்றார். இதனை,

யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா;
பொருள் அறிவாரா; ஆயினும் தந்தையர்க்கு
அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லும் அன்ன - ஒன்னார்
கடி மதில் அரண் பல கடந்த
நெடுமான் அஞ்சி! நீ அருளன்மாறே[135]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றன.

எளிய சொற்களைக் கொண்டு அதியனின் இயல்புகளையும், தமக்கும் அதியனுக்கும் உள்ள நட்பு எத்தகையது என்பதனையும் ஆற்றல் படப் பாடுவதில் வல்லமை வாய்ந்தவராக ஔவையார் மிளிர்வதை இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### 4.14.2. நப்பசலையார்

சங்கப் பெரும் புலவர்களுள் ஒருவராக நப்பசலையார் போற்றப்படுகிறார். இவர் பசலை என்னும் அகத்திணையில் அமைந்த நோய் பற்றிச் சிறப்பாகப் பாடிய காரணத்தால் இப்பெயர் பெற்றார் என்று கூறப்படுகிறது. இவருடைய இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. இவர் பாடலில் பசலை பற்றிக் குறிப்பிடும்போது,

மணிமிடை பொன்னின் மாமை சாய
என் அணிகலம் சிதைக்குமோர் பசலை[136]

என்னும் பாடல் வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றன.

பாண்டி நாட்டிலுள்ள கொள்கையின் பக்கத்தில் உள்ள நாடு அக்காலத்தில் மாறோக்கம் என்னும் பெயர் பெற்று விளங்கியது. இந்த மாறோக்கத்தைச் சார்ந்த புலவரானதால் மாறோக்கத்து நப்பசலையார் என்று அழைக்கப்பட்டார்.

இவர் சங்க இலக்கியத்தில் எண்ணற்ற பாடல்களைப் பாடியிருந்தாலும் நமக்கு எட்டுப் பாடல்களே கிடைத்துள்ளன. நற்றிணையில் ஒன்றும் புறநானூற்றில் ஏழும் கிடைத்திருக்கின்றன.

#### 4.14.2.1. அறம் உரைத்த அறிவாளர்

சோழ மன்னன் கிள்ளிவளவன் பெரும்புகழ் பெற்றவனாவான். அவனுடைய உயர் குணத்தையும் ஒப்புரவுத் தன்மையையும் நன்கறிந்தவர் நப்பசலையார். சிறந்த பெருமைக்குரிய மன்னனாக விளங்கி வந்தான் கிள்ளிவளவன். இவன் போர்கள் பல புரிந்து பெருமை கொண்டவனாவான். அவன் அப்போது உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டு வந்தான்.

இம்மன்னனுடன் நட்பு கொண்டு புகழ் பெற்று விளங்கியவர்களில் மாறோக்கத்து நப்பசலையாரும், ஆலத்தூர் கிழாரும் அடங்குவர்.

வீரத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்த கிள்ளிவளவன் ஒருமுறை கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த சேர மன்னன் ஒருவனை வெற்றி கொண்டான். சேர மன்னனும் கிள்ளி வளவனைப் போன்று படைபலம்

மிக்கவனாவான். அந்த வெற்றியையும் கொடைத் தன்மையும் செங்கோலின் சிறப்பையும் ஒரு சேரப் புகழ்ந்து நப்பசலையார் பாடி மகிழ்ந்தார்.

"புறாவின் துயரம் களைய வேண்டியத் தன்னையே ஈந்த சிபியின் வழி வந்தவன். வந்தவர்களுக்கெல்லாம் பொருட்களை வாரி வழங்கும் உயர்தன்மை உனக்குப் புகழாக அமையாது. வானிலுள்ள தூங்கெயிலை அழித்த உன் முன்னோருடைய செயலுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது இங்குள்ள பகைவர்களை அழித்து வெற்றி கொள்வது என்பது ஒரு வெற்றியாகவே கருதப்பட மாட்டாது. உன் புகழ் எல்லாம் உன் முன்னோர்களிடத்தும் காணப்பட்ட புகழேயாகும். எனவே உன் புகழ் என்று எதை நான் பாடி மகிழ்வேன்.

கிள்ளிவளவனின் மூதாதையரைப் பற்றிச் சிறப்புடன் கூறி அவர்கள் வழிவந்த வளவனும் நேர்மை தவறாமலும், நீதி வழியில் வாழ்வது அனைத்துமே பரம்பரை பரம்பரையாக வந்த ஒன்றேயென்று அவனைப் புகழ்ந்து கூறுகிறார். இதனை,

புறவின் அல்லல் சொல்லிய கறை அடி
யானைவால் மருப்பு எறிந்த வெண் கடைக்
கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக!
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடு கெழு நோன் தாள் பாடுங்காலே?[137]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றன. புரவலனாகிய மன்னனைப் புகழ்ந்து பாடும்போதும் கூட முன்னோர்கள் போன்று அறநெறி தவறாது நீதி செலுத்த வேண்டும் என்ற அறிவுரையை அன்புரையாக அளித்தனர் என்பது புலனாகிறது.

**4.14.2.2. புலமைக்குக் கிடைத்தப் பொறுப்பு**

புலவர்களும் பரிசிலரும் கிள்ளிவளவனுடைய அரண்மனைக்குள் எப்போதும் வந்த வண்ணமும் சென்ற வண்ணமும் இருந்தனர். இதைப் பல நாட்கள் கண்பட நேராகவே கண்டவர் நப்பசலையார்.

இவ்வாறு எப்போதுமே தங்க தடையின்றிப் புலவர்கள் மற்றும் பரிசிலர் வருகிறார்களே, பகைவர்களும் இவ்விதமாகப் புலவர் வேடத்தில் வந்துவிடக் கூடாதே என்று புலவர் கவலை கொள்ளுகிறார்; அவனுக்குத் தீங்கு வந்துவிடக் கூடாதே என்று அஞ்சி அவருடைய எண்ணத்தை அவனிடமே கூறியும் விடுகிறார்.

இவ்விதம் நப்பசலையார் கூறவும், தம்மீது உண்மையான அக்கறையுடன் கூறிய நப்பசலையாரிடம் கவலை கொள்ள வேண்டாம் என்றும், அத்தகைய வஞ்சகர்கள் இங்கு இல்லை என்றும் அஞ்ச வேண்டாம் என்று அரசன் கிள்ளிவளவன் கூறுகிறார்.

நப்பசலையாரின் சிறந்த புலமையைக் கண்டு வியந்த கிள்ளிவளவன் அவரைத் தன்னுடைய அவையை அலங்கரிக்க வேண்டும் என்றும், வேறு எங்கும் செல்ல வேண்டாம் என்றும் அன்புடன் கேட்டுக் கொண்டான். புலவரும் அதற்கு இசைவு தெரிவித்து அங்கேயே தங்கி விடுகிறார். இவர்தம் புலமையால், பெரிய பொறுப்பே பரிசிலாக அமைந்ததை இவண் காணமுடிகின்றது.

### 4.15. புலவரைப் புலவர் போற்றுதல்

மலையமான் திருமுடிக்காரி என்பவன் முள்ளூர்க்கு வேந்தனாக விளங்கினான். அவன் குறுநில மன்னனாக விளங்கினாலும் பெருவீரனாகத் திகழ்ந்து வந்தான். இவன் பெரும் வள்ளலாகச் சிறந்து விளங்கியவனாவான்.

திருமுடிக்காரி ஒருமுறை அதியமான் நெடுமான் அஞ்சியிடம் தோற்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆகவே அவன் திருக்கோவலூரை இழந்தான். பின்னர் சேரமான் பெருஞ்சேரலிரும்பொறையின் துணையை நாடி நின்றான். அப்போது ஓரி என்னும் குறுநில மன்னன் இரும்பொறையின் எதிரியாக இருந்தான்.

சேரலிரும்பொறையின் அன்பைப் பெற ஓரியைக் கொன்று கொல்லிமலையை உரிமையாக்கினான். ஆகவே சேரமான் தகடூரில் படையெடுத்துச் சென்று அதியமானை அழித்து காரி இழந்த நாட்டை மீட்டுக் கொடுத்தான். நப்பசலையார்

அந்தத் திருமுடிக்காரியின் அன்பைப் பெற்றவராவார். பெரும்புலவர் கபிலர் திருமுடிக்காரியைப் பாராட்டிப் பாடியுள்ளார். அதை மனதிற்கொண்டு புலவர் நப்பசலையார் காரியைப் புகழ்ந்து பாடினார்.

பெரும்புலவராகிய அந்தணர் கபிலர் உம்மை புகழ்ந்து பாடிவிட்டார். இனி என் போன்ற எளிய புலவர்கள் என்னவென்று உன்னைப் பாடுவோம். சேரன் துறைமுகத்தில் பொன்னை நிறைந்த அளவில் ஏற்றி வரும் கப்பல்கள் வந்து சேர்ந்த பின்னர் வேறு மரக்கலங்கள் எவ்வாறு செல்ல இயலும்? அதைப் போலக் கபிலர் பாடிய பின்னர் வேறு யார் பாடி என்ன சிறப்பு வந்து சேரும்? இருந்தாலும் எம்முடைய வறுமை போக உன்னைப் புகழ்ந்து பாடலுற்றேன் என்று பாடிமுடிக்கிறார்.

புலவர் பெருமான் கபிலரைப் பற்றிப் பெருமையுடன் குறிப்பிடுகிறார் என்பதனை,

நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற அந்த ணாளன்[138]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகிறது. புலவரைப் புலவர் பாராட்டுவது என்பது இப்புலவரின் உயர்ந்த மனத்தைக் காட்டுவதாகும்.

கல்வியில் ஏற்றம் பெற்றவர்களாகச் சங்க கால மகளிர் இருந்ததை ஏறக்குறைய நாற்பது பெண்பாற் புலவர்களின் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. ஆதிமந்தியார், பாரிமகளிர், பெருங்கோப்பெண்டு ஆகியோர் அரசகுல கவியரசிகளாகவும், ஔக்கூர் மாசாத்தியார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், காவற்பெண்டு, நக்கண்ணையார், பொன்முடியார், வெண்ணிக்குயத்தியார், வெள்ளிவீதியார், வெறிபாடிய காமக்கண்ணியார் போன்ற பிற குலக்கவியரசிகளும் பாடல்கள் இயற்றியுள்ளமை மகளிரின் கல்வித்திறத்தைப் பறைசாற்றுகின்றன என்பதைத் தெளிவாக்குகின்றன.

### 4.16. புலமையின் பெருமை

புலமைக்குப் பெருமையும், மதிப்பும் இருந்த காலம் சங்க காலம். சங்கப் புலவர் வாழ்வு செம்மையுடையது; சீர்மிகு பண்புடையது. உரிமை காரணமாக மன்னனை அவன் என்றும், புலவரை அவர் என்றும் வழங்கியிருப்பதை நோக்கப் புலவர்க்கிருந்த மேன்மை அறியமுடிகின்றது.

தமிழ்ப் புலவர்களால் பாடப்பெறுவதையே தனக்குரிய தகுதியாக மன்னன் நினைத்தான். அறிவின் வெளிப்பாடு தான் புலமை, அப்புலமையைத் தன் வாயினுள் தாளமிடும் நாக்கினால்தான் வெளிப்படுத்த இயலும். புலவர் நாவிற்கு மதிப்பிருந்த காரணத்தாலேயே புலவர்கள் தங்களைப் பெருமையாக எண்ணிக் கொண்டதுண்டு.

அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர்நா[139]
செந்நா[140]
பொய்யாநா[141]
நாநவில் புலவர்[142]

என்ற பாடல் வரிகளில் புலவர் நா பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

இவ்வரிகள், புலவர் தொழிலையும், அவர்தம் நாவின் மேன்மையும் சிறப்பிக்க வந்தனவாகும். புலவர்கள் மன்னனைப் போற்றிப் புகழ்ந்து உரைத்தனர். ஆயினும் மன்னன் அறநெறி தவறும் போது ஓரளவு இகழ்ந்து உரைப்பதற்கும் அவர்கள் தயங்கியதில்லை.

மன்னன் ஒருவன் இறந்து விட்டான். இதனை அறியாத சிலர் அவனைப் பார்க்கச் சில நாள்கள் கழித்து வந்தனர். அம்மன்னன் எங்கே என்று வினவ அதற்குரிய விடையாக 'புகழை மண்ணில் நாட்டி விட்டு புலவர் நாவிலே நிலை பெற்றான்' என்கிறார் பாலை பாடிய பெருங்கடுங்கோ. இதனை,

சேண்விளங்கு நல்விசை இறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே[143]

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

*மன்னர்களைப் புலவர்கள் புகழ்ந்துரைப்பதனையும் பாணர்கள் உயர்ச்சியோடு புகழ்வதனையும் புறப்பாட்டில் காண்கிறோம். அளவாகப் புலவர்கள் பாடியதற்கும், அளவுகடந்து பாணர் முதலியோர் புகழ்ந்தமைக்கும் வேறுபாடு உண்டு. பொய்ம்மையாக புகழ்ந்துரைத்த நிலையையும் ஊகிக்க முடிகின்றது.*

*எம் நா இல்லாததையெல்லாம் கூறிப் பொய்ம்மையைப் புகழாது என வன்பரணர் கூறியுள்ளார்.*

பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்

செய்யா கூறிக் கிளத்தல்

எய்யா தாகின்றது எம்சிறு செந்நாவே[144]

*என்ற செய்யுள் வரியால் இதனைத் தெளிய முடிகின்றது. இதனை நோக்க, பொய்மை கூறும் புலவர்களும் இருந்துள்ள காரணத்தால் தான் புலவர் இவ்வாறு சொல்ல நேரிட்டது என்பதை உணரமுடிகின்றது.*

*மன்னர்கள் தாம் புலவர்களால் புகழப்படுவதை மிகவும் விரும்பினர். அதனை மாபெரும் தகுதியாகவும் கருதினர். புலவரால் சிறப்பித்துப் பாடும் புகழுடையோருக்கே தேவருலகு கிட்டும் என்று நம்பிக் கூறியதை அறியமுடிகிறது.*

புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்

வலவன் ஏவா வான ஊர்தி

எய்துப . . . . . . . . . .[145]

*என்ற பாடல் வரிகளால் இதனைக் காணமுடிகின்றன.*

*கல்வி, கேள்வி, அறிவுமிக்க புலவரினம் செம்மாந்து ஒழுகும் திறனுடையது. வையகம் தன் புலமைக்கு வணங்க வேண்டுமென எதிர்பார்க்கும் இயல்புடையது. புற்கை உண்ணும் எளிய நிலையிலும் பிறர் தாள் பணிந்து பொருள் இரவாச் சால்புடையது. உடுத்த கூறை கிழிந்து நைந்திருப்பினும் உள்ளத்தில் மான மாண்பு குன்றாத் திறமுடையது. போர்ப்படையுள் பெருவில் களிற்றுப்படையெனத் தறுகண்மை மிக்க புலவரினம் அஞ்சுதலும் கெஞ்சுதலும் அறியாதது ஆகும்.*

### 4.17. தற்பெருமையில்லாத் தன்மை

*புலவர்தாம் பெற்ற விச்சை வன்மையைப் பிறர்க்கு எடுத்துரைத்து யாம் இன்னேம் என மொழிதல் தற்புகழ்ச்சி ஆகாது. அறியார்க்குத் தம் திறலை வெளிப்பட உரைத்தல் தானே முறைமை? பவணந்தி முனிவர் நன்னூலின் சிறப்புப் பாயிரத்தில்,*

மன்னுடை மன்றத் தோலை தூக்கினும்
தன்னுடை யாற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலைப் பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும்புல வோற்கே![146]

*என்ற பாயிரத்தில் இதனைப் பற்றிப் பேசுகிறார்.*

*இதில் தகுதி வாய்ந்தோர் தம்மைப் புகழ்ந்து கொள்ளுதற்குரிய இடம் மொழிவர். மன்னர் அவைக்குள் கேளாது புகுதல் புலவர்க்குரிய உரிமையாகும்.*

*இளதத்தனார் என்ற புலவரை ஒற்றன் எனக் கருதிச் சிறையிட்ட மன்னன் நலங்கிள்ளி செயலைக் கோவூர்கிழார் தவறு எனச் சுட்டிக்காட்டிப் புலவரைச் சிறையிலிருந்து விடுவித்த வரலாறும் உண்டு. எனவே புலவர் பாடும் புகழை அரசர் பெரிதும் விரும்பிய நிலையில் அவர்களை அரசவையில் வரவேற்றுப் போற்றினர் என மதுரைக்குமரன் சுட்டுவதை,*

எங்கோன் இருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்மன் நாளவை அண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை இரவலர்க் கெளிதே![147]

*என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.*

### 4.18. அஞ்சாமை

*நாடாளும் மன்னராயினும், நாற்படை பெருமையராயினும், அவர்க்கஞ்சி ஒழுகும் இயல்பு புலவர்க்கில்லை. சோற்றுக்கும், பொருளுக்கும் தம்மை விற்றுக் கொள்ளும் இழிதகவை புலவர்கள் அறியார். அதியமான் பரிசில் நீட்டித்த போது ஔவையார் அதியமான் தன் தரத்தையும் என் தரத்தையும் அறியவில்லை போலும்*

என்று கூறியதோடு, தச்சச்சிறுவர் காட்டுக்குச் சென்றால் மரம் கிடைப்பது போல எமக்கும் திசையெங்கிலும் சோறு கிடைக்கும் என மொழிவதை,

மரங்கொல் தச்சன் வைகல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே?[148]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றன.

இரு நாட்டு மன்னர்கள் போரிட்டு அதில் ஒருவன் வெற்றி பெறுகிறான். மற்றவனுக்கு இழப்பு நேரிடுகிறது. புலவர் பெருமக்களும் வெற்றி பெற்ற மன்னனிடம் சென்று பாடி பரிசில் பெற்றுத் திரும்புகின்றனர். இது இயல்பாக நிகழ்கிற செயலாகும். பகைவருடைய நாட்டைக் கைப்பற்றி அந்நாட்டு மக்களுக்குத் துன்பத்தை விளைவிக்கின்றாயே! இது முறையாகுமா? என்று பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் கேட்கும் துணிவை உடையவராக நெட்டிமையார் இருந்திருக்கிறார். இதனை,

அறனோ மற்றுஇது - விறல் மாண்குடுமி!
இன்னா ஆகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்தி, நின் ஆர்வலர் முகத்தே?[149]

என்ற பாடல் வரிகளால் இதனைக் காணலாம்.

'யாது காரணத்தினாலோ மிரண்டு போன குருவிக்கூட்டம் மலைமீது அமர்ந்திருக்கும் காட்சியைப் போல' போர்க்களத்தில் உள்ள யானையின் மீது அம்புகள் தைத்துக் கொண்டிருக்கிறது. யானையின் துதிக்கையானது வெட்டுப்பட்டு கீழே விழுந்து துடித்துக் கொண்டிருக்கிறது. இக்காட்சி நிலத்தின் மீது கிடக்கும் ஏர்க்கலப்பையைப் போன்று உள்ளது. இப்படிப்பட்ட காட்சிகளுக்குக் காரணமான எம்முடைய தலைவரும், எம்முடைய புதல்வர்களும் களத்தில் சிதைந்து போய் கிடக்கின்றனரே என்று முதுபெண்டிர் அழும் ஓலத்தைக் கேட்ட எமனும் அஞ்சிப் போர்க்களத்தை விட்டுச் சென்றான். இப்படிப்பட்ட பேரழிவுகளுக்குக் காரணமானவன் நீயே! என்று பாண்டியன் நெடுஞ்செழியனைப் பார்த்து குடபுலவியனார் பாடியுள்ளார். இதனை,

. . . . . . . . மயங்கிக்

குன்றத்து இருந்த குரீஇ இனம் போல

அம்பு சென்று இறுத்த அரும்புண் யானைத்

தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து

நாஞ்சில் ஒப்ப, நிலம் மிசைப் புரள

. . . . . . . . . . .

மூதிற் பெண்டிர் கசிந்து அழ, நாணிக்

கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை,

எழுவர் நல்வலம் கடந்தோய்! நின்

கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே?[150]

என்னும் பாடல் வரிகளால் உய்த்துணர முடிகின்றது.

தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட எல்லையை விரிவுபடுத்தும் பொருட்டு மற்ற அரசர்களுடன் வீம்புக்குப் போரிடும் எண்ணத்தை அறிந்து, அவ்வரசனுக்கு அறிவுரைகளைக் கூறித் தடுத்தவர்கள் புலவர்கள். தாக்குதலை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றதைப் போற்றவும் தவறவில்லை என்பதைப் புறநானூற்றுப் பாடலில் வெளிப்படுத்துகின்றனர்.

### 4.19. போரிலும் பரிசில்

சங்க வேந்தர்கள் போருக்குச் செல்வதற்கு முன் வீரர்களுக்குப் பரிசில் அளிப்பதும் உண்டு என நெடுங்கழுத்து பரணர் குறிப்பிடுவதை,

கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன்தலை

மணிமருள் மாலை சூட்டி அவன்தலை

ஒரு காழ் மாலை தான் மலைந்தனனே?[151]

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. போரில் தோற்ற வேந்தர்கள் அரசனின் முடியால் கழல் செய்து அணிந்து கொண்டு பரிசில் வழங்கினர். இதனை,

முடிபுனைந்த பசும்பொன் நின்

அடிபொலியக் கழல் தைஇய[152]

என்ற பாடல் வரிகளால் உணரமுடிகிறது. போரில் இறந்தவர்களுக்காக அவர்கள் குடும்பத்தினருக்கு ஊர்கள் பரிசளிக்கப்பட்டன எனச் சாத்தந்தையார் குறிப்பிடுவதை,

நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை

நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதல் புரளும்

தண்ணடை பெறுதல் யாவது? படினே[153]

என்னும் பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

போரில் தன் வலிமையைக் காட்டிய வீரனுக்கு ஏனாதி என்ற பட்டம் அளிக்கப்பட்டது. ஏலாதி திருக்கிள்ளி என்ற பெயர் புறநானூற்றில் காணப்படுகிறது. ஒருவன் சோழ அரசர்க்குப் படைத்துணையாய்ப் பல போர்களைச் செய்து மேம்பட்டவன் என மதுரைக்குமரன் வெளிப்படுத்துவதை,

நீயே அமர்காணின் அமர்கடந்து அவர்

படை விலக்கி எதிர் நிற்றலின்

. . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . வெல்போர்க்

கழல் புனைதிருந்து அழக் கடுமான் கிள்ளி!

நின்னை வியக்கும் இவ்உலகம்[154]

என்னும் பாடல் வரிகளால் தெளிய முடிகிறது.

போரின் தொடக்கத்திலும் முடிவிலும் விருந்தளிக்கப்பட்டது என மதுரைப் பேராலவாயர் குறிப்பிட்டுள்ளார்.

நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்;

பாசுவல் இட்ட புன்காற் பந்தர்ப்

. . . . . . . . . . . . . . . . . .

உழையோர் தன்னினும் பெருஞ் சாயலரே[155]

என்னும் பாடல் வரியால் காணமுடிகிறது.

இவ்வாறாகப் போரின் தொடக்கத்திலும் முடிவிலும் போருக்காகவும் பரிசில் நல்கியதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

**4.20. வேந்தரைப் புகழும் போது சமூகக் கோட்பாடுகளைக் குறிப்பிடல்**

புலமையாளர்கள் மன்னரைப் புகழும்போது கூடவே சமூக நலனுக்காக கருத்துக்களைக் குறிப்பிட்டு அவர்களை நல்வழிப்படுத்திட முனைவார்கள்.

பாண்டியன் கருங்கை ஒள்வாட்பெரும்பெயர் வழுதியை இரும்பிடர்த் தலையார் புகழ்ந்து பாடும்போது இரவலர்க்கு உதவுவதும், அதனால் வரும் புகழையும் விட சொல் தவறாத வாய்மையால் உண்டாகும் புகழே சிறந்தது என்று செறியறிவு உறுத்துவதை,

நிலம் பெயரினும் நின்சொல் பெயரல்[156]

என்னும் பாடல் வரியின் மூலம் தெளிய முடிகின்றன.

சேரன் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையை நரிவெரூ உத்தலையார் பாடும்போது 'நிரயங்கொள்ளும் சிற்றினத்தைச் சேராது குழந்தை வளர்ப்பவனைப் போல' நாட்டைக் காக்கவேண்டும் என்று அறிவுறுத்துவதை,

நிரயம் கொள்பவரொடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி!
அளிதோ தானே அதுபெறல் அருங்குரைத்தே[157]

என்னும் பாடல் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்குக் குடபுலவியனார் அறிவுரை வழங்கும்போது மறுமையின்பம் பெற வேண்டினும், இம்மையில் சிறந்த பேரரசனாகத் திகழ வேண்டினும் நாட்டில் நீர் நிலைகளை மிகுதியாக அமைக்க வேண்டும், உலக உயிர்களுக்கெல்லாம் உணவைக் கொடுப்பவர்களே உயிர் கொடுப்பவராவார் என்று குறிப்பிடுவதை,

செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலம் காவலர் தோள் வலி முருக்கி
ஒரு நீ ஆகல் வேண்டினும் சிறந்த
நல்இசை நிறுத்தல் வேண்டினும் மற்று அதன்
தகுதி கேள், இனி மிகுதியாள!

நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே[158]

என்னும் பாடல் வரிகளால் தெளியமுடிகிறது.

சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடும் போது நீ பெற்ற செல்வம் அறம், பொருள், இன்பங்களை ஆற்றுவதற்காகவே எனக் குறிப்பிடுகிறார். இதனை,

அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்

ஆற்றும் பெரும! நின் செல்வம்

ஆற்றாமை நிற் போற்றாமையே[159]

என்னும் பாடல் வரிகளால் காணலாம்.

### 4.20.1. நல்வாழ்விற்கான கருத்துகள்

சில புலவர்கள் மனித இனத்திற்குத் தேவையான நல்ல கருத்துக்கள் சிலவற்றைத் தனியாகவே பாடியிருக்கின்றார்கள். அப்பாடல்களில் அவர்கள் தனி மனிதர்கள் யாரையும் போற்றிப் புகழாதது குறிப்பிடத்தக்கது.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், உலக மக்கள் அனைவரிடம் உள்ள செல்வங்கள் அனைத்தும் அவரவர்களுக்கு உண்பதற்கும், உடுப்பதற்கும் போக மீதமுள்ளவை அனைத்தும் பொருள் இல்லாமல் இரப்பவர்களுக்கு வழங்கி உதவுவதற்காகத்தான். அதை விடுத்துத் தங்களின் தேவை போக எஞ்சியுள்ள செல்வங்களையும் வைத்துப் பல ஆண்டுக் காலம் வாழலாம் என்றிருந்தால் அச்செல்வங்கள் அவரால் அனுபவிக்க முடியாமல் அழிந்து விடும் என்ற கோட்பாட்டை குறிப்பிடுகிறார். இதனை,

உண்பது நாழி உடுப்பவை இரண்டே

பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே

செல்வத்துப் பயனே ஈதல்

துய்ப்பேம் எனினே தப்புந பலவே[160]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றன. கணியன் பூங்குன்றனார் மொழி, இனம், சாதி, நாடு போன்ற வேறுபாடுகளைக் கடந்த ஒருமைப்பாட்டை விரும்புகின்றார்.

யாதும் ஊரே யாவரும் கேளிர்[161]

என்னும் பாடல் வரியால் இதனை உணரமுடிகின்றன. சான்றோர்களை நோக்கிக் கூறுவது போல நன்மை செய்யாவிடினும் தீமை செய்யாதிருத்தலே சிறப்பாகும். இதனை,

நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல்லோம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியும் ஆறும் அதுவே[162]

என்ற பாடல் வரிகளால் காணமுடிகின்றன.

இதனால் சங்ககாலப் புலவர்களில் சிலர் எந்த ஆட்சியாளர்களையும் புகழ்ந்து பாடுவதை நோக்கமாகக் கொள்ளாமல் எக்காலத்துக்கும், எந்நாட்டிற்கும் தேவையான மக்களின் நல்வாழ்வுக்கான கருத்துக்களைப் பாடுவதிலும் நாட்டம் கொண்டிருந்தனர் என்பது தெரியவருகின்றது.

## 4.21. தொகுப்புரை

சங்கப் புரவலர் - புலவோரின் மாண்புகள் என்னும் இவ்வியலில் ஆராய்ந்த செய்திகளிலிருந்து பின்வரும் மெய்ம்மைகள் விளங்குகின்றன.

பண்டைய கால வேந்தர்களும் புலவர்களும் மானம் என்பதை உயிரினும் மேலான பண்பாகவும், மாண்புக்கு இணை நிகர் மாண்பே தான் என்றும் உணர்ந்திருந்தார்கள்.

மக்கள், அரசர் இருவரும் ஒருவரையொருவர் சார்ந்து விளங்கினர். செங்கோலனே அரசனாகக் கருதப்பட்டான். கொடையால் புலவர்களுக்குப் புரவலனாக அன்பினால் மக்களை ஆள்பவனாக அரசன் திகழ்ந்தான் என்பதும் விளங்குகிறது.

பழந்தமிழ் வேந்தர் தமிழ் உணர்வுமிக்கோராக விளங்கினர். இத்தமிழ்ப் பற்றே இவர்களைத் தமிழ்ப்புலவர்பால் பெரும் மதிப்பு கொள்ளச் செய்தது என்பதை அறியமுடிகின்றது.

பண்டைத் தமிழ் மன்னன் மரபு வழி உரிமையால் அரசு பெற்றனர். அது ஊழின் உதவியால் கிடைப்பதாகக் கருதப்பட்டது.

பண்டை மன்னர் நீதி வழங்கற்கு உதவியாகச் சான்றோரைக் கொணடிருந்தாரெனத் தெரிகின்றது. மன்னன்தன் அவையில் அறிவறிந்த சான்றோரை அமர்த்திக் கொள்வது மரபாக இருந்தது.

பண்டைய புலவர்கள் வறுமையிலும் செம்மையான வாழ்வு வாழ்ந்தவர்கள் என்பதை அறிய முடிகின்றது. பண்டைய புலவர்சுளிடம் கல்வி இருந்தது; சிறந்த புலமையும் இருந்தது; ஆனால் தன்னலம் இல்லை. பொது நலம் மிகுதியாக இருந்தது என்பதை அறியமுடிகின்றது.

தன்னிடம் வருவோரின் தகுதியறியாத வேந்தனால் புகழ்பெற்றுச் சிறக்க முடியாது காணாது ஈந்த பரிசிலை மறுத்துக்கூறும் அளவிற்குப் புலவர்கள் நெஞ்சுரம் மிக்கவராய் விளங்கினர் என்பதைத் தெளியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்


1. திருக்குறள்.53.
2. திருக்கோயிலூர் புராணம், 323.
3. புறம்., 35:17-21.
4. மேலது., 35:27-29.
5. மேலது., 42:10-11.
6. மேலது., 50:6-13.
7. மு.வரதராசனார், தமிழ் நெஞ்சம், ப.45.
8. புறம்., 19:2.
9. புறம்., 35:3-4.
10. மேலது., 357:2.
11. தொல். பொருள். இளம்., 384:3.
12. அகம்., 31:14.
13. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.45.
14. தமிழ் வரலாறு, பக்.371-375.
15. குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, பக்.1-3.
16. சிலம்பு., 11:19-20.
17. மண்ணும் மனித உறவுகளும், பக்.95:143.
18. தமிழ் வரலாறு, ப.51; தமிழ் மொழி இலக்கிய வரலாறு, பக்.34, 44; தமிழ் இலக்கிய வரலாறு, மு.வ., ப.29.
19. புறம்., 72:13-16.
20. மதுரை., 791-793.
21. தொல். பாயிரம், 9-11.
22. புறம்., 58:13.
23. சிறுபாண்., 66-67.
24. பரி., 6:60.
25. சிலம்பு. 13:130-132.

26. புறம்., 186:2.

27. கலித்., 118:7-8.

28. புறம்., 19:13.

29. மேலது., 4:18-19.

30. மேலது., 5:7.

31. மேலது., 322:9.

32. மேலது., 65:10.

33. மேலது., 171:6.

34. மேலது., 18:26.

35. மேலது., 31:17.

36. மேலது., 18:12.

37. மேலது., 11:7.

38. மேலது., 17:40.

39. மேலது., 75:2.

40. மேலது., 72:11-12.

41. திருக்., 555.

42. கலித்., 89:10.

43. புறம்., 185:1-2.

44. திருக்., 381.

45. திருத்தொண்டர் புராணம், திருநகரச் சிறப்பு, 36.

46. பட்டின., 238-270.

47. குறுந்., 292:7.

48. மேலது., 54:9-14.

49. மேலது., 20:7-15.

50. மேலது., 55:7-10.

51. மேலது., 66:1-2.

52. மேலது., 71:7-9.

53. நற்., 400:7-8.

54. பெரும்., 443-444.

55. திருக்., 386.

56. புறம்., 35:15-16.

57. மேலது., 230:4.

58. மேலது., 75.

59. மேலது., 185:3-6.

60. மேலது., 73:12-14.

61. மேலது., 151:7-12.

62. புறம்., 43:13-14.

63. மேலது., 45:7.

64. மேலது., 46:1-2.

65. மேலது., 2:17-19.

66. மதுரை., 496-499.

67. புறம்., 159:1-5.

68. மேலது., 159:6-13.

69. மேலது., 159:22-25.

70. மேலது., 204:1-4.

71. மேலது., 165:1-2.

72. மதுரை., 19-20.

73. நற்., 282:2-3.

74. பதிற்று., 18:11-12.

75. மேலது., 63:6-7.

76. மேலது., 70:1.

77. நற்., 283:6-8.

78. புறம்., 208:6-7.

79. மேலது., 27:15-17.

80. மேலது., 4:18-19.

81. மேலது., 6:21-22.

82. புறம்., 44:11-16.

83. பதிற்., 51:19-24.

84. சிலம்பு., 3:159-160.

85. திருக்., 440.

86. பதிற்., 81:30-32.

87. புறம்., 287.

88. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.230.

89. சங்க இலக்கியத்தில் வேந்தன், ப.98.

90. புறம்., 74.

91. அகம்., 168:6-8.

92. புறம்., 245.

93. சங்க இலக்கியத்தில் வேந்தன், ப.108.

94. புறம்., 173:3-11.

95. கலித்., 104:47-50.

96. மேலது., 114:19-21.

97. புறம்., 190:6-12.

98. சங்க இலக்கியத்தில் வேந்தன், ப.113.

99. உ.வே.சாமிநாத அய்யர், சிலப்பதிகாரம், ப.7.

100. புறம்., 183.

101. அகம்., 25:18-20.

102. புறம்., 71:17-19.

103. சிறுபாண்., 146-149.

104. தொல்., நூ.9.33.

105. புறம்., 35:5.

106. மேலது., 35:11-13.

107. மேலது., 35:29-34.

108. மேலது., 121.

109. மேலது., 205:1-2.

110. புறம்., 10:2.

111. மேலது., 52:14-17.

112. பதிற்., 14:13-15.

113. மேலது., 28:11.

114. மேலது., 24:11.

115. மேலது., 70:14-15.

116. பெரும்., 39-43.

117. பதிற்., 71: 11-14.

118. சங்க கால ஔவையாரும் பெண்பாற் புலவர்களும், ப.5.

119. புறம்., 206: 8-10.

120. மேலது., 206:13.

121. மேலது., 91:9-11.

122. மேலது., 91:6-7.

123. மேலது., 95:1-5.

124. சங்க கால ஔவையாரும் பெண்பாற் புலவர்களும், ப.333.

125. புறம்., 101:1-3.

126. மேலது., 95:6-7.

127. மேலது., 315:1.

128. மேலது., 90:5.

129. மேலது., 90:13.

130. மேலது., 98:3.

131. மேலது., 98:7.

132. மேலது., 98:10.

133. மேலது., 315:4.

134. மேலது., 206:4.

135. மேலது., 92.

136. நற்., 304.

137. புறம்., 39.

138. புறம்., 126:10-11.

139. மேலது., 235:13.

140. மேலது., 211:14.

141. மேலது., 288:7.

142. மேலது., 282:11.

143. மேலது., 282:10-11.

144. மேலது., 148:5-7.

145. மேலது., 27:7-9.

146. நன்னூல், 53.

147. புறம்., 54:1-4.

148. மேலது., 206:11-13.

149. மேலது., 12:3-5.

150. மேலது., 19.

151. மேலது., 291:6-8.

152. மேலது., 40:3-4.

153. மேலது., 287:8-10.

154. மேலது., 167:1-11.

155. மேலது., 262.

156. மேலது., 3:14.

157. மேலது., 5:6-8.

158. மேலது., 18:13-19.

159. மேலது., 28:15-17.

160. மேலது., 189:5-8.

161. மேலது., 192:1.

162. மேலது., 195:6-9.

# முடிவுரை

காலக் கண்ணாடியாகச் சான்றோர்களால் விளக்கப்பெறும் இலக்கியம் என்னும் கலை நிலைபேறுடையது. அந்நிலைப் பேற்றிற்குக் காரணம் இலக்கியத்தில் பண்டைய கால மக்களின் வாழ்வியல் கூறுகளை எடுத்துரைப்பது இன்றியமையாத ஒன்றாக அமைந்திருக்கின்ற நிலையேயாகும்.

பண்டைத் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த, பல்வேறு புலவர்களால், பல்வேறு காலக் கட்டங்களில், பல்வேறு மனநிலைகளில், பல்வேறு இடங்களில் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பே சங்க இலக்கிய~~[illegible]~~கத் திகழ்கின்றன.

சங்ககால மக்களுடைய வாழ்க்கையைக் காதலும், வீரமும் என வகைப்படுத்தி, அதில் வாழ்க்கைமுறை, பழக்க வழக்கங்கள், வாணிபம், கல்வி நிலை, பொருளாதார வளம், நாகரிகம், அரசியல் முதலியவற்றைக் கலையழகுடன் கூறுகின்றன.

பண்டைய கால மக்களின் வாழ்வில் வீரம் முதன்மை இடம் பெற்றிருந்தது. அவ்வீரத்தில் இளைஞர்கள், மகளிர், சிறார்கள் என்ற பல வகையினரின் வீரத்தன்மை சிறந்த விளங்கியது ~~[illegible]~~.

சங்ககால வேந்தரிடத்தும், குறுநில மன்னரிடத்தும் கொடைப்பண்பு, உயிர்ப்பண்பாக மிளிர்வதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. கொடையளிப்பதில் உறுதியும், எத்தனை முறை தேடிச் சென்றாலும் முதல் நாளே போன்று வரவேற்று கொடையளிக்கும் பண்பு முதலிய~~[illegible]~~ வள்ளலின் குணமாகக் கொள்ளப்பட்டது.

தனிமனிதனுடைய வாழ்வையும், நாட்டின் வாழ்வையும் உயர்த்துவது கல்வி என்பதை நன்கு உணர்ந்தனர். பண்டைய ~~சமுதாயம்~~ போர் நிலையே புறவாழ்க்கை என்ற போதும் அறமே நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தனர்.

புரவலர்களிடம் பரிசில் பெற்று வாழ்வு நடத்தியவர்களாகப் புலவர், இரவலர், கலைஞர்கள், கூத்தர்கள், விறலியர்கள் போன்றோர் விளங்கினர்.

மனிதனின் அடிப்படைத் தேவையான உணவு, உடை, உறைவிடம் முதலியவை மட்டும் பரிசில் பொருளில் இடம்பெறாது இன்னபிற பொருள்களும் இடம் பெற்றுள்ளமையையும் அறியலாகின்றன.

வேந்தர்-புலவர் தொடர்பு உயிர் ஒத்த உறவாக அமைந்திருந்தது என்பதும் புலவரின் அறிவு திறமைக்கும், ஆற்றலுக்கும் மதிப்பளித்து வேந்தர்கள் தனக்கு நிகரெனக் கொள்ளாமல் தம்மைவிட உயர்ந்தோராக எண்ணினர் என்பதும் தெரிய வருகின்றது.

பண்டைய மன்னர்களும், புலவர்களும் பெருமதிப்புப் பெற்று மாண்பாளராகத் திகழ்ந்தனர் என்பதும், வேந்தர்களே புலமையில் சிறந்து புலவர்களாக விளங்கிய நிலைமையினையும் பெறலாகின்றன.

சங்க இலக்கியத்தில் பரிசில் பெற்று பரிசிலராக வாழ்வதற்காக மட்டுமே வேந்தர்களைப் புலவர்கள் பாடினாரில்லை. அதை போல வேந்தர்களும் புலவர்கள் தம்மைப் புகழ்ந்ததற்காக மட்டும் பொருள் அளிக்கவில்லை என்பதும், வறுமையைப் போக்கும் உயர்ந்த எண்ணம் இருந்தபோதிலும் மொழி வளர்ச்சிக்காகவும், மக்களின் பிரதிநிதியாகப் புலவர் கூறும் கருத்துக்காகவும், புலமைக்காகவும் பரிசில் நல்கி சிறப்பித்தார்கள் என்பதையும் அறியலாகின்றன.

சங்கப் புறப்பாடல்களில் கையாளப்பெற்றுள்ள பரிசில்கள் குறித்து இன்னும் ஆய்ந்தால் மேலும் பலநல்ல முடிவுகளைப் பெற வாய்ப்புண்டு என்பதில் ஐயமில்லை.

# துணைநூற் பட்டியல்


**முதன்மைச் சான்றுகள்**

*சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.)* — **பத்துப்பாட்டு**, *சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மு.ப., 1966.*

*துரைசாமிப்பிள்ளை, ஔவை சு. (உ.ஆ.)* — **புறநானூறு**, *கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1947.*

*நாகலிங்கம், அ. (ப.ஆ.)* — **பத்துப்பாட்டு பாடலும் பொருளும்**, *சிவசக்தி நிலையம், சென்னை, மு.ப., 2000.*

*நாராயண வேலுப்பிள்ளை, வித்துவான் எம். (தெ.ஆ.)* — **பத்துப்பாட்டு மூலமும் தெளிவுரையும்**, *முல்லை நிலையம், சென்னை, மு.ப., 1994.*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியம், கு.வெ. (ப.ஆ.)* — **சங்க இலக்கியம் (எட்டுத்தொகை-பத்துப்பாட்டு)**, *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மு.ப., 2004.*

*புலியூர்கேசிகன், (உ.ஆ.)* — **புறநானூறு தெளிவுரை**, *பாரி நிலையம், சென்னை, மு.ப., 1958.*

*மாணிக்கனார், அ. (உ.ஆ.)* — **புறநானூறு**, *வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1999.*

*மாணிக்கவாசகன், ஞா. (உ.ஆ.)* — **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**, *உமா பதிப்பகம், சென்னை, மு.ப., 2005.*

*மாணிக்கனார், அ.* **பதிற்றுப்பத்து**, *வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1999.*
*(உ.ஆ.)*

**துணைமைச் சான்றுகள்**

*அப்பாத்துரை, கா.,* **ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்**, *கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1973.*

*அப்பாத்துரை, கா.,* **குமரிக்கண்டம் (அ) கடல் கொண்ட தமிழ்நாடு**, *கழக வெளியீடு, சென்னை, மு.ப., 2001.*

*அழகம்மை, கே.பி.,* **சமூக நோக்கில் சங்க மகளிர்**, *மணிவாசகம் பதிப்பகம், சென்னை, மு.ப., 2001.*

*அறவாணன், க.ப.,* **அற்றைநாட் காதலும் வீரமும்**, *பாரி நிலையம், சென்னை, மு.ப., 1978.*

*இராகவையங்கார், ரா.,* **தமிழ் வரலாறு**, *அண்ணாமலைப் பதிப்பகம், சிதம்பரம், மு.ப., 1977.*

---, **குறுந்தொகை விளக்கம்**, *கவின்கலை அச்சகம், சென்னை, மு.ப., 1993.*

*இராசமாணிக்கனார், மா.,* **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, *சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப., 1987.*

இராசரெத்தினம், கு., — **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**,
*குகன் பதிப்பகம்,*
*வடுவூர்,*
*மு.ப., 2004.*

இராமலிங்கம், அரங்க., — **சங்க இலக்கியத்தில் வேந்தர்**,
*ஐந்திணைப் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 1987.*

இளங்கோவடிகள், — **சிலப்பதிகாரம்**,
*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*மு.ப., 1956.*

கடிகாசலம், ந. (ப.ஆ.) — **சங்க இலக்கியம்**,
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்,*
*மு.ப., 2004.*

கந்தசாமி, சோ.ந., — **புறத்திணை வாழ்வியல்**,
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்,*
*மு.ப., 1994.*

கலைமணி, வி., — **இலக்கியம் காட்டும் இணையற்ற நண்பர்கள்**,
*சங்கர் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 1996.*

கழகப் புலவர் குழுவினர், — **கழகத் தமிழ் அகராதி**,
*தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*மு.ப., 1969.*

குஞ்ஞன் பிள்ளை, இளங்குளம், — **பண்டைய கேரளம்**,
*தமிழ்ப் புத்தக காலயம்,*
*சென்னை,*
*மு.ப., 1970.*

குப்புசாமி, பி., — **சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம்**,
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,*
*சென்னை,*
*மு.ப., 1978.*

குருநாதன், இராம., **புறநானூற்றில் புதிய வெளிச்சம்,** தமிழ்ச்சாரல் பதிப்பகம், சென்னை, மு.ப., 2004.

கேசவன், கோ., **மண்ணும் மனித உறவுகளும்,** சென்னை புக் ஹவுஸ், சென்னை, மு.ப., 1979.

சந்திரன், ஜெ.ஸ்ரீ. (உ.ஆ.) **நாலடியார்,** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1989.

சாமிநாதையார், உ.வே. (ப.ஆ.) **மணிமேகலை,** கழக வெளியீடு, சென்னை, நா.ப., 1949.

---, **சங்கத் தமிழும் பிற்கால தமிழும்,** ஸ்ரீ விக்னேஷ் பிரின்ஸ், சென்னை, ஐ.ப., 2000.

சாரங்கபாணி, இரா., **சங்கத் தமிழ் வளம்,** மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், மு.ப., 2003.

சிங்காரவேலு, சோ. (உ.ஆ.) **தொல்காப்பியம், பொருளதிகாரம்,** கழக வெளியீடு, சென்னை, மு.ப., 2000.

சிதம்பரனார், சாமி., **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மு.ப., 2000.

சுப்பிரமணியன், ந., **சங்க இலக்கியம்,** என்னிஸ் பப்ளிகேஸன்ஸ், மதுரை, இ.ப., 1980.

சுப்பிரமணியன், கா., **சங்ககாலச் சமுதாயம்**,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை,
மு.ப., 1982.

சுப்பிரமணிய பிள்ளை, ஜி., **தமிழ் உள்ளம்**,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
மு.ப., 1976.

சேக்கிழார், **பெரியபுராணம்**,
பன்னிரு திருமுறை பதிப்பு நிதி
வெளியீடு,
ஸ்ரீவைகுண்டம்,
மு.ப., 1964.

சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.) **பரிபாடல் மூலமும் உரையும்**,
கழக வெளியீடு,
சென்னை,
மு.ப., 1963.

---, **ஐங்குறுநூறு**,
கழக வெளியீடு,
சென்னை,
மு.ப., 1966.

---, **புறப்பொருள் வெண்பாமாலை**,
கழக வெளியீடு,
சென்னை,
ஐ.ப., 1969.

---, **அகநானூறு**,
கழக வெளியீடு,
சென்னை,
மு.ப., 1970.

---, **பொருநராற்றுப்படை**,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
ஐ.ப., 1973.

தட்சிணாமூர்த்தி, அ., **தமிழர் நாகரீகமும் பண்பாடும்**,
யாழ் வெளியீடு,
சென்னை,
மு.ப., 1994.

*தட்சிணாமூர்த்தி, அ.,* — **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,**
*மங்கையர்கரசி பதிப்பகம்,*
*தஞ்சாவூர்,*
*மு.ப., 2001.*

*தண்டாயுதம், இரா.,* — **சங்க இலக்கியம்,**
*தமிழ்ப் புத்தகாலயம்,*
*சென்னை,*
*மு.ப., 1978.*

*தேவராசன், கோ.*
*(ப.ஆ.)* — **சங்ககாலத் தமிழக வரலாறு,**
*மீனா கோபால் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 2007.*

*தொல்காப்பியர்,* — **தொல்காப்பியர்,**
**பொருளதிகாரம்,**
*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*நா.ப., 1966.*

*நக்கீரன், அ.*
*(ப.ஆ.)* — **பழந்தமிழாட்சி,**
*தமிழ்மண் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 1952.*

---, — **பண்பாட்டுக் கட்டுரைகள்,**
*தமிழ்மண் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 2001.*

*நச்சினார்க்கினியர்,*
*(உ.ஆ.)* — **கலித்தொகை,**
*கழக வெளியீடு,*
*சென்னை,*
*ஏ.ப., 1967.*

*பட்டாபிராமன், துரை.,* — **தமிழ்க் கல்வெட்டுக்களில் புறப்பொருள் இலக்கணம்,**
*அண்ணாமலை பதிப்பகம்,*
*சிதம்பரம்,*
*மு.ப., 1990.*

*பரிமேலழகர்,*
*(உ.ஆ.)* — **திருக்குறள்,**
*பூம்புகார் பிரசுரம்,*
*சென்னை,*
*மு.ப., 1976.*

*பவணந்தி,* **நன்னூல்,**
**(மாதவச் சிவஞான சுவாமிகள் விருத்தியுரை),**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*இ.ப., 1971.*

*பழனிவேல், பெ.*
*(உ.ஆ.)* **கலிங்கத்துப்பரணி,**
*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*ஏ.ப., 1971.*

*பழனிவேலு, நா.,* **சங்கப்புற இலக்கியங்களில் சமூகச் சித்தரிப்புகள்,**
*மனோன்மணிப் பதிப்பகம்,*
*கிருட்டினகிரி,*
*மு.ப., 2004.*

*பாலசுப்பிரமணியன், சி.,* **தமிழ் இலக்கிய வரலாறு,**
*மணமலர்ப் பதிப்பகம்,*
*சென்னை,*
*34ஆம் பதிப்பு, 2003.*

*புலியூர்கேசிகன்,* **அகநானூறு,**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*ஐ.ப., 1997.*

*மணி, பெ.க.,* **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,**
*பூங்கொடி பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 1977.*

*மாணிக்கம், வ.சுப.,* **சங்கநெறி,**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை,*
*மு.ப., 1999.*

| | |
|---|---|
| *மாணிக்கவாசகம், ஞா. (உ.ஆ.)* | **சீவக சிந்தாமணி**, *அருணா பதிப்பகம், மதுரை, மு.ப., 1966.* |
| *மாணிக்கனார், அ. (உ.ஆ.)* | **நற்றிணை**, *வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1999.* |
| ---, | **ஐங்குறுநூறு**, *வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1977.* |
| *வரதராசன், மு.,* | **புலவர் கண்ணீர்**, *பாரி நிலையம், சென்னை, மு.ப., 1946.* |
| ---, | **பத்துப்பாட்டு சொற்பொழிவுகள்**, *கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1952.* |
| ---, | **தமிழ் நெஞ்சம்**, *பாரி நிலையம், சென்னை, ப.ப., 1971.* |
| *வித்தியானந்தன், சு.,* | **தமிழர் சால்பு**, *பாரி புத்தகப் பண்ணை, சென்னை, மு.ப., 1971.* |
| *வெள்ளைவாரணன், க.,* | **சங்ககாலத் தமிழ் மக்கள்**, *பாரி நிலையம், சென்னன, இ.ப., 1950.* |
| *வேங்கடராமன், கா.கோ.,* | **தமிழ் இலக்கிய வரலாறு**, *கலையக வெளியீடு, பரமத்திவேலூர், மு.ப., 2001.* |

வேலுப்பிள்ளை, ஆ., **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*மு.ப., 1978.*

வையாபுரிப்பிள்ளை, எஸ்., **சங்க இலக்கியம்,**
**(பாட்டும் தொகையும்),**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*இ.ப., 1967.*

# பின்னிணைப்பு

## புறநானூற்றில் திணை, துறை அடிப்படையில் பாடல்களின் வகைபாடு

1. வெட்சித்திணை

   257, 258, 262, 269, 297

2. கரந்தை திணை

   259, 260, 261, 263, 264, 265, 270, 286, 287, 290, 291, 298

3. வஞ்சித்திணை

   4, 7, 16, 26, 41, 45, 46, 47, 57, 98, 99, 100

4. காஞ்சித்திணை

   71, 72, 73, 281, 293, 336, 337, 339, 340, 341, 342, 343, 344, 345, 346, 247, 348, 349, 350, 351, 352, 353, 354, 355, 356, 357, 358, 359, 360.

5. நொச்சித்திணை

   271, 272, 299, 109, 110, 111

6. தும்பைத்திணை

   62, 63, 80, 87, 88, 89, 90, 273, 274, 275, 276, 277, 278, 283, 284, 288, 294, 295, 300,301, 302, 303, 304, 307, 309, 310, 311, 312, 313, 314, 315, 316, 317, 318, 319, 320, 321, 322, 323, 324, 325.

7. வாகைத்திணை

   17, 19, 20, 21, 22, 23, 25, 26, 31, 33, 37, 42, 43, 51, 52, 53, 54, 61, 66, 76, 77, 78, 79, 81, 82, 86, 93, 94, 98, 99,100, 194, 125, 166, 167, 170, 174, 179, 180, 181, 251, 252, 279, 285, 296, 305, 306, 308, 312, 326, 327, 238, 329, 330, 331, 332, 333, 334, 335, 368, 369, 370, 371, 372, 373.

8. பாடாண் திணை

   2, 3, 5, 6, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 30, 32, 34, 35, 38, 39, 40, 48, 49, 50, 55, 56, 58, 59, 60, 64, 67, 68, 69, 70, 91, 92, 95, 96, 97, 101, 102, 103, 104, 105, 106, 107, 108, 122, 123, 124, 126, 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 136, 137, 138, 139, 140, 141, 142, 148, 149, 150, 151, 152, 153, 154, 155, 156, 157, 158, 159, 160, 161, 612, 163, 164, 165, 168, 169, 171, 172, 173, 175, 176, 177, 184, 196, 197, 198, 199, 200.

   201-212, 215, 216, 266, 367, 374, 375, 376, 377, 378, 379, 380, 381, 382, 383, 384, 385, 386, 387, 388, 389, 390, 391, 392, 393, 394, 395, 396, 397, 398, 399, 400.

9. பொதுவியல் திணை

   18, 24, 27, 28, 29, 65, 74, 112-121, 182, 183, 185-195, 214, 217, 218-243, 245-250, 253, 254, 255, 256, 280, 362-366.

34. வல்லாண் முல்லைத் துறை

170, 178, 179, 180, 181, 313, 314, 315, 316, 317, 318, 319, 320, 321, 322, 323, 324, 325.

35. பாண்பாட்டுத் துறை

283, 284, 311

36. அரச வாகைத் துறை

17, 19, 20, 21, 22, 23, 25, 26, 31, 33, 37, 42, 43, 44, 51, 52, 53, 54, 61, 66, 76, 77, 78, 79, 81, 82, 93, 94, 98, 99, 103, 125, 167, 168, 174.

37. பார்ப்பன வாகைத்துறை

166, 305

38. தானை மறம் துறை

170

39. ஏறாண் முல்லைத் துறை

86, 296

40. மறக்கள வழித்துறை

368, 369, 370, 371, 373

41. போர்க்கள உருவகத் துறை

369

42. ஏர்க்கள உருவகத்துறை

373

43. மறக்கள வேள்வித்துறை

372

44. தாபத வாகைத்துறை

251, 252

45. மூதின் முல்லைத் துறை

279, 288, 306, 308, 312, 326, 327, 328, 329, 330, 331, 332, 333, 334, 335

46. செவியறிவுறூஉ துறை

2, 3, 5, 6, 35, 40, 55, 184

47. வாழ்த்தியல் துறை

2, 3, 5, 6, 35, 40, 55, 184

48. வாழ்த்தியல் துறை

6, 13, 128, 158

49. இயன்மொழித் துறை

8, 9, 10, 12, 14, 15, 17, 22, 30, 32, 34, 38, 39, 49, 50, 67, 92, 96, 97, 102, 106, 107, 108, 122, 123, 124, 128, 129, 130, 131, 132, 134, 137, 142, 149, 150, 151, 153, 156, 157, 168, 170, 171, 172, 173, 175, 176, 177, 212, 215, 216, 376, 378, 380, 381, 383, 384.

50. பரிசில் துறை

126, 135, 137, 148, 154, 161, 163, 168, 200, 201, 202, 203, 204, 205, 206, 207, 208, 379.

51. பரிசில் கடாநிலைத் துறை

11, 101, 136, 158, 159, 160, 164, 169, 196, 197, 198, 199, 209,210, 211, 266

52. பரிசில் விடைத்துறை

140, 152, 162, 165, 397, 399

53. கடைநிலைத் துறை

127, 383, 391, 392, 393, 394, 395, 396, 398

54. கடைநிலை விடைத்துறை

397

55. பூவை நிலைத்துறை

8, 9, 10, 56, 59, 374

56. வாழ்த்தியல் துறை

91, 158, 367, 375, 377, 385, 386, 387

57. வாள்மங்கலம் துறை

95

58. குடைமங்கலம் துறை

60

59. உடனிலைத் துறை

58

60. புலவராற்றுப்படைத் துறை

48, 49, 141

61. பாணாற்றுப்படைத் துறை

68, 69, 70, 138, 141, 155, 180

62. விறலியாற்றுப்படைத் துறை

64, 103, 104, 105, 133

63. ஆனந்தப் பையுள் துறை

228, 229, 246, 247, 280

64. தாபத நிலைத் துறை

143, 144, 145, 146, 147, 248, 249, 250

65. முதுபாலைத்துறை

253, 254, 255, 256

66. கையறு நிலைத் துறை

65, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 121, 217, 218, 219, 220, 221, 222, 223, 224, 225, 226, 227, 230, 231, 232, 233, 234, 236, 237, 238, 239, 240, 241, 242, 243, 245, 260, 261, 263, 265, 265, 270

67. *பழிச்சுதல் துறை*

*83, 84, 85*

68. *குறுங்கலித் துறை*

*143, 144, 145, 146, 147*

69. *புறநானூற்றில் கிடைக்காதப் பாடல்கள்*

*267, 268*

70. *திணையும் துறையும் கிடைத்திலாப் பாடல்கள்*

*244, 282, 289, 355, 361*

71. *துறை மட்டும் கிடைக்காதப் பாடல்*

*357*

2012

# சிவஒளி

SIVAOLI



## அகிலம் காக்கும்
## ஸ்ரீஅமுதவல்லி சமேத
## ஸ்ரீஅமுதலிங்கேஸ்பரர்...!

# சிவ - ஒளி

**ஆசிரியர்**
கா. விஜயராகவன்

**நிர்வாக ஆசிரியர்**
கவிதா ஜெயகாந்தன்

**சிறப்பாசிரியர்**
T.S.ராகவன்
(முன்னாள் இந்தியன் வங்கித் தலைவர்)

**ஆலோசகர்கள்**
'லண்டன்' கிருஷ்ணமூர்த்தி
Retd., Excutive – Bank of Baroda. Chennai

'டெல்லி' R.வைத்தியநாதன் Chennai

T.R. ராஜகோபாலன்
Retd.G.M.State Bank Of india. Chennai

ஓவியர் 'லைஷ்மி' கிருஷ்ணமூர்த்தி
Studio 'parambariam' Chennai

**பொறுப்பாசிரியர்**
ஆர். செல்வமணி

**செய்தியாளர்**
R. ராஜேந்திரன்

**நிர்வாக உதவி**
ஜயா J. வேதையன்

**ஓவியம்**
ஆழி
ச. காணிக்கைராஜ்

**புகைப்படங்கள்**
மா. சிவக்குமார்.

**வடிவமைப்பு**
சத்யன் லே-அவுட்

**மக்கள் தொடர்புக்கு**
'LIC' S.குப்புசாமி,
9443122124

₹ 2500/

**நிர்வாக அலுவலகம்**
A.N.R. காம்ப்ளெக்ஸ்,
52/13, தெற்கு வீதி, திருவாரூர் - 610 001.
செல்: 9750697940, 9750697943.
9443973671,
04366-364419
www.sivaoli.com/email:sivaolitvr@gmail.com


சிவம் 1 ஒளி 8

# ஜீவபடகை செலுத்துவது எப்படி?

**இ**றையன்பு நிறையீர் !

வணக்கம். மென்மேலும் வளர இறையருளைப் பிராத்திக்கிறேன். வாசகர்கள், முகவர்கள், விளம்பரதாரர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் மனங்கனியும் இனிய புத்தாண்டு பொங்கல் திருநாள் நல்வாழ்த்துக்கள்..

ஒரு ஞானி சொல்கிறார், 'நீ நீயாயிரு; அது அதுவாய் நடக்கும், அறிவாயிரு; அன்பாயிரு; உன்னறிவில் ஊன்றிக்கொள், சுத்த சக்தி இறைவனை தியானத்தில் கலந்திரு; கட்டளை உள்ளிருந்து வரும்,'அதை நிறைவேற்ற சக்தி வரும். கட்டளை நிறைவேறியதும் உள்ளே போ.. உள்ளிருந்து உலகுக்குதவு, உலகியலிலே சிக்கினால் உள்ளதும் போகும். இரு விசாரப் புயல் உன் ஜீவபடகை மோதும்.

தேசபக்தி செய், தெய்வ பக்தி செய், ஆனால் கட்சி சண்டைகளிலும், வகுப்பு வாதத்திலும், சுயநலப்புகழிலும், வசைச்சூறாவளியிலும், பட்டம், பதவி வேட்டையிலும் திரியும் அரசியலில் சிக்காதே! கடவுள் - நீ - வேறொன்றையும் இடையில் புகவிடாதே! உலகை கடவுளின் கோயிலாகப்பார். ஜனசேவையை தெய்வ சேவையெனக் கருது. உனக்கு இயல்பில்லாத சேவையில் புகாதே!

உலகம் வினைக்கோயில் அதில் உனக்குள்ள தொண்டைச் செய்து பலனை ஆண்டவனுக்கே அர்ப்பணம் செய். அவனுடன் ஐக்கியமாகக் கருது'' என்று..

மானுட வாழ்வின் மகத்துவத்தில் உயிரைக் காத்து மேன்மை எய்துகிற உபாயத்தை இதை விடவும் எளிதாக சொல்லவும் முடியுமோ?

பிற பின்

இவண்
ஆசிரியர்

# மூவேந்தரும் தமிழும்



பண்டையத் தமிழ் வேந்தர்கள் தமிழின் மீதும் நாட்டின் மீதும் அளவில்லா பற்றும், தீராக் காதலு கொண்டு விளங்கினர். தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவும், மொழியின் உலகளாவிய பெருமைக்காவும், புலவர்களுக்கு பொருளுதவி அளித்து பாடல் புனைந்து அவர்களின் வாழ்வு சிறந்த பரிசில் நல்கினார்கள்.

அவ்வேந்தர்களின் தமிழ்ப்பற்றை தமிழாய்ந்த தலைமக்கள், மூவேந்தர் தோற்றம், பாண்டியரின் வரலாற்று நிலை, சங்கம் என்ற அமைப்பு, பாட்டுடைத் தலைவன், தமிழ் வளர்த்த பெருமை முதலிய தலைப்புக்களில் இக்கட்டுரையில் காணலாம்.

மூவேந்தரும் தமிழும்

தமிழர்க்கு மொழியுணர்வு மிக்கிருந்தமையை இலக்கியங்கள் காட்டுகின்றன. மூவேந்தரைக் குறிப்பிடும் பொழுது தமிழாகவே குறிப்பிடுகின்றன. தமிழர் வாழ்வு அவர்தம் மொழியோடு பின்னிப் பிணைந்திருந்தது. மூவேந்தரும் ***போரிட்ட நிலையினை***

***"தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்த"***

என்ற குடபுலவியனார் வரிகளால் அறியலாம்.

தமிழாய்ந்த தலைமக்கள்

தமிழாய்ந்த தலைமக்களாக ஆட்சிக்குரியோர் விளங்கியதையும், அவ்வாறே ஆட்சிப்பொறுப்பில் இருப்போர் விளங்கவேண்டும் எனப்புலர் பெருமக்கள் விரும்பியதையும் அறிய முடிகிறது. இதனை

***"வில்லைத் துண்ணும் வில்வான் வாழ்க்கைத்***
***தமிழ்கெழு மூவர்"*** -
***"மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்***
***முரசுமுழங்கு தானை மூவர்"***

எனும் பாடலடிகளால் அறியலாம் தமிழ் மொழிக்கும் தமிழ்நாட்டை ஆண்டோர்க்கும் உள்ள உறவை உணர்த்துகின்றன.

**மூவேந்தர் தோற்றம்**

பழந்தமிழ்க் கிளை இனங்களைக் குறிப்பிட்டு அவற்றில் சிறந்து விளங்கிய மாறன்மர், திரையர், வானவர் ஆகிய மூன்று தமிழ் மரபினரும் பாண்டிய, சோழ, சேர அரசுகளென்று பின்னாட்களில் வழங்கிய அரசுகளை நிறுவினர். இவ்வாறு தோன்றிய மூவேந்தர் அரசுகளின் முதல் வேந்தர் யார் என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. தொல்காப்பியர் காலத்தில் வாழ்ந்த மூவேந்தரைப் பற்றி ஆராய்ந்த இராகவையங்கார் "தொல்காப்பியர் காலத்தில் ஆட்சிபுரிந்த பாண்டியன் முடத்திருமாறன் எனவும், சேரன்குட்டுவன் எனவும், சோழன் இன்னெனத் துணிய முடியவில்லை எனவும் கூறுவர்."

**பாண்டியரின் வரலாற்று நிலை**

வா. சரவணன் M.A.TPT M.phil

சேர, சோழ வேந்தரினும் பாண்டியருக்குத் தொன்மையான வரலாறுகளை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாகவுள்ள பாண்டிய வேந்தர் எண்பத்தொன்பதின்மர், கடல் கொள்ளப்பட்ட தென்மதுரையிலிருந்து ஆட்சி புரிந்து, முதற் சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், வெய்தேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாகவுள்ள ஐம்பத்தொன்பதின்மர், கபாடபுரத்திலிருந்து ஆட்சி புரிந்து இரண்டாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர்.

முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாகவுள்ள நாற்பத்தொன்பதின்மர் இப்பொழுதுள்ள மதுரையில் இருந்து ஆட்சி புரிந்து மூன்றாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், இத்தமிழ்ச் சங்கங்களில் பாண்டிய வேந்தர் முறையே எழுவர், ஐவர், மூவர் எனக் கவியரங்கேறினர் என்றும் இறையனார் அகப்பொருள் வரை இயம்புகின்றது.

**சங்கம் என்ற அமைப்பு**

சங்கம் இருந்து நிலைபெற்றதையும், பின்னர்க்

**வரையறை**

**நதியைக் கடக்கும் வரை**
**தோணியை வெறுத்து விட்டு விடாதே!**
**ஈனு முன் வாழை மரத்தை வெட்டியெறிதல்**
**மதியீனம்! விளக்கை ஏற்றிய நோக்கம்**
**நிறைவேறும் முன் அணைத்து விடாதே!**

கடல்கோளால் தென்மதுரை அழிவுற்றதையும், கடல்கோளில் அழிவுற்ற தமிழ்நாடுகளையும் உரைத்துள்ளார்கள். பாண்டியர் நிலப்பரப்பு அழிவுற்றதை

***"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்***
***குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள"***
***(சிலம்பு 11:19-20)***

எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

"சங்கம் என்ற அமைப்பு இல்லையென்றும் அவ்வாறு உரைப்பது உண்மைக்கு புறம்பானது என்றும் உரைத்தனர்." "புலவர் பலர் கூடி, ஆராயும் சங்கம் என்றோர் அமைப்பு இருந்தது என்றும் அறிஞர் கருத்துரைத்துள்ளனர்"
***தமிழ் மொழி இலக்கிய வரலாறு பக் 34,44***
***தமிழ் இலக்கிய வரலாறு மு.வ.பக் 29***

***"ஓங்கிய சிறப்பினுயர்ந்த கேள்வி***
***மாங்குடி மருதன் தலைவனாக***
***உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்***
***புலவர் பாடாது வரைகவென் னிலவரை"***

என்ற தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பாடல் வரிகளால் அறியலாம்.

**பாட்டுடைத் தலைவர்**

பாண்டியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு மதுரைக் காஞ்சி பாடிய மாங்குடி மருதனாரின் வரிகளால் சங்கம் இருந்ததை அறிய முடிகின்றது. அதனை

***"தொல்லாணை நல்லாசிரியர்***
***புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்***
***நிலந்தரு திருவி னெடியோன்"***

என்ற பாடல் வரிகளால் உணரலாம். சங்கம் இருந்ததை வலியுறுத்தும் சான்றுகளாகக் கொள்வர். இதனாலும் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனாரும்

***"நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து***
***அறங்கரை நாவின் நான்மறை முற்றிய***
***அதங்கோட் டாசான்"***

என உரைத்திருப்பதிலிருந்தும் பாண்டியர் அவையில் புலவர் கூடியிருந்து தமிழாராய்ந்தனர் என்றும் நூல்கள் அரங்கேற்றப் பெற்றன என்றும் அறியலாம்.

**தமிழர் வளர்த்த பெருமை**

பாட்டிசைத்த பண்மொழியாம் செம்மொழி சிறப்பு கருதியே, பழந்தமிழ்ப் புலவர்கள் தமிழ்வளர்த்த பாண்டியரையும், அவர்தம் தலைநகரமாகவும், தமிழ் நூல்களின் தகுதியினை ஆராயும் நகரமாகவும் விளங்கிய மதுரையைக் குறிப்பிடும் பொழுது தமிழோடு இணைத்தே வழங்குகின்றனர்.

***"தமிழ்கெழு கூடற் தண்கோல் வேந்தே"***
***"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்***
***மகிழ்நனை மறுகின் மதுரை"***
***"தமிழ் வையைத் தண்ணம் புனல்"***
***"புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற்***
***பொதியிற் றென்றல் போலா தீங்கு***
***மதுரைத் தென்றல் வந்தது காணீர்"***

எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் பகர்வதிலிருந்து சேரருக்கும் சோழருக்கும் இல்லாத தமிழ் வளர்த்த பெருமை பாண்டியருக்கு உண்டு எனச் சாற்றலாம்.

மூவேந்தர்களைக் குறிப்பிடும் போது தமிழோடு இணைத்தே குறிப்பிட்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. தமிழாய்ந்த தலைமக்களாக ஆட்சிக்குரியோர் விளங்கினார்கள் என்று தெரிய வருகின்றது. சேர, சோழ வேந்தனும் பாண்டியருக்குத் தொன்மையான வரலாறுகளை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. புலவர் பலர் கூடி ஆராயும் சங்கம் என்றோர் அமைப்பு இருந்தது என்றும் மற்ற வேந்தர்களை விட தமிழ் வளர்த்த பெருமை பாண்டியருக்கு உண்டு என்பதை காண முடிகிறது. ●

REGISTERED SP / MYL 01 / 2008-11
REGISTER NO. T.N.N.Q.58
" LICENSED TO POST WITHOUT PREPAYMENT"

**ஞானசம்பந்தம்**

Date of Posting : 20.11.2011
Posted at Head Post Office, Mayiladuthurai

சமய இலக்கியத் திங்கள் இதழ்

**சந்தா விபரம்**

| | | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா | --- | ரூ. 50-00 | ரூ. 275-00 |
| ஆயுள் சந்தா | --- | ரூ. 500-00 | ரூ. 2750-00 |
| தனிப்பிரதி | --- | ரூ. 5-00 | |

*தொகை அனுப்ப வேண்டிய முகவரி :-*
செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மயிலாடுதுறை - 609 001.
நாகை மாவட்டம்.

பெறுநர் நூல் அஞ்சல்
திரு/திருமதி

Printed & Published by K.Shanmugasundaram Supdt, Dharmapuram Adhinam Dharmapuram at the Gnanasambandam Press Dharmapuram. Mayiladuthurai - 609 001.

# ஞானசம்பந்தம்

தருமை ஆதீனத் திங்கள் இதழ் தனிப்பிரதி ரூ.
மலர் 70 கர - கார்த்திகை - 10-11-2011 இதழ் 12

தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்
ஞானபீடத்தில் அமர்ந்த 40-ஆம் ஆண்டுத் திருநாளில் கொலுவிருக்க



திருச்சி ஸ்ரீமௌனமடம் கட்டளை விசாரணை
முனைவர் ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்
வழிபாடு செய்தல்
23.10.2011

ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

ஸ்ரீ குருஞானசம்பந்தர்

அருள்வாக்கு

★★★

அறிவாய் அறிவிழப்பில்

ஆகின்ற இன்பச்

செறிவாய்ச் சுகமாய்த்

திணமும் — பெரிய (து)

இருந்தும் கதிநமாய்

ஏய்ந்தசிவா னந்தம்

பொருந்துவார் முத்தரெல்லாம்

போய்.

— சிவபோகசாரம் 124

ஆசிரியர் :-

முனைவர்.

குமாரசாமித் தம்பிரான்

சுவாமிகள்

துணையாசிரியர் :-

வித்துவான்.

வி. சா. குருசாமி தேசிகர், எம்.ஏ.,

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமை ஆதீனத் திங்கள் இதழ்

மலர் 70 | 10–11–2011 | இதழ் 12

## உட்பொருள்



20–11–11 ஞாயிறு, கருங்குயில்நாதன்பேட்டை [illegible], குத்தாலம், ஸ்ரீவாஞ்சியம், குருமாணக்குடி முதலிய [illegible] களில் தீர்த்தம். மெய்ப்பொருள் நாயனார் குருபூஜை.

21–11–11 திங்கள், கார்த்திகை சோமவாரம். திருக்கடவூர், திருப் பனந்தாள், திருவையாறு, வேளூர் முதலிய தலங்களில் 1008 சங்காபிஷேகம். ஆனாய நாயனார் குருபூஜை.

23–11–11 புதன், பிரதோஷம். மாதசிவராத்திரி.

24–11–11 வியாழன், சர்வ அமாவாசை. திருவிசைநல்லூர் [illegible] கர்ஷணம். திருச்சிஸ்ரீமௌனகுரு ஸ்ரீதாயுமானசுவாமிகள் மாதாந்திர வழிபாடு.

27–11–11 ஞாயிறு, மூர்க்கநாயனார் குருபூஜை.

28–11–11 திங்கள், சதுர்த்தி விரதம். சிறப்புலிநாயனார் குருபூஜை.

30–11–11 புதன், சஷ்டி விரதம். சிரவண விரதம்.

5–12–11 திங்கள், தருமை 8 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அழகியசிற்றம்பல தேசிக சுவாமிகள் குருபூஜை.

6–12–11 செவ்வாய், ஏகாதசி. தருமை 16 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் குருபூஜை.

7–12–11 புதன், பிரதோஷம்.

8–12–11 வியாழன், பரணிதீபம். தருமைஸ்ரீசண்முகர் அபிஷேகம் - கிருத்திகை விரதம்.

9–12–11 வெள்ளி, வேளூர் கிருத்திகை. திருவெண்ணெய்நல்லூர் [illegible] கணம்புல்லநாயனார் குருபூஜை.

10–12–11 சனி, பௌர்ணமி விரத பூஜையில் [illegible] சாத்துதல். திருச்சுடர் அபிஷேகம். [illegible] சர்வாலய தீபம். சந்திர கிரஹணம். [illegible] மணி 6-15 க்கு மத்திம காலம். [illegible] மோக்ஷம் 9-47 ரோகிணி. ரிஷபம், [illegible], கார்த்திகை, மிருகசீர்ஷம் நக்ஷத்திரக்காரர்கள் சாந்தி செய்துகொள்ளவேண்டும். அன்று பகல் போஜனம் கிடையாது. பருவசிராத்தம் மறுநாள் மாலை 5-40 க்கு மேல் மாலை மணி 6-15 க்குள் தீபம் பெற்ற மிக மிக உத்தமம். தருமை 18 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் குருபூஜை.

14–12–11 புதன், சங்கடஹரசதுர்த்தி.

15–12–11 வியாழன், ஆயில்ய விழா. மயிலாடுதுறை - [illegible] கோயிலில் ஸ்ரீ சேதா தக்ஷிணாமூர்த்திக்கு [illegible] அபிஷேகம்.

16–12–11 வெள்ளி, குத்தாலம் கடை வெள்ளி ஸ்தலவிருக்ஷபூஜை. ஷடசீதி. திருவையாறு மாதப்பிறப்புதீர்த்தம். திருவாரூர் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மாதாந்திர வழிபாடு.

# பண்டைய வேந்தர் புலவரிடையே மலர்ந்த நட்புரிமை

வா. சரவணன்
முனைவர்பட்ட ஆய்வாளர்,
திரு. வி. க. அரசு கலைக்கல்லூரி, திருவாரூர்.

## முன்னுரை :

சங்ககாலம் சங்கத்தமிழ் வளர்ச்சியால் சரித்திரம் படைத்த பொற்காலம். மன்னர் ஆட்சியிலும் மக்கள் நலனே மேலோங்கித் திகழ்ந்த பொன்னான காலம். இக்காலத்தில் சில மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் இடையே வியக்கத்தக்க அளவிற்கு ஆழமான நட்பு நிலவியுள்ளமையை அறியமுடிகின்றது. அவ்வாறு பண்டையக் கால வேந்தர் புலவரிடையே மலர்ந்த நட்பின் மலர்ச்சியை இக்கட்டுரையில் காணலாம்.

## கபிலரும் - பாரியும் :

இலக்கிய உலகில் புலவர் பெருமான் கபிலருக்குத் தனி இடம் உண்டு. ஒழுக்கமும், உயர்புலமையும் கொண்டவர். தம்வாழ்நாள் முழுவதும் துறவு நெறியை மேற்கொண்டு, பாரியின் கெழுதகை தோழராய் ஒழுகி, அவர் இறந்தபோது அந்தத் துயரத்தைத் தாங்காது தாமும் வடக்கிருந்து உயிர் துறக்க முனைந்த கபிலர் பெருமான், பாரியின்மகளிர்க்குத் தந்தை நிலையிலிருந்துகடனுற்ற விரும்பினார். என்பதனை,

" நெடுமாப் பாரி மகளிர்; யானே
நந்தை தோழன்; இவன் என் மகளிர் " (புறம். 201: 5-6)

என்ற கபிலரின் வரியால் உணரலாம்;

## புலமையால் வென்ற பரிசில் :

தம் புலமையைப் பாராட்டிச் சேரன் கொடுத்த பெருஞ் செல்வத்தையும் எண்ணாமல் நண்பனில்லாத உலகின் வெறுமையை எண்ணி உயிர்விடத் துணிந்தார்; " நூறாயிரம் காணமும், நன்றா என்றும் குன்றின்மேல் நின்று. கண்ணிற்கண்ட நாடும் கொடுத்தான் செல்வக் கருங்கோ வாழியாதன் " (பதிற் ஏழாம் பதிகம்) இவ்வாறு கபிலரும் பாரியும் கொண்ட நட்பு மறுமையிலும் காதலனை அடைய விரும்பும் காதலிப்போல் ஏங்கி வடக்கிருந்தார். இதனை,

" இம்மைபோலக் காட்டி உம்மை
இடையில் காட்சி நின்னோ
உடனுறை வாக்குக உயர்ந்த பாலே " (புறம். 236 10-12)

என்ற பாடல் வரிகளால் தெளியலாம்,

" புலவர்க்கும் மன்னர்க்கும் இடையே நிலவிய உறவுவெறும் பண்டமாற்று நிலையன்று என்பதை அறியமுடிகின்றது, அரசுக்காகப் புலவர்கள் பிரச்சாரம் செய்வதும் அதற்கு ஈடாகப் பரிசு கொடுப்பதுமான உறவு நிலைமையை அதாவது பண்டமாற்றுப் பரிவர்த்தனையைக் குறிப்பதன்று " (மண்ணும் மனித உறவுகளும் பக்-80) இவ்வாறாக புலவர்க்கும் மன்னர்க்கும் நெருங்கிய நட்புறவு மலர்ந்து மிளிர்ந்தது.

## கோப்பெருஞ்சோழர் - பிசிராந்தையார் :

கோப்பெருஞ்சோழனுக்கும் பாண்டி நாட்டு பிசிராந்தையார்க்கும் இடையே தோன்றிருந்த பெருநட்பு அந்நாட்டுச் சான்றோர் உலகையே வியப்பில் ஆழ்த்திற்று. இதனை

" நினைக்கும் காலை மருட்கை உடைத்தே
எனைப் பெருஞ் சிறப்பினோடு ஈங்கு இது துணிதல்
அதனினும் மருட்கை உடைத்தே, பிறன் நாட்டுத்
தோற்றம் சான்ற சான்றோன் போற்றி
... ... ... ... ...
அன்னோனை இழந்த இவ்வுலகம்
என் ஆவதுகொல்? அளியது தானே ! " (புறம். 217)

என்ற பொத்தியாரின் வரிகளால் அறியலாம்.

கோப்பெருஞ்சோழன் விரும்பத்தக்க நற்பண்புகள் நிரம்பப் பெற்றவனாகவும், குடிமக்களைப் புரப்பதில், ஆட்சியை நடத்துவதில் அறநெறிகளைக்காப்பதில், நீதி வழங்குவதில் நிகரற்றவனாகவும் திகழ்ந்தான் அவனிடம் சென்று பரிசில் பெற்றுத் திரும்பியபுலவர்களும் இரவலர்களும் வாயார, நெஞ்சாரவாழ்த்தும் போது புலவர் பிசிராந்தையாரின் உள்ளம் காந்தத்தை நாடிச் செல்லும் இரும்புத்துண்டு போல சோழனை நாடிச் சென்றது அவனைக் காண வேண்டும். கண்டு உரையாடி மகிழ வேண்டும் என நாளும் ஏங்கினார்.

" ஒவ்வொரு நாளும் அவரின் உள்ளம் " மட்டும் உறையூருக்குச்சென்று உரையாடி விட்டு திரும்பியது. அந்தக் கற்பனை உரையாடலிலேயே தம்மை ஈடுபடுத்திக் கொண்டு மகிழ்ச்சியில் மூழ்கிக் கிடந்தார் " ( இலக்கியம் காட்டும் இணையற்ற நண்பர்கள், பக்கம் 63)

இவ்வாறாக கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் கொண்டிருந்த நட்பினை இலக்கியச்சான்றுகள் பலவற்றால்அறிய முடிகின்றது.

## உணர்ச்சி நட்பு :

பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் கொண்டிருந்த தொடர்பு புரவலர், இரவலர் என்ற நிலையினை கடந்து உள்ளம் உணர்ந்த உயிர்நட்பாக விளங்கியது. வேந்தன் உயிர் துறக்கும் பொழுது தாமும் உடனிருந்து உயிர்துறக்கும் அளவிற்கு அன்புபூண்டொழுகினர்.

கோப்பெருஞ்சோழனுடன் உடனுறைந்து பழகிய புலவர் பொத்தியார். சோழனின் மறைவு குறித்துப் பெரிதும் வருந்தி உரைத்துக் கலங்கியுள்ளார். புலவர் பால் அன்புடையவனும், சான்றாண்மை மிக்கவனுமாகிய கோப்பெருஞ்சோழனைக்கூற்றுவன் கொண்டு போயினான். வாய்மையுடைய புலவர்கள் எல்லோரும் வாருங்கள் அனைவரும் ஒருங்கே கூற்றுவனை இகழ்வோம். என்பதனை,

“ நினையாக் கூற்றம் இன் உயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ, அதனை
வைகம் வம்மோ - வாய்மொழிப் புலவீர் ” (புறம் 221: 8-10)

என்ற பொத்தியாரின் வரிகளால் உணரலாம்.

வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனோடு பொத்தியாரும் வடக்கிருந்து உயிர்விட விரும்பினார். ஆனால், சோழன் பொத்தியாருக்கு மகவு பிறக்கப் போவது அறிந்து ‘பிறந்த பின் வா’ என்று கூறி அவ்விடத்திலிருந்து அனுப்பி விட்டனன்; இதனை,

“ அழல் அவிர் வயங்கு இழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகா, நின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்து பின் வா என,
என் இவண் ஒழித்த அன்பிலாள! ” (புறம்-221:1-4)

என்ற பாடல்வரிகளால் காணலாம்.

புதல்வன் பிறந்த பின் வா எனக் கூறித் தடுத்த சோழனின் அருளுள்ளத்தையும் புதல்வன் பிறந்த பின் சோழன் உயிர் நீத்த இடத்திலே தனக்கும் இடம் தேடிக்கொண்டு வடக்கிருந்து உயிர் விட்ட பொத்தியாரின் உயிர் நட்பாகும். இதனை,

“ நிலை பெறு நடுகல் ஆகியக்கண்ணும்
இடம் கொடுத்து அளிப்ப, மன்ற - உடம்போடு
இன் உயிர் விரும்பும் கிழமைத்
தொல் நட்புடையார் தம்முழைச் செலினே ”(புறம் - 223: 3-6)

என்ற பாடல் வரிகளால் தெளியலாம்.

## உண்மை அன்பை உணர்ந்த நெஞ்சம் :

பொன்னுக்காகவும், பொருளுக்காகவும் நட்பு பாராட்டாமல் உண்மையான அன்பின் அடிப்படையில் உள்ளம் உணர்ந்த நட்பினைப் புலவர்கள் வேந்தர்பால் வைத்திருந்தனர் என்பதைக் கோப்பெருஞ்சோழனின் வரலாறு உணர்த்துகிறது. சோழனுடன் பழகிய புலவர் அனைவரும் அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்த நிகழ்ச்சி உருக்கமானது.

வளமுடன் வளவன் வாழ்ந்த நாளில் அவனைக்காணாது. அவன் புகழை மட்டும் கேட்டு உணர்ச்சி நட்பு பூண்டிருந்த புலவர் பிசிராந்தையாரும் உயிர் துறந்தமை உலக வியப்புள் ஒன்றாகவே காண முடிகின்றது. பழந்தமிழகத்தில் வேந்தருக்கும் புலவருக்கும் இருந்த உறவின் உயர்ந்த நிலையினைக் கோப்பெருஞ்சோழனின் வரலாறு உணர்த்துகிறது.

“ அரசருக்கும் புலவருக்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு, தமிழ்நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று. அதனை வடநாட்டு அரசரிடம் காணுதல் அரிது ” (தமிழர்சால்பு, சு. வித்தியானந்தம் பக் : 57-58) எனக் கூறும் கூற்று ஈண்டுக் கருதத்தகும்.

பரிசிலர் என்ற நிலையிலிருந்து மாறி, அறம் உரைக்கும் அறிஞர் என்ற நிலைக்கு உயர்ந்து, பழி கண்டவிடத்துக் கடிந்துரைக்கும் அளவிற்கு உரிமை பெற்று வேந்தன் வேறு, தான் வேறு என்ற வேறுபாட்டைக் கடந்து ஒத்த உணர்வால் வேந்தனுடன் உயிர்துறக்கும் அளவிற்கு உள்ளம் ஒத்த உணர்ச்சியினைப் பழந்தமிழ்ப் புலவர்கள் பெற்றிருந்தனர். வேந்தருக்கும் புலவருக்கும் உள்ள உறவின் முறையான வளர்ச்சியினைப் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து தெளிவாக அறியமுடிகிறது.

## முடிவுரை !

பண்டைய சமூகத்தில் மன்னர் ஆட்சி நிலவிய போது மக்களிடையே போராட்டமும் மன்னர்களிடையே போரும் நிலைக் கொண்டிருந்தது. இவற்றிற்கிடையே புலவர்களிடையேயும்வேந்தர் புலவர்களிடையும் ஆழமான அன்பின் வெளிப்பாடான நட்பு மலர்ந்திருந்தது என்பதை சங்க இலக்கிய பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

அனுப்புநர்

**முனைவர் அ.ஜான் பீட்டர்.**
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
திரு.வி.க. அரசு கலைக்கல்லூரி,
திருவாரூர்–**610 003**.

பெறுநர்

**தேர்வு நெறியாளர்,**
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி–**620 024**.

அய்யா,

பொருள்: நெறியாளர் சான்றிதழ் வழங்குதல் – தொடர்பாக.

வணக்கம். **"சங்க இலக்கியத்தில் பரிசில்கள்"** என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக திரு.வி.க. அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் என் மேற்பார்வையில் **வா.சரவணன்** மேற்கொண்ட ஆய்வின் பயனாக இவ்வாய்வுச் கருக்கம் உருவானது என்றும், இவ்வாய்வேடு வேறு எந்த முனைவர் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

திரு.வா.சரவணன் என் மேற்பார்வையில் **சங்க இலக்கியத்தில்** பரிசில்கள் என்னும் தலைப்பில் முனைவர் பட்டம் (தமிழ்) ஆய்வினை மேற்கொண்டு வரும் காலத்தில் வெளியிட்ட இவரது படைப்புகள் பின்வருமாறு:

1. ஞானசம்பந்தம் மாத இதழில் **பண்டைய வேந்தர் புலவரிடையே** மலர்ந்த **நட்புரிமை** என்ற தலைப்பில் கட்டுரை வெளியிடப்பட்டது.
2. சிவஒளி மாத இதழில் **மூவேந்தரும் தமிழும்** என்ற தலைப்பிலான கட்டுரை வெளியிடப்பட்டது. இதற்கான சான்றுகள் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

18/04/12

தங்கள் உண்மையுள்ள,

இடம் : திருவாரூர்,

நாள் : 18.04.2012.

**முனைவர் அ. ஜான் பீட்டர்**
**இணைப் பேராசிரியர் தமிழ்த்துறை**
**திரு.வி.க. அரசு கலைக் கல்லூரி,**
**திருவாரூர் - 610 003**